உ

கணபதி துணை.

# பாலபாடம்

## நான்காம் புத்தகம்.




யாழ்ப்பாணத்து நல்லூர்

ஆறுமுகநாவலரவர்கள்

செய்தது.





இது

சிதம்பர சைவப்பிரகாச வித்தியாசாலைத்

தருமபரிபாலகர்

Mudlr. G. சுப்பிரமணியம் J. P. அவர்களால்

சென்னபட்டணம்

வித்தியாநுபாலனயந்திரசாலையில்

அச்சிற்பதிப்பிக்கப்பட்டது.

உகூ-ம் பதிப்பு.

விகிர்தி௵ கார்த்திகைமீ.

1950.

அரசினரால் அங்கீகரிக்கப்பட்ட.

# சூசிபத்திரம்.

## முதற்பிரிவு.



## இரண்டாம்பிரிவு.

## ௨௧-ம் பதிப்பு

## வசனபாட முகவுரை.

இப்பாலபாடத்திலே நாவலரவர்களால் ஆதியிலே எழுதப்பட்ட வசனபாடங்கள் முப்பத்தொன்பதாகும். இப்புத்தகத்தை இரண்டு வகுப்புகளுக்கு உபயோகப் படுத்துதற்குப் பாடங்களைச் சரிபங்காய்ப் பிரிக்க விரும்பு வோர் அவ்வண்ணம் செய்ய வசதிப்படுத்தும் நோக்கமாகச் சிதம்பரம் ஸ்ரீ நாவலர் வித்தியாசாலைத் தருமபரிபாலகர் கேள்விக்கிசைந்து, ஆறுமுகநாவலரவர்கள் பிரபந்தத்திரட்டு என்னும் புத்தகத்தினின்றும் "தமிழ்ப்புலமை" என்னும் பாடத்தைக் கடைசியில் சேர்த்து நாற்பது பாடங்களாக்கி யுள்ளோம்.

இன்னும், மாணவருக்குப் பாடங்களை இலகுவாய் விளக்கும் நோக்கம் கருதிக் குறித்த தருமபரிபாலகர் விரும்பியவண்ணம் பாடங்களில் காணப்படும் அரும்பதத் தொடர்களுக்கும் வடசொற்களுக்கும் விளக்கமும், மேற் கோட்செய்யுட்களுக்கு உரையும், இலக்கணவினாக்கள் அப்பியாசவினாக்களும் ஒவ்வொரு பாடத்திற்கும் எழுதிச் சேர்த்திருக்கின்றோம்.

தமிழ் வித்தியாசாலைகளிலும் ஆங்கில வித்தியாசாலை களிலும் 6-ம், 7-ம் வகுப்பு முதலிய உயர்தர வகுப்புகளுக்கு இப்புத்தகம் வாசகபாடப் புத்தகமாக உபயோகப்படுத்தற்கு குறித்த திருத்தங்கள் போதிய பயனளிக்குமென்று நம்பு கின்றோம்.

**வித்துவான். ந. சுப்பைய பிள்ளை.**

நாவலர் வித்தியாசாலை
யாழ்ப்பாணம்.
விகிர்தி ௵ கார்த்திகை ௨௰



# செய்யுட்பாக முகவுரை.

இப்பாலபாடம் இப்போது ஆறும்வகுப்பிலும், ஏழாம் வகுப்பிலும் படிப்பிக்கப்படுகின்றது. அவ்வகுப்புக்களுக்குச் சற்றே கடினமான செய்யுட்பாடம் வேண்டுமென்று ஆசிரியர்கள் கேட்டுக்கொண்டமையால், கந்தபுராணம், பெரியபுராணம், பாரதம் ஆகிய இலக்கியங்களிலிருந்து எடுக்கப்பட்ட பகுதிகள் செய்யுட்பாகமாகச் சேர்க்கப்பட்டன.

செய்யுள்களுக்கு புலோலிவாசி. ஸ்ரீ. மா. சுப்பிரமணியம், B. A. அவர்களாலியற்றப்பட்ட பதவுரையுடன் உகூ-ம் பதிப்பு வெளியிடப்பட்டது.

கந்தவனம்.
விகிர்தி௵
ஆனி ௧0௨

க. சிவபாதசுந்தரம்.

## செய்யுட்பாக பிழை திருத்தம.

| பக்கம். | வரி. | பிழை. | திருத்தம். |
|---|---|---|---|
| ௧௫ | ௨௪ | பாலையானது | பாலையினது |
| ௪௨ | ௨௧ | - அவ்விடத்து | - மதித்து அவ்விடத்து |



கணபதி துணை.

# பாலபாடம்.

## நான்காம்புத்தகம்.

### முதற்பிரிவு.

### கடவுள்.

உலகமாவது சித்தும் அசித்துமென இருவகைப்படும் பிரபஞ்சமாம். சித்து அறிவுடைய பொருள். அசித்து அறிவில்லாத பொருள். அசித்தென்றாலும், சடமென்றாலும் பொருந்தும். உலகம் தோன்றி நின்று அழியுங் காரியமாய் உள்ளது. ஆதலினால், உலகத்தைப் படைத்தல் காத்தல் அழித்தல் என்னும் மூன்று தொழில்களையுஞ் செய்தற்கு ஒரு கடவுள் இருக்கின்றார் என்பது, நன்றாக நிச்சயிக்கப்படும்.

கடவுள் என்றும் உள்ளவர், அவருக்குப் பிறப்பும் இறப்பும் இல்லை. அவர் எங்கும் நிறைந்தவர், அவர் இல்லாத இடம் இல்லை.

அவர் எல்லாம் அறிபவர், அவர் அறியாதது
ஒன்றுமில்லை. அவருடைய அறிவு இயற்கை
யறிவு, ஒருவர் அறிவிக்க அறிபவரல்லர். அவர்
எல்லாம் வல்லவர், அவரால் இயலாத கருமம்
ஒன்றுமில்லை. அவர் அளவிடப்படாத ஆனந்த
முடையவர், தம்முடைய அநுபவத்தின்
பொருட்டு வேறொன்றையும் வேண்டுபவரல்லர்.
அவர் தம்வயமுடையவர், பிறர்வயமுடையவ
ரல்லர். அவர் உயர்வும் ஒப்பும் இல்லாதவர்;
அவரின் மேலானவரும் இல்லை; அவருக்குச்
சமமானவரும் இல்லை. அவர் சகல லோகத்
துக்கும் ஒரே நாயகர். அவர் செய்யுந் தொழில்
களுள் ஒன்றாயினும் அவருடைய பிரயோசனத்
தைக் குறித்ததன்று. எல்லாம் ஆன்மாக்களு
டைய பிரயோசனத்தைக் குறித்தவைகள். அவர்
ஆன்மாக்களிடத்திலுள்ள கைம்மாறில்லாத
அளவுகடந்த திருவருளே திருமேனியாக
உடையவர்.

கடவுள் ஆன்மாக்கள்பொருட்டு வேதம்
ஆகமம் என்னும் முதனூல்களை அருளிச்செய்
தார். அவைகளிலே விதிக்கப்பட்டவைக ளெல்
லாம் புண்ணியங்கள். விலக்கப்பட்டவைகளெல்
லாம் பாவங்கள். அவர் புண்ணியத்தைச் செய்த
ஆன்மாக்களுக்கு இன்பத்தையும், பாவத்தைச்
செய்த ஆன்மாக்களுக்குத் துன்பத்தையும்
கொடுப்பார். துன்பத்தைக் கொடுத்தலினால்
அவரை வன்கண்ணரென்று கொள்ளலாகாது.
தீமை செய்த பிள்ளைகளைப் பிதா மாதாக்கள்
தண்டித்தலும், சில வியாதியாளர்களுக்கு வைத்



தியர்கள் சத்திரமிட்டறுத்தலும், இருப்புக்
கோல் காய்ச்சிச் சுடுதலும், கண்ணிற்படலத்தை
உரித்தலும் அவர்களிடத்துள்ள இரக்கத்தினா
லன்றி வன்கண்மையினாலல்லவே. அதுபோலக்
கடவுள் பாவஞ்செய்த ஆன்மாக்களைத் தண்டித்
தல், அப்பாவத்தை ஒழித்து மேலே பாவஞ்
செய்யாவண்ணம் தடுத்து அவர்களை நல்வழி
யிலே செலுத்தி உய்வித்தற்கு ஏதுவாதலினால்,
அதுவும் கருணையேயாம்.

---

## ஆன்மா.

ஆன்மாக்கள் நித்தியமாய், வியாபகமாய்,
சேதனமாய், பாசத்தடையுடையவைகளாய்,
சரீரந்தோறும் வெவ்வேறாய், வினைகளைச் செய்து
வினைப்பயன்களை அநுபவிப்பவைகளாய், சிற்
றறிவும் சிறுதொழிலும் உடையவைகளாய்,
தங்களுக்கு ஒரு தலைவனை உடையவைகளாய்
இருக்கும்.

ஆன்மாக்கள் நல்வினை தீவினையென்னும்
இருவினைக்கு ஈடாக, நால்வகைத் தோற்றத்தை
யும், எழுவகைப் பிறப்பையும், எண்பத்துநான்கு
நூறாயிர யோனி பேதத்தையும் உடையவைக
ளாய்ப் பிறந்திறந்துழலும்.

நால்வகைத் தோற்றங்களாவன: அண்ட
சம், சுவேதசம், உற்பிச்சம், சராயுசம் என்பவைக
ளாம். அவைகளுள், அண்டசம் முட்டையிற்

ரேன்றுவன. சுவேதசம் வேர்வையிற்ரேன்று வன. உற்பிச்சம் வித்து வேர் கிழங்கு முதலியவை களை மேற்பிளந்து தோன்றுவன. சராயுசம் கருப்பையிற்ரேன்றுவன. எழுவகைப் பிறப்புக்க ளாவன; தேவர், மனிதர், விலங்கு, பறவை, ஊர்வன, நீர்வாழ்வன, தாவரம் என்பவைக ளாம். தாவரங்களென்றது மரம் செடி முதலிய வைகளை.

கருப்பையிலே தேவர்களும், மனிதர்களும், நாற்கால் விலங்குகளும் பிறக்கும். முட்டையிலே பறவைகளும், ஊர்வனவும், நீர்வாழ்வனவும் பிறக்கும். வேர்வையிலே கிருமி கீடம் பேன் முதலிய சில ஊர்வனவும், விட்டில் முதலிய சில பறவைகளும் பிறக்கும். வித்தினும் வேர் கொம்பு கொடி கிழங்குகளினும் தாவரங்கள் பிறக்கும். தாவரமென்றாலும், நிலையியற்பொரு ளென்றாலும், அசரமென்றாலும் பொருந்தும். தாவரமல்லாத மற்றை ஆறுவகைகளும் சங்க மங்களாம். சங்கமமென்றாலும், இயங்கியற் பொருளென்றாலும், சரமென்றாலும் பொருந் தும்.

தேவர்கள் பதினொருநூறாயிரயோனிபேதம். மனிதர்கள் ஒன்பது நூறாயிரயோனிபேதம். நாற்கால்விலங்கு பத்துநூறாயிரயோனிபேதம். பறவை பத்துநூறாயிரயோனிபேதம். நீர் வாழ் வன பத்துநூறாயிரயோனிபேதம். ஊர்வன பதி னைந்து நூறாயிர யோனிபேதம். தாவரம் பத் தொன்பது நூறாயிரயோனிபேதம். ஆகத் தொகை எண்பத்து நான்கு நூறாயிர யோனி பேதம்.



ஆன்மாக்கள், தாம் எடுத்த சரீரத்துக்கு ஏற்ப, மெய், நாக்கு, மூக்கு, கண், செவி என்னும் ஐம்பொறிகளினாலும், சித்தத்தினாலும் அறியும் அறிவின் வகையினாலே, ஓரறிவுயிர், ஈரறிவுயிர், மூவறிவுயிர், நாலறிவுயிர், ஐயறிவுயிர், ஆறறி வுயிர் என அறுவகைப்படும். புல்லும் மரமும் முதலியவை பரிசத்தை அறியும் ஓரறிவுயிர்கள். இப்பியும் சங்கும் முதலியவை அதனோடு இரதத் தையும் அறியும் ஈரறிவுயிர்கள். கறையானும் எறும்பும் முதலியவை அவ்விரண்டினோடு கந்தத்தையும் அறியும் மூவறிவுயிர்கள். தும்பி யும் வண்டும் முதலியவை அம்மூன்றினோடு உரு வத்தையும் அறியும் நாலறிவுயிர்கள். விலங்கும் பறவையும் அந்நான்கனோடு சத்தத்தையும் அறியும் ஐயறிவுயிர்கள். தேவர்களும் மனிதர் களும் அவ்வைந்தனோடு சித்தத்தாலறியும் அறிவுமுடைய ஆறறிவுயிர்கள்.

ஆன்மாக்கள், தாம் பூமியிலே செய்த நல் வினை தீவினை யென்னும் இருவகை வினைக ளுள்ளும், நல்வினையின் பயனாகிய இன்பத்தைச் சுவர்க்கத்திலும், தீவினையின் பயனாகிய துன் பத்தை நரகத்திலும், அநுபவிக்கும். அப்படி அநுபவித்துத் தொலைத்துத் தொலையாமல் எஞ்சிநின்ற இருவினைகளினாலே திரும்பவும் பூமியில் வந்து பிறந்து, அவைகளின் பயன்க ளாகிய இன்பதுன்பமிரண்டையும் அநுபவிக்

கும். இப்படியே, நமக்கு ஒருநிலைமை இல்லாத கொள்ளிவட்டமும் காற்றாடியும் போல, கடவுளுடைய ஆஞ்ஞையினாலே, கருமத்துக்கு ஈடாக, மேலே உள்ள சுவர்க்கத்திலும், கீழே உள்ள நரகத்திலும், நடுவே உள்ள பூமியிலும் சுழன்று திரியும்.

இப்படிப் பிறந்திறந்துழலும் ஆன்மாக்கள் தாவரயோனி முதலிய கீழுள்ள யோனிகளெல்லாவற்றினும் பிறந்து பிறந்திளைத்து, புண்ணியமேலீட்டினாலே மனிதப்பிறப்பிலே வருதல் மிகுந்த அருமையாம். அவ்வருமை, ஆராயுங்காலத்து, கடலைக் கையினாலே நீந்திக் கரையேறுதல் போலும். இத்தன்மையையுடைய மனிதப்பிறப்பை எடுப்பினும், வேதாகமங்கள் வழங்காத மிலேச்சதேசத்தை விட்டு அவை வழங்கும் புண்ணியதேசத்திலே பிறப்பது மிகுந்தபுண்ணியம்.

இவ்வருமையாகிய மனிதப்பிறப்பை உண்டாக்கியது - உயிர்க்குயிராகிய கடவுளை மனம் வாக்குக் காயங்களினாலே வழிபட்டு அழிவில்லாத முத்தியின்பத்தைப்பெற்று உய்யும் பொருட்டேயாம். சரீரம் கருப்பையில் அழியினும் அழியினும். பத்துமாதத்திற் பிறந்தவுடனே அழியினும் அழியும், பிறந்தபின் சிலகாலம் வளர்ந்து அழியினும் அழியும். மூன்று வயசுக்குமேற் பதினாறு வயசுவரையிலுள்ள பாலாவத்தையின் அழியினும் அழியும். அதற்கு மேல் நாற்பது வயசுவரையிலுள்ள தருணாவத்



முளைகளை நெருப்பிலே காய்ச்சி, தலையிலும், கண்களிலும், செவிகளிலும், நாசிகளிலும், வாயிலும், மார்பிலும் அறைந்து, உடம்புமுழுதும் தாமிர முதலிய உலோகங்களை உருக்கிய நீரைச் சொரிவார்கள். மயிர்க்காறோறும் அக்கினியிற் காய்ச்சிய ஊசிகளை அழுத்துவார்கள். அவயவங்கடோறும் இருப்பாப்புக்களை மாட்டுவார்கள். பின்பு நெய்நிறைந்த செப்புக்கடாரத்திலே விழுத்திக் காய்ச்சுவார்கள். ஈசுரத்துரோகிகள் அந்தச் செப்புக்கடார நெய்யிலே சந்திரசூரியர் உள்ளவரையும் குப்புறக்கிடந்து வருந்துவார்கள்.

இப்படி நரகத்துன்பத்தை அனுபவித்த பின், பூமியிலே மலத்திற்கிருமி முதலியவைகளாய்ப் பிறந்திறந்து உழன்று, பின்பு மனிதப்பிறப்பை எடுத்து, வலி, குட்டம், கயம், நீரிழிவு, பெருவியாதி, மூலவியாதி முதலிய மிகக் கொடிய நோய்களினாலும், பசியினாலும் வருந்துவார்கள்.

---

## அருள்.

அருளாவது இவை தொடர்புடையவை என்றும் இவை தொடர்பில்லாதவை என்றும் நோக்காது இயல்பாகவே எல்லாவுயிர்கண்மேலுஞ் செல்வதாகிய கருணை. அருளெனினும், கருணையெனினும், இரக்கமெனினும் பொருந்தும். உலக வின்பத்துக்குக் காரணம் பொருளே

யாதல்போலத் தருமத்துக்குக் காரணம் அருளேயாம். அருளென்னும் குணம் யாவரிடத்திருக்குமோ, அவரிடத்தே பழி பாவங்களெல்லாம் சிறிதும் அணுகாது நீங்கிவிடும். வாய்மையாகிய தகழியிலே பொறுமையாகிய திரியை இட்டு, தவமாகிய நெய்யை நிறையப் பெய்து, அருளாகிய விளக்கை ஏற்றினால், அஞ்ஞானமாகிய பேரிருள் ஓட்டெடுப்ப, பதியாகிய மெய்ப்பொருள் வெளிப்படும். மரணபரியந்தம் தன்னுயிரை வருந்திப் பாதுகாத்தல்போலப் பிறவுயிர்களையும் வருந்திப் பாதுகாப்பவன் யாவன், அவனே உயிர்களுக்கெல்லாம் இதஞ்செய்பவனாகி, தான் எந்நாளும் இன்பமே வடிவமாக இருப்பன்.

உயிர்களெல்லாம் கடவுளுக்குத் திருமேனிகள்; அவ்வுயிர்களுக்கு நிலைக்களமாகிய உடம்புகளெல்லாம் கடவுளுக்கு ஆலயங்கள். ஆதலால் கடவுளிடத்து மெய்யன்புடையவர்கள் அக்கடவுளோடு உயிர்களுக்கு உளதாகிய தொடர்பு பற்றி அவ்வுயிர்களிடத்தும் அன்புடையவர்களேயாவர்கள். உயிர்களிடத்து அன்பில்லாத பொழுது கடவுளிடத்து அன்புடையவர் போல் ஒழுகுதல் நாடகமாத்திரையே யன்றி உண்மையன்றென்பது தெள்ளிதிற்றுணியப்படும். பிறவுயிர்களிடத்து இரக்கமில்லாதவர் தம்முயிருக்கு உறுதி செய்து கொள்ளமாட்டார். ஆதலால், அவர் பிறவுயிர்களிடத்துமாத்திரமா தம்முயிரிடத்தும் இரக்கமில்லாதவரே யாவர். அவர் தமக்குத்தாமே வஞ்சகர்.

---



# கொலை.

கொலையாவது உயிர்களை அவைகளுக்கு இடமாகிய உடம்பினின்றும் பிரியச்செய்தல். உயிர்களுக்கு இதஞ்செய்தலே புண்ணியமும் அகிதஞ்செய்தலே பாவமுமாம். கொலையைப் பார்க்கினும் அகிதம் வேறில்லாமையால், கொலையே பாவங்களெல்லாவற்றிற்குந் தலையாயுள்ளது. கொல்லாமையைப் பார்க்கினும் இதம் வேறில்லாமையால், கொல்லாமையே புண்ணியங்களெல்லாவற்றிற்குந் தலையாயுள்ளது.

கொலையில்லாத ஞானமே ஞானம், கொலையில்லாத தவமே தவம், கொலையில்லாத தருமமே தருமம், கொலையில்லாத செல்வமே செல்வம். ஆதலினாலே, சோர்வினாலும் கொலைப்பாவம் சிறிதும் விளையாவண்ணம் எப்பொழுதும் அருளோடுகூடிச் சாவதனமாக இருத்தல்வேண்டும். கொலை செய்ய ஏவினவரும் கொலை செய்யக்கண்டும் அதனைத் தடுக்காதவரும், ஒருவன் செய்த கொலையை மறைத்து அவனை இராசாவுடைய தண்டத்துக்குத் தப்புவித்தவரும், கொலை செய்தவரோடு பழகினவரும் கொலைப்பாவிகளே யாவர்.

கொலைப்பாவிகள் எண்ணில்லாத காலம் நரகத்துன்பத்தை அனுபவித்து, பின்பு பூமியிலே பிறந்து, ஈளை, காசம், குட்டம், பெரு

வியாதி, நெருப்புச்சுரம், கைப்பிளவை முதலிய நோய்களினால் வருந்தி உழல்வார்கள்.

பிறவுயிரைக் கொல்லுதல் போலத் தன்னுயிரைக் கொல்லுதலும் பெருங்கொடும்பாவம். கடவுளை வழிபட்டு உயிர்க்கு உறுதி செய்துகொள்ளும்பொருட்டுக் கிடைத்த கருவி சரீரம். ஆதலால் எவ்வகைப்பட்ட வியாதிகளினாலே வருத்தமுற்றாலும், சரீரத்தைப் பாதுகாத்துக்கொண்டே இருத்தல்வேண்டும். கோபத்தினாலும் வியாதி முதலிய பீடைகளினாலும் தம்முயிரை வலிய விட்டவர் கும்பிபாகம் முதலிய நரகங்களிலே அறுபதினாயிரம் வருடங்கிடந்து வருந்தி, பின்பு சக்கிரவாளகிரிக்குப் புறத்தில் உள்ள இருட் பூமியிலே எண்ணில்லாத காலங் கிடப்பார்.

---

## புலாலுண்ணல்.

புலாலுண்ணலாவது உயிரின் நீங்கிய ஊனைப் புசித்தல். புலால் கொலையினாலே கிடைத்தலால், புலாலுண்ணல் கொலைப் பாவத்தின் காரியமாகும். புலாலுண்டவன் பின்னும் கொலைவாயிலாகப் புலாலை விரும்புதலால், புலாலுண்ணல் கொலைப்பாவத்துக்குக் காரணமுமாகும். இப்படியே எல்லா விதத்தாலும் புலாலுண்ணல் கொலையோடு தொடர்புடையதாதலால், புலாலுண்பவர் உயிர்களிடத்து அருளில்லாதவரே. ஆதலால் புலாலைப் புசித்துக்கொண்டு உயிர்களிடத்து அருளுடையோம் என்பது நடிப்புமாத்திரமாமன்றி உண்மையாகாது. உலகத்திலே புலாலுண்பவர் இல்லையாயின், புலாலை விற்றற்பொருட்டு உயிர்க்கொலை செய்பவரும் இல்லை. ஆதலாற் கொலைப்பாவத்தைப் பார்க்கிலும் புலாலுண்ணலே பெருங்கொடும் பாவம்.



தம்மிலும் உயர்ந்த சாதியார் தாழ்ந்த சாதியாரிடத்தே சலபானம் பண்ணினும், அவரும் தாழ்ந்த சாதியார் என்று அவர் வீட்டிலே சலபானமும் பண்ணாத மனிதர்கள், புலையர்களுடைய மலத்தையும் புசிக்கின்ற பன்றி கோழி முதலியவைகளைப் புசிக்கின்றார்களே! அவர்கள் புலையரினும் தாழ்வாகிய புலையராவார்களன்றி உயர்ந்த சாதியாராகார்கள். அயல் வீட்டிலே பிணங்கிடந்தாலும் போசனஞ் செய்தற்கு மனம் பொருந்தாத மனிதர்கள் மிருகம் பக்ஷி முதலியவைகளுடைய பிணத்தைக் கலத்திலே படைத்துக்கொண்டு புசிக்கின்றார்களே! அன்னம் பானீயம் முதலியவைகளிலே மயிர் ஈ எறும்பு முதலியவைகளுள் ஒன்று விழுந்திருக்கக் கண்டாலும், மிக அருவருத்து உண்ட சோற்றையும் கக்கும் மனிதர்கள் மற்ச மாமிசங்களைப் புசிக்கின்றார்களே! ஊறுகாய் முதலியவைகளிலே ஒரு புழுவைக் கண்டால் அருவருத்துச் சரீரங் குலைந்து அவைகளை எடுத்தெறிந்துவிடும் மனிதர்கள் புழுத்த மாமிசங்களை விரும்பிப் புசிக்கின்றார்களே! தங்களெதிரே ஆடுகள் சிந்தத்

தெறித்த கோழை தங்களுடம்பிலே படுதலும், பொறாது மனங்குலையும் மனிதர்கள் அவ்வாடுகளின் மாமிசத்தை மூளையோடு மனமகிழ்ந்து புசிக்கின்றார்களே! பூமியில் உள்ள சுடுகாடுகள் மனிதர்களுடைய பிணத்துக்குச் சுடுகாடுகளாயிருக்கும்; மிருகங்களுக்கும் பக்ஷிகளுக்கும் மற்சங்களுக்கும் சுடுகாடுகள் சீவகருணையில்லாத மனிதர்களுடைய வயிறுகளேயாம்.

கொலைசெய்தவரும், புலாலை விற்றவரும், புலாலை விலைக்கு வாங்கினவரும், புலாலைப் புசித்தவரும், புலால் புசியாதவரைப் புசிப்பித்தவரும், சிலர் சொல்லுக்கு அஞ்சிப் புலாலைப் புசித்தவருமாகிய எல்லாரும் பாவிகளேயாவர். அப்பாவிகளை நரகத்திலே இயமதூதர்கள் அக்கினி சுவாலிக்கும் முள்ளிலவ மரத்திலே குப்புறப்போட்டு, இருப்புமுளைகளை நெருங்கக் கடாவிய தண்டத்தினாலே முதுகில் அடிப்பார்கள்; அதுவன்றிக் குடாரியினாலே கொத்தி, ஈர்வாளினால் அறுப்பார்கள்; இரும்பு முதலிய உலோகங்களை உருக்கி, அவர்கள் வாயிலே வார்ப்பார்கள். புலாலுண்ணாமையினாலே தங்கள் உடம்பு மெலிகின்றது என்று உண்ணப்புகும் மனிதர்கள், புலாலுண்டு தங்கள் உடம்பைப் பருக்கச்செய்து நரகத்திலே நெடுங்காலம் துன்பம் அநுபவித்தல் நல்லதோ, புலாலுண்ணாமல் தங்களுடம்பை வாட்டி நித்தியமாகிய முத்தியின்பத்தைப் பெற்று வாழுதல் நல்லதோ. இதனைச் சிந்திக்கக்கடவர்கள்.



மேற்கூறிய பாவிகள் எண்ணில்லாத காலம் நரகத் துன்பத்தை அநுபவித்து, பின்பு பூமியிலே பன்றி முதலிய இழிந்த பிறப்புக்களாய்ப் பிறந்திறந்து உழன்று, மனிதப் பிறப்பை எடுத்து, பெருவியாதி, கருங்குட்டம், வெண்குட்டம், நீரிழிவு, கண்டமாலை முதலிய வியாதிகளினாலே வருந்துவர்கள்.

கங்கை முதலிய புண்ணிய தீர்த்தங்களெல்லாவற்றினும் ஸ்நானஞ்செய்தானாயினும், கடவுளைப் பூசித்தானாயினும், எண்ணில்கோடி தானஞ் செய்தானாயினும், ஞானசாத்திரங்களை ஓதி உணர்ந்தானாயினும், புலாலைத் தள்ளாது புசித்தவன் நரகத்தை அடைவன்.

அசரமாகிய மரமுதலியவைகளைக் கொன்று புசித்தல் பாவமாயினும், அவைகள் எழுவகைத் தோற்றத்துள்ளும் தாழ்ந்த பருவத்தை உடையவையாதலால் அக்கொலையாலாகும் பாவம் சிறிதாகும். அசரபதார்த்தங்களை நாடோறும் கடவுள் அக்கினி குரு அதிதிகள் என்னும் நால்வகையோருக்கும் முன்னூட்டிப் பின்னுண்பானாயின் அவ்வசரக்கொலையால் வரும் பாவமும், உழுதல், அலகிடல், மெழுகுதல், நெருப்பு மூட்டல், தண்ணீர் கவர்தல், நெற்குத்துதல் முதலிய தொழில்களால் வரும் பாவமும் அவ்வக்காலத்திலே நீங்கிவிடும்.

---

## கள்ளுண்ணல்.

கள்ளு, அவின், கஞ்சா, முதலியன அறிவை மயக்கும் பொருள்கள். அவைகளை உண்பவர் அறிவையும் நல்லொழுக்கத்தையும் இழந்து, தீயொழுக்கத்தையே அடைவர். கள்ளுண்பவர் தமக்குச் சிநேகர்செய்த நன்மையையும் தாங்கற்ற நூற்பொருளையுஞ் சிந்தியார். தம்மைத் தொடர்ந்த பழிபாவங்களையும் அவைகளாலே தமக்கு விளைந்த துன்பத்தையும் அறியார். இவ்வியல்புடையவர் தம்முயிர்க்கு உறுதி செய்துகொள்வது எப்படி! கள்ளுண்பவருக்குக் களிப்பும் மயக்கமுமே இயற்கையாதலால், அவரிடத்துச் சண்டையும், கொலையும், களவும், பொய்யும், வியபிசாரமுமே குடிபுகும்.

கள்ளுண்டவருக்கு மனமொழி மெய்கள் தம் வசப்படாமையால் நாணம் அழியும்; அழியவே, அறிவுடையோர் அவரைக் காணுதற்கும் அஞ்சித் தூரத்தே நீங்குவர். யாது செய்யினும் பொறுக்கும் மாதாவும் கள்ளுண்டு களித்தலைப் பொறுக்க மாட்டாள்; ஆனபின், குற்றம் யாதும் பொறாத அறிவுடையோரெதிரே கள்ளுண்டு களித்தல் யாதாய் முடியும்? விலைப்பொருளைக் கொடுத்துக் கள்ளினாலே அறிவு மயக்கத்தைக் கொள்ளுவோர் எவ்வளவு அறிவீனர்! கள்ளுண்டவர் அநேகர் தஞ்செல்வமெல்லாம் இழந்து, வறியவராகித் தெருத்தோறும் அலைந்து திரிந்து, பின்னரும் பொருள் யாசித்துக் கள்ளுண்டு மயங்கி விழுந்து கிடந்து, பலராலும் பழிக்கப்படுதலைக் கண்டுங் கண்டும், கள்ளுண்டல் எவ்வளவோரறியாமை!



கள்ளுண்டவரும், கள்ளுண்ணாதவரைக் கள்ளுண்பித்தவரும், கள் விற்றவரும், கள்ளுண்டவரோடு பழகினவரும், அளவில்லாத காலம் நரகத்திலேகிடந்து வருந்துவர்கள். இயமதூதர்கள் அவர்களுடைய நாக்கை வாளினாலே சேதித்து, உலோகங்கள் உருக்கிய நீரை அவர்கள் வாயிலே வார்ப்பார்கள். அவர்கள் நரகத்துன்பத்தை அநுபவித்தபின்பு பூமியிலே மலப்புழுவாய்ப் பிறந்து மலத்தை உண்டு இறந்து, மனிதராய்ப் பிறந்து, சொத்தைப்பற்குத்து நோயினாலும், பைத்தியத்தினாலும், வயிற்றுநோயினாலும் வருந்துவர்கள்.

அநேகர் வாமமதத்திலே புகுந்து, பிறரையும் தம் வசப்படுத்திக் கெடுத்து, அவரோடு கள்ளுண்டு களிக்கின்றார்கள். வாமமதத்தை அநுட்டித்தவர்கள் பிசாசபதத்தை அடைவர்கள் என்பது உண்மைநூற்றுணிவு.

## களவு.

களவாவது பிறருடைமையாய் இருக்கும் பொருளை அவரை வஞ்சித்துக் கொள்ளுதல். களவினால் வரும்பொருள் வளர்வதுபோலத் தோன்றி, தான் போம்பொழுது பாவத்தையும்

பழியையுமே நிறுத்திவிட்டு, முன்னுள்ள பொருளையும் தருமத்தையும் உடன்கொண்டு போய்விடும். களவுசெய்பவர், அப்பொழுது, 'யாவராயினும் காண்பாரோ அடிப்பாரோ கை கால்களைக் குறைப்பாரோ' என்றும், பின்பும் 'இராசா அறிந்து தண்டிப்பானோ' என்றும், பயந்து பயந்து மனந்திடுக்குறுதலினால், எந்நாளும் மனத்துயரமே உடையவராவர். அறியாமையினாலே களவு அப்பொழுது இனிதுபோலத் தோன்றினும், பின்பு தொலையாத துயரத்தையே கொடுக்கும்.

களவு செய்தவர் இம்மையிலே அரசனாலே தண்டிக்கப்பட்டு எல்லாராலும் இகழப்படுவர். அவரை அவர் பகைவர் மாத்திரமா உறவினரும் சிறிதாயினும் நம்பாது அவமதிப்பர். களவினாலாகிய இகழ்ச்சியைப் பார்க்கினும் மிக்க இகழ்ச்சி பிறிதில்லை. ஒருகாற் களவுசெய்தவரென்று அறியப்பட்டவர் சென்ற சென்ற இடங்களிலெல்லாம், பிறராலே செய்யப்பட்ட களவும் அவராற் செய்யப்பட்டதாகவே நினைக்கப்படும்.

களவென்னும் பெருங்குற்றத்தைச் சிறுபருவத்திற்றானே கடிதல்வேண்டும். கடியாதொழிந்தால், அது மேன்மேலும் வளர்ந்து பெருந்துன்பக்கடலில் வீழ்த்திவிடும். ஆதலாற் சிறுவர்களிடத்தே அற்பக்களவு காணப்படினும், உடனே தாய் தந்தையர்கள் அவர்களைத் தண்டித்துத் திருத்தல் வேண்டும். அப்படிச் செய்யாதுவிட்டால், அப்பிள்ளைகளுக்குப் பின் விளையும் பெருந்துன்பத்துக்குத் தாய் தந்தையர்களே காரணராவார்கள்.



களவு செய்தவரையும், களவுக்கு உபாயஞ் சொன்னவரையும், களவு செய்தவருக்கு இடங் கொடுத்தவரையும், நரகத்திலே இயமதூதர்கள், அவயவங்களெங்கும் இருப்புமுளைகளை அறைந்து, வருத்துவார்கள். பாசத்தினாலே அவயவங்களெல்லாவற்றையுங் கூட்டிக்கட்டி, அக்கினி நரகத்திலே, குப்புறப்போடுவார்கள். அவர்கள் நெடுங்காலம் நரகத்துன்பம் அனுபவித்தபின்பு, பூமியிலே பிறந்து, குட்டம், காசம், வாதம், மூலரோகம் முதலிய நோய்களினாலே வருந்துவார்கள்.

---

## வியபிசாரம்.

வியபிசாரமாவது காமமயக்கத்தினாலே தன்மனையாளல்லாத மற்றைப் பெண்களை விரும்புதல். மற்றைப் பெண்கள் என்பது கன்னியரையும் பிறன் மனைவியரையும் பொதுப் பெண்களையும். பிறன் மனையாளை விரும்புவோரிடத்தே தருமமும் புகழும் சிநேகமும் பெருமையுமாகிய நான்கும் அடையாவாம். அவரிடத்தே குடிபுகுவன பாவமும் பழியும் பகையும் அச்சமுமாகிய நான்குமாம். ஒருவன் தன் மனையாளைப் பிறன்விரும்புதலை அறியும்பொழுது தன்மனம் படுந்துயரத்தைச் சிந்திப்பானாயின்,

தான் பிறன் மனையாளை விரும்புவானா! விரும்பானே.

பிறன் மனையாளை விரும்பாத ஆண்மையே பேராண்மை. பிறராலே 'இவன் பரதாரசகோதரன்' எனப்படுதலே பெரும்புகழ். இப்பேராண்மையையும் பெரும்புகழையும் உடைய மகாவீரனை அவன் பகைவரும் அவன் இருக்குந் திக்கு நோக்கி வணங்குவர். இவ்வாண்மையும் புகழும் இல்லாதவரை, அவருக்குக் கீழ்ப்பட்டோராகிய மனைவியர் பிள்ளைகள் வேலைக்காரர் முதலாயினோரும், நன்குமதியார். அச்சத்தாலும் பொருளாசையாலும், அவரெதிரே நன்குமதிப்பார்போல நடிப்பினும், தமது உள்ளத்தினும் அவரெதிரல்லாத புறத்தினும் அவமதிப்பே செய்வர். வியபிசாரஞ்செய்வோர் தாமாத்திரமன்றித் தங்கீழுள்ளாரும் வியபிசாரஞ் செய்து கெடுதற்குக் காரணராவர். ஒழுக்கமுடையார் வாய்ச்சொல் அவரின் மூத்தோரிடத்துஞ் செல்லும். ஒழுக்கமில்லாதார் வாய்ச்சொல் அவரின் இளையோரிடத்துஞ் செல்லாது. ஆதலினால், ஒழுக்கமில்லாதவர் பிறரைத் திருத்துதற்கும் வல்லராகார்.

தூர்த்தர்களோடு பழகுதலும், பெண்களுடைய கீதத்தைக் கேட்டலும், பெண்களுடைய நடனத்தைப் பார்த்தலும், சிற்றின்பப் பாடல்களைப் படித்தல் கேட்டல்களும், பார்க்கத் தகாத படங்களையும் பிரதிமைகளையும் பார்த்தலும், பொதுப் பெண்களுடைய தெருவுக்குப் போதலும், பெண்கள் கூட்டத்திலே தனித்துப்போதலும், பெண்களோடு சூது சதுரங்க முதலியவை ஆடுதலும் வியபிசாரத்துக்கு ஏதுக்களாம். உயிர்க்கு உறுதி பயக்கும் நூல்களைப் படித்தல் படிப்பித்தல் கேட்டல்களிலும், கடவுளுக்குத் திருத்தொண்டுகள் செய்தலிலும், தருமவழியாகப் பொருள் சம்பாதித்தலிலுமே காலத்தைப் போக்கல்வேண்டும். வயசினாலும் நல்லறிவினாலும் நல்லொழுக்கத்தினாலும் முதிர்ந்த பெரியோரோடு கூடல்வேண்டும். சிறிது நேரமாயினும் சோம்பலாய் இருக்கலாகாது. சோம்பேறிக்கு அச்சோம்பல் வழியாகவே, தீச்சிந்தை நுழையும். அத்தீச்சிந்தை வியபிசாரத்துக்கு ஏதுவாகும்.



வியபிசாரமே கொலைகளுக்கெல்லாம் காரணம். வியபிசாரமே களவுகளுக்கெல்லாம் காரணம். வியபிசாரமே அறிவை மயக்கும் பொருள்களாகிய கள்ளு, அவின், கஞ்சா முதலியவைகளை உண்டற்குக்காரணம். வியபிசாரமே பொய் சொல்லற்குக் காரணம். வியபிசாரமே சண்டைக்குக் காரணம். வியபிசாரமே குடும்ப கலகத்திற்குக் காரணம். வியபிசாரமே வியாதிகளெல்லாவற்றிற்குங் காரணம். வியபிசாரமே திரவிய நாசத்திற்குக் காரணம். வியபிசாரமே சந்ததி நாசத்திற்குக் காரணம்.

பிறன்மனையாளைக் கூடினவர் நரகத்திலே அக்கினிமயமாகிய இருப்புப்பாவையைத் தழுவி வருந்துவர். இயமதூதர்கள் அவரை இருப்புக்

குடத்தினுள்ளே புகுத்தி அதன் வாயை அடைத்து, அக்கினிமேல் வைத்து எரிப்பார்கள். அவர் சரீரத்தை உரலிலிட்டு இடிப்பார்கள்; அக்கினிமயமாகிய சிலையிலே சிதறும்படி அறைவர்கள். இருட்கிணற்றிலே விழுத்துவர்கள்; அங்கே இரத்தவெள்ளம் பெருகும்படி கிருமிகள் அவருடம்பைக் குடையும். பின்னும் அவர் அக்கினி நரகத்திலே வீழ்த்தப்பட்டு 'என்செய்தோம் என்செய்தோம்' என்று நினைந்து நினைந்து அழுங்குவர்.

பிறன் மனையாளை இச்சித்துத் தீண்டினவரை, நரகத்திலே இயமதூதர்கள் அக்கினியிற் காய்ச்சிய ஊசிகளினாலே குத்துவர்கள்; அவருடம்பிலே தாமிரத்தை உருக்கி வார்ப்பார்கள்; அவரை மற்றை நரகங்களினும் விழுத்தி வருத்துவர்கள். பிறன் மனையாளை இச்சித்துப் பார்த்தவருக்குக் கண்களிலே அக்கினியிற் காய்ச்சிய ஊசிகளினாலே குத்தி, முற்கூறிய மற்றைத் துயரங்களையுஞ் செய்வர்கள்.

வியபிசாரஞ்செய்தவர் பிரமேகம், கிரந்தி, பகந்தரம், கல்லடைப்பு, நீரிழிவு முதலிய வியாதிகளினால் வருந்துவர். பிறன்மனையாளை இச்சித்துப் பார்த்தவர் நேத்திர ரோகங்களினால் வருந்துவர்.



# பொய்.

பொய்யாவது உள்ளதை இல்லதாகவும் இல்லதை உள்ளதாகவும் சொல்லல். பொய் மிக இழிவுள்ளது. ஒரு பொய் சொன்னவன், அதைத் தாபிக்கப்புகின், ஒன்பது பொய் சொல்லல்வேண்டும். 'நான் சொன்ன பொய்யைப் பொறுத்துக்கொள்ளல் வேண்டும்' என்பானாயின், ஒன்றுடனொழியும். பொய்சொல்லத் துணிகின்றவன் களவு முதலிய தீமைகளைச் செய்தற்கு அஞ்சான். பொய்சொல்லலாகிய பாவமொன்றை ஒழிப்பின், அதுவே வழியாக மற்றைப் பாவங்களெல்லாம் தாமே ஒழிந்துவிடும். பொய்யன் மெய்யைச்சொல்லுகிற பொழுதும் பிறர் அதனை நம்பார். ஆதலால், விளையாட்டுக்காயினும் பொய் சொல்லலாகாது.

மெய் சொல்லுகிறவனுக்கு அதனால் ஒரு கேடுவந்ததாயினும், அவனுள்ளத்திலே மகிழ்ச்சி உண்டாகும். அவன் பகைவர்களும் அவனை நன்கு மதிப்பர்கள். பிறராலே நன்கு மதிக்கப்படவும் தன்காரியம் சித்திபெறவும் விரும்புகின்றவன் எப்பொழுதும் தன்மனத்தோடு பொருந்த மெய்யே பேசல் வேண்டும். ஒருவன் தன்மனம் அறிந்ததொன்றைப் பிறர் அறிந்திலர் என்று பொய் சொல்லாதிருக்கக்கடவன். பொய் சொன்னானாயின், அவன் மனமே அப்பாவத்துக்குச் சாக்ஷியாய் நின்று அவனைச் சுடும்.

உண்மை சொல்பவன் இம்மையிற் பொருளையும் மறுமையிற் புண்ணிய லோகத்தையும் அடைவன். சத்தியமே மேலாகிய தானமும் தவமும் தருமமுமாம். எவனுடைய புத்தி சத்தியத்தில் நிற்குமோ அவன் இகத்திலே தெய்வத் தன்மையை அடைவன். சத்தியத்தின் மிக்க தருமமும் அசத்தியத்தின் மிக்க பாவமும் இல்லை.

பொய்ச்சான்று சொன்னவரும், பொய்வழக்குப் பேசினவரும், வழக்கிலே நடுவுநிலைமையின் வழுவித் தீர்ப்புச் செய்தவரும், எழுபிறப்பில் ஈட்டிய எல்லாப் புண்ணியங்களையும் கெடுத்தவராவர். பிரமவதையும் சிசுவதையும் தந்தைவதையும் செய்தவராவர். மிகக் கொடிய ரௌரவ முதலிய நரகங்களை அடைவர். அவரை இயமதூதர்கள் வாயிலே அடித்து, அவருடைய நாக்கையும் அறுத்து, பல துக்கங்களையும் உறுவிப்பார்கள். பின்னும் அவர் ஊர்ப்பன்றி, கழுதை, நாய், நீர்க்காக்கை, புழு என்னும் பிறப்புக்களிற் பிறந்து, பின்பு மனிதப்பிறப்பிலே பிறவிக்குருடரும், செவிடரும், குட்டநோயினரும், வாய்ப்புண்ணினரும், ஊமைகளுமாய்ப் பிறப்பர். மிக்க பசிதாகமுடையவராகித் தம் பகைவர் வீட்டிலே தம் மனைவியரோடும் பிச்சையிரந்து உழல்வர்.



# அழுக்காறு.

அழுக்காறாவது பிறருடைய கல்வி செல்வ முதலியவற்றைக்கண்டு பொறாமை யடைதல். பொறாமையுடையவன் தன்னுடைய துன்பத்துக்குத் தானே காரணனாகின்றான். அக்கினியினாலே பதர் எரிவதுபோலப் பொறாமையினாலே மனம் எரிகின்றது. ஆதலினாலே பொறாமையுடையவனுக்குக் கேடு விளைத்தற்கு வேறு பகைவர் வேண்டாம். அப்பொறாமை ஒன்றே போதும்.

பொறாமை யுடையவனுடைய மனசிலே ஒருபோதும் இன்பமும் அமைவும் உண்டாகா. பொறாமையாகிய துர்க்குணம் மனிதனுக்கு இயல்பாகும். அது தோன்றும்பொழுதே அறிவாகிய கருவியினால் அதைக்களைந்துவிடல் வேண்டும்; களைந்துவிட்டால் அவன் மனசிலே துன்பம் நீங்க இன்பம் விளையும். பொறாமையுடையவனிடத்தே சீதேவி நீங்க, மூதேவி குடிபுகுவள். பொறாமையானது தன்னையுடையவனுக்கு இம்மையிலே செல்வத்தையும் புகழையும்கெடுத்து, எல்லாப் பாவங்களையும் விளைவித்து, அவனை மறுமையிலே நரகத்திற் செலுத்திவிடும்.

# கோபம்.

கோபத்தைச் செய்தற்குக் காரணம் ஒருவனிடத்து உண்டாயினும், அதனைச் செய்யலாகாது. கோபந்தோன்றுமாயின் மனக்கலக்கம் உண்டாகும். அது உண்டாகவே அறிவு கெடும். அதுகெடவே, உயிர்கண்மேல் அருள் இல்லையாகும். அது இல்லையாகவே, அவைகளுக்குத் துன்பஞ்செய்தல் நேரிடும். ஆகையால், கோபத்தை எந்நாளும் அடக்கல் வேண்டும்.

யாவனொருவன் தம்மை இழிவாகச் சொல்லியபொழுது தம்மிடத்து அவ்விழிவு உள்ளதாயின், "இது நமக்கு உள்ளதே" என்று தம்மைத் தாமே நொந்து திருத்தமடைதல் வேண்டும். அப்படிச் செய்யாது கோபித்தாராயின், தமது கோபம் அநீதி என்பது தமக்கே தெரியுமாதலால், தம்மனமே தம்மைக் கண்டிக்கும். தம்மிடத்து அவ்விழிவு இல்லையாயின், 'இவன் சொல்லியது பொய்; பொய்யோ நிலைபெறாது' என்று அதனைப் பொறுத்தல்வேண்டும். நாயானது தன்வாயினாற் கடித்தபொழுது மீட்டுத் தம் வாயினால் அதனைக் கடிப்பவர் இல்லை. கீழ்மக்கள் தம்வாயினால் வைதபொழுது மேன்மக்கள் மீட்டுத் தம்வாயினால் அவரை வைவரோ, வையார். தமக்குப் பிறர் தீங்குசெய்தபொழுது தாம் அதனைப் பொறுப்பதேயன்றி 'இவர் நமக்குச் செய்த தீங்கினாலே எரிவாய் நரகத்தில்



வீழ்வாரே' என்று இரங்குவதும் அறிவுடையவருக்குக் கடன். தன்னை வெட்டிய குடாரத்துக்கும் தனது நறுமணத்தையேகொடுக்குஞ் சந்தனமரம்போலத் தமக்குத் தீமைசெய்தவருக்கும் நன்மையே செய்வது அறிவுடையோருக்கு அழகு.

வலியார்மேற் செய்யுங்கோபம் அவருக்குத் தீங்குசெய்யாமையால், அதனைத் தடுத்தவிடத்துந் தருமமில்லை. மெலியார்மேற் செய்யுங் கோபம் அவருக்குத் தீங்கு செய்தலால், அதனைத் தடுப்பதே தருமம். வலியார்மேற்செய்யுங்கோபம் இம்மையில் அவராலே துன்பமொன்றையே அடைவித்தலாலும், மெலியார் மேற்செய்யுங்கோபம் இம்மையிலே பழியையும் மறுமையிலே பாவத்தையும் அடைவித்தலாலும், இதுவே மிகக்கொடியதாகும். ஆகவே, கோபம் ஓரிடத்தும் ஆகாதென்பதே துணிவு.

ஒருவனுக்கு அருளினால் உண்டாகும் முகமலர்ச்சியையும் மனமகிழ்ச்சியையுங் கொன்றுகொண்டெழுகின்ற கோபத்தின் மேற்பட்ட பகை வேறில்லை. ஆதலினாலே, தன்னைத் தான் துன்பமடையாமற் காக்க நினைத்தானாயின், தன் மனத்திலே கோபம் வாராமற் காக்கக் கடவன். காவானாயின், அக்கோபம் அவனையே இருமையினும் கடுந்துன்பங்களை அடைவிக்கும்.

# சூது.

சூதாவது கவறு சதுரங்க முதலியவற்றால் ஆடுதல். சூது தருமமும் பொருளும் இன்பமுமாகிய மூன்றுக்கும் இடையூறாய் உள்ளது. சூதாட்டத்தில் வென்று பெறும்பொருள், இரையென்று மீன் விழுங்கிய தூண்டின் முள்ளைப் போலச் சூதாடுவோர் நீங்காமைக்கு இட்ட ஒரு தளையாகி மற்றைத்தொழில்களை யெல்லாங் கெடுத்துப் பின்பு துன்பத்தைத் தரும். ஆதலால், ஒருவன் தனக்குச் சூதாடுதலில் வெல்ல வல்லமை யிருந்தாலும் சூதாடலாகாது. சூதாடுவோர் ஒன்றை முன்பெற்று இன்னும் வெல்லுவோமென்னும் கருத்தால் ஆடி நூற்றை இழப்பர். அவர் பொருள் அப்படியே அழிந்து வருதலால், அப்பொருளினால் அடையத்தக்க தருமமும் இன்பமும் அவருக்கு இல்லை. செல்வத்தைக் கெடுத்து வறுமையைக் கொடுத்தற்றொழிலிலே தவறாமையால் சூதை மூதேவியென்பர் அறிவுடையோர்.

சூதாடலை விரும்பினவர் வெல்லினும் தோற்பினும் ஒருபொழுதும் அச்சூதைவிடாது தங்காலத்தையும் கருத்தையும் அதிலேதானே போக்குவர். ஆதலால் ஒளியும் கல்வியும் செல்வமும் போசனமும் உடையுமாகிய ஐந்தும் அவரை அடையாவாம். சூதானது தோல்வியினாலே பொருளைக் கெடுத்துக் களவை விளைவித்து, வெற்றி பெறுதற்காகப் பொய்யை மேற்கொள்ளப்பண்ணிப் பகையை விளைவித்தலால், அருளைக் கெடுத்து, இம்மை மறுமை இரண்டினுந் துன்பத்தையே அடைவிக்கும். ஆதலினாலே, சூதானது தரித்திரத்துக்குத் தூது, பொய்க்குச் சகோதரம், களவு சண்டை முதலிய கீழ்த்தொழில்களுக்கு மாதா, சத்தியத்துக்குச் சத்துரு என்பர் அறிவுடையோர்.



# செய்ந்நன்றியறிதல்.

செய்ந்நன்றியறிதலாவது தனக்குப் பிறர் செய்த நன்மையை மறவாமை. காரணமின்றிச் செய்த உதவிக்கும், காலத்தினாற்செய்த உதவிக்கும், பயன் றூக்காதுசெய்த உதவிக்கும், பூமியையும் சுவர்க்கத்தையும் கைம்மாறாகக் கொடுத்தாலும் அவைக்கு இவை ஈடாகா. காரணமின்றிச்செய்த உதவியாவது தனக்கு முன்னே ஒருதவி செய்யாதிருக்க ஒருவன் பிறனுக்குச் செய்த உதவி. காலத்தினாற் செய்த உதவியாவது ஒருவனுக்கு இறுதி வந்தபொழுது ஒருவன் செய்த உதவி. பயன் றூக்காது செய்த உதவியாவது இவருக்கு இதுசெய்தால் இன்ன பிரயோசனங்கிடைக்கும் என்று ஆராயாது செய்த உதவி.

இந்த மூன்றுமல்லாத உதவியும், அறிவொழுக்க முடையவருக்குச் செய்தபோது,

அவருடைய தகுதி எவ்வளவு பெரியதோ அவ்வளவு பெரியதாகும். ஆதலினால், அறிவொழுக்கமுடையவர், தமக்குப் பிறர் செய்த உதவி தினையளவினதாயினும், அதனை அவ்வளவினதாக நினையாது பனையளவினதாக நினைப்பர்.

யாவராயினும் தமக்கு நன்றிசெய்தவருடைய சிநேகத்தை விடலாகாது. ஒருவன்றானே முன்பு ஒருநன்றிசெய்து பின்பு தீமை செய்வானாயின், அவன் செய்த அவ்விரண்டினுள்ளும் தீமையை அப்பொழுதே மறந்து, நன்றியை எப்பொழுதும் மறவாமற்கொள்வதே மிக மேலாகிய தருமம். தமக்கு ஒரு நன்றி செய்தவர் பின்பு நூறு தீமைகளைச் செய்தாராயினும், மேலோர், அந்நன்றி ஒன்றையுமே உள்ளத்தில் வைத்துத் தீமை நூற்றையும் பொறுப்பர். தமக்கு நூறு நன்றிசெய்தவர் பின்பு ஒரு தீமைசெய்தாராயினும், கீழோர் அந்நன்றி நூற்றையும் மறந்துவிட்டு, அத்தீமை யொன்றின்பொருட்டு அவர்மேல் வைரஞ் சாதிப்பர்.

மகாபாதகங்களைச் செய்தவருக்கும் பிராயச்சித்தத்தினால் உய்வு உண்டாகும்; ஒருவர் செய்த நன்றியை மறந்தவருக்கு உய்வுஇல்லை. செய்ந்நன்றி மறந்தவர் அளவில்லாத காலம் நரகங்களிலே கிடந்து துன்புற்று, பின்பு பூமியிலே பிறந்து, வாதரோகம், சூலை, மசூரிகை, குட்டம் முதலிய வியாதிகளினால் வருந்துவர்.

---



# பெரியோரைப்பேணல்.

பிதா, மாதா, பாட்டன், பாட்டி, மாமன், மாமி, தமையன், தமக்கை, தமையன்மனைவி, உபாத்தியாயர், குரு முதலாகிய பெரியோர்களை அச்சத்தோடும் அன்போடும் வழிபடல் வேண்டும். அவர்கள் குற்றஞ் செய்தார்களாயினும், அதனைச் சிறிதும் பாராட்டாது பொறுத்துக் கொள்ளல் வேண்டும். இராசா யாது குற்றஞ் செய்யினும் அவனோடு சிறிதும் எதிர்க்காது அவனுக்கு அடங்கி நடத்தல்போலவே பிதா மாதா முதலாயினோருக்கும் அடங்கி நடத்தல் வேண்டும்.

பிதா மாதா முதலாயினோர் முட்டுப்படா வண்ணம் இயன்றமட்டும் அன்னவஸ்திர முதலியவை கொடுத்து, அவர்களை எந்நாளும் பாதுகாத்தல் வேண்டும். அவர்களுக்கு வியாதி வந்தால், உடனே மனம்பதைபதைத்துச் சிறந்த வைத்தியரைக்கொண்டு மருந்து செய்வித்தல் வேண்டும். அவர்கள் ஏவிய ஏவல்களைக் கூச்சமின்றிச் செய்தல்வேண்டும். பிள்ளைகள் தங்கள் கல்விக்கும் நல்லொழுக்கத்துக்கும் இடையூறாகப் பிதா மாதாக்கள் சொல்லுஞ் சொற்களை மறுத்தல் பாவமாகாது. "தந்தைதாய் பேண்" என்னும் நீதிமொழியைச் சிந்தியாது, மூடர்கள் அநேகர் தங்களை மிக வருந்திப் பெற்றுவளர்த்த பிதா மாதாக்கள் பசித்திருப்பத் தாமும் தம்முடைய பெண்டிர் பிள்ளைகளும் வயிறு நிறையப்

புசித்துக்கொண்டு, தம்மையும் பொருளாக எண்ணி, தமக்கு வரும் பழிபாவங்கட்கு அஞ்சாது திரிகின்றார்கள். பிதா மாதாக்களையும் சுற்றத்தாரையும் வஞ்சித்து அன்னியர்களுக்கு உதவி செய்கின்றார்கள்.

பிதா மாதா முதலாயினோர் இறக்கும் பொழுது அவரைப் பிரியாது உடனிருத்தல் வேண்டும். அவர்மனம் கலங்கும்படி அவரெதிரே அழலாகாது. அவர்மனம் கடவுளுடைய திருவடியிலே அழுந்தும்படி, அறிவொழுக்கமுடையவரைக்கொண்டு அருட்பாக்களை ஓதுவிக்கவும் நல்லறிவைப் போதிப்பிக்கவும் வேண்டும். அவர் இறந்தபின்பு உத்தரக்கிரியைகளை உலோபமின்றித் தம்பொருளளவுக்கு ஏற்ப விதிப்படி சிரத்தையோடு செய்துமுடித்தல்வேண்டும். வருடந்தோறும் அவர் இறந்த திதியிலும் புரட்டாதிமாசத்திலும் சிராத்தம் தவறாமற் செய்தல்வேண்டும். அநேகர் தங்கள் பிதாமாதாக்கள் சீவந்தர்களாய் இருக்கும்பொழுது அவர்களை அன்னவஸ்திர முதலியவை கொடுத்துப்பேணாது அவர்களுக்குத் துன்பத்தையே விளைவித்து, அவர்கள் இறந்தபின்பு உத்தரக்கிரியைகளை உலகத்தார் மெச்சும் பொருட்டு வெகு திரவியஞ் செலவிட்டுச் செய்கின்றார்கள். ஐயையோ இது எவ்வளவோரறியாமை! இச் செய்கையால் வரும்பயன் யாது? உத்தரக்கிரியையைச் சிறிதுபொருள் செலவிட்டும் செய்யலாம், அதற்குச் சிரத்தையே முக்கியம். பிதாமாதாக்கள் சீவந்தர்களாய் இருக்கும் பொழுது அவர்களை முட்டுப்படாவண்ணம் அன்னவஸ்திரங் கொடுத்துப் பாதுகாத்தலிலே இயன்றமட்டும் பொருள் செலவிடுதலே ஆவசியகம்.



பிதா மாதா முதலிய பெரியோர்களைக் கடுஞ்சொற் சொல்லிக் கோபித்து உறுக்கிய பாவிகள், நரகத்திலே தங்கள் முகத்தை அட்டைகள் குடைந்து இரத்தங்குடிக்க, அதனாற் பதைத்து விழுவார்கள். பின்பு அவர்கள் சரீர நடுங்கி அலறும்படி இயமதூதர்கள் சுடுகின்ற கார நீரையும் உருக்கியதாமிர நீரையும் அவர்கண் மீது வார்ப்பார்கள். அப்பெரியோர்களுக்கு ஏவல் செய்யக் கூசின பாவிகளுடைய முகத்தை இயமதூதர்கள் குடாரியினாலே கொத்துவார்கள்; அப்பெரியோர்களைக் கோபத்தினாலே கண்சிவந்து ஏறிட்டுப்பார்த்தவர்களுடைய கண்களிலே இயம தூதர்கள் அக்கினியிற்காய்ச்சிய ஊசிகளை உறுத்திக் கார நீரை வார்ப்பார்கள்.

பிதா மாதா முதலாயினோரை நிந்தித்தவர்களும், அவர்களைப் பேணாது தள்ளிவிட்டவர்களும், பைத்தியத்தினாலும், நாக்குப்புற்றினாலும், நேத்திர ரோகத்தினாலும், காலிற் புண்ணினாலும், சர்வாங்க வாயுரோகத்தினாலும், பெருவியாதியினாலும் வருந்துவார்கள். பிதா மாதா முதலாயினோரைப் பேணாதவர்களும், உபாத்தியாயருக்குக் கொடுக்கற்பாலதாகிய வேதனத்தைக் கொடாதவர்களும், குருவுக்குக் கொடுக்கற்பாலதாகிய காணிக்கையைக் கொடா

தவர்களும் தரித்திரர்களாய்ப் பசியினால் வருந்திப் பெண்டிரும் பிள்ளைகளும் கதற இரக்கத்தகாத இடங்களெல்லாம் பிச்சையிரந்து உழல்வார்கள்.

பிதாமாதாக்களுக்குச் சிராத்தஞ் செய்யாதவர்களும், புரட்டாதிமாசத்திலே மகாளய சிராத்தஞ் செய்யாதவர்களும், சிரோரோகங்களினால் வருந்துவர்கள். புலவர்களாயினும், ஞானிகளாயினும், மூடர்களாயினும், பெண்களாயினும், பிரமசாரிகளாயினும், இறந்ததினச் சிராத்தத்தைச் செய்யாதொழிந்தால், கோடி சனனத்திலே சண்டாளராவார்கள்.

எவன் தன்னுடைய தாய் தந்தை முதலிய பந்துக்கள் வறுமையினால் வருந்தும்போது இம்மையிலே புகழின்பொருட்டு அன்னியர்களுக்குத் தானங்கொடுக்கின்றானோ, அந்தத் தானம் தருமமன்று. அது முன்பு தேன்போல இனிதாயிருப்பினும், பின்பு விஷம்போலத் துன்பப்படுத்தும். பார்க்கும்போது புகழுக்கு ஏதுப்போலத் தோன்றினும், பின்பு நரகத் துன்பத்துக்கே ஏதுவாகும் என்பது கருத்து. எவன் தான் ஆவசியகமாகப் பாதுகாக்கவேண்டிய மனைவி பிள்ளை முதலாயினோரைத் துன்பப்படுத்திப் பரலோகத்தின் பொருட்டுத் தானஞ் செய்கின்றானோ, அந்தத் தானமும் அவனுக்கு இம்மையிலும் மறுமையிலும் துன்பத்தையே விளைவிக்கும்.



## பசுக்காத்தல்.

பசுக்கள் நந்தை, பத்திரை, சுரபி, சுசீலை, சுமனை என ஐந்துவகைப்படும். அவைகளுள், நந்தை கபில நிறமும், பத்திரை கருநிறமும், சுரபி வெண்ணிறமும், சுசீலை புகைநிறமும், சுமனை செந்நிறமும் உடையனவாம். பசுக்கள் இம்மை மறுமை இரண்டினும் பயனைத்தரும். பசுக்களுக்குச் சாலையை விதிப்படி செய்வித்து, ஆற்றுமண் ஓடைமண் புற்றுமண் வில்வத்தடிமண் அரசடிமண் என்பவைகளால் நிலம் படுத்தல் வேண்டும். முதிர்கன்று இளங்கன்று நோயுற்றகன்று என்னும் இவைகளுக்கு இடங்கள் வெவ்வேறாக அமைத்தல் வேண்டும். நாடோறும் கோசல கோமயங்களைப் புறத்தே நீக்கிச் சுத்திசெய்தல்வேண்டும். கொசுகு வராமல் தூபம் இடல்வேண்டும். தீபங்கள் ஏற்றல் வேண்டும்.

பசுக்களை இயக்குமிடத்து, சிறிதும் வருத்தஞ்செய்யாமல், இரக்கத்தோடும் பலாசங்கோலினாலே மெல்ல ஓங்கி, போ போ என்று இயக்கல் வேண்டும். இரக்கமின்றிக் கோபித்து அதட்டி அடிப்பவர் நரகத்தில் வீழ்வர்; பசுக்களை, சாலையினுள்ளே சுவத்தி என்னுஞ் சொல்லைச் சொல்லி, மெல்ல மெல்லப் புகுவித்து, சிரத்தையோடும் புல்லைக் கொடுத்தல் வேண்டும். நோயுற்ற பசுக்களுக்கு வேறிடம் அமைத்து, மருந்து கொடுத்துப் பேணல்வேண்டும். அட்டமிதோறும்

பசுக்களை நீராட்டி, பூச்சூட்டி, அன்னமும் சலமும் ஊட்டி, தூபதீபங்காட்டி, வணங்கல் வேண்டும். பசுக்களை வேனிற் காலத்திலே சோலைகளிலும், மழைக்காலத்திலே மலைச்சாரல் வனங்களிலும், பனிக்காலத்திலே வெய்யில் மிகுந்த வெளிகளிலும், இடர் உருவண்ணம் மேய்த்தல் வேண்டும்.

பசுக்களை வலஞ்செய்து வணங்கித் துதித்துப் புல்லுக் கொடுத்தலும், ஆவுரிஞ்சுகல் நாட்டுதலும், கடவுளுக்கும் ஆசாரியருக்கும் பசுவைத் தானஞ்செய்தலும், குற்றமற்ற இலக்கணங்களையுடைய இடபத்தைக் கடவுள் சந்நிதிக்குத் தானஞ்செய்தலும், தேவாலயத் திருப்பணியின்பொருட்டுச் சகடத்திற்கு எருதுகொடுத்தலும், இளைத்த பசுவைக்கண்டு இரங்கித் தாம் வாங்கி வளர்த்தலும் பெரும்புண்ணியங்களாம்.

பசுக்கள் தரும் பால் தயிர் நெய் கோசலம் கோமயம் என்னும் பஞ்சகவ்வியங்களையுங் கடவுளுக்கு அபிஷேகம் பண்ணுவித்தல்வேண்டும். பாலை இரண்டுமாசம் செல்லும்வரையும் கன்று பருகும்படி விட்டு, பின் கறந்து கடவுளுக்கு அபிஷேகம் பண்ணுவித்தல்வேண்டும். கன்று பாலுண்டு முலையை விடுத்தபோது, சலத்தினாலே முலையைக்கழுவிக் கறத்தல்வேண்டும். ஆசை மிகுதியினாலே கன்றுக்குப் பால்விடாது கறந்தவன் நரகத்தில் வீழ்ந்து நெடுங்காலம் வருந்தி, பின்பு பூமியிலே பிறந்து கடும்பசியினாலே வீடுகடோறும் இரப்பன். கபிலையின்



பாலைக் கடவுளுக்கே கொடுக்க; அதனைத் தாம் பருகில் நரகத்து வீழ்வர். புலையர்கள் பசுக்களின் சாலையிலே புகுந்தார்களாயின், எண்ணில்லாத காலம் எரிவாய் நரகத்து வீழ்ந்து வருந்துவார்கள்; அவர்களுக்குப் பரிகாரமில்லை. பசுக்களை இடர் நீங்கக் காக்காதவர்களும், மலட்டுப் பசுவின்மேலேனும் இடபத்தின்மேலேனும் பாரம் ஏற்றினவர்களும், இடபத்தில் ஏறினவர்களும் நரகத்தில் வீழ்வார்கள்.

## தானம்.

தானமாவது தருமநெறியால் வந்த பொருளைச் சற்பாத்திரமாயுள்ளவருக்குச் சிரத்தையோடு கொடுத்தல். பாவத்தால் வந்த பிறன் பொருளைக் கொடுத்தால், தருமம் பொருளுடையார்மேலும், பாவம் பொருள்கொடுத்தார் மேலும் நிற்கும். சிரத்தையெனினும், பிரீதியெனினும் ஆதரவெனினும் பத்தியெனினும், விசுவாசமெனினும், அன்பெனினும், பற்றெனினும் பொருந்தும்.

பதிசாத்திரத்தை ஓதி அதன்பொருளை அறிந்து பாவங்களை விலக்கித் தருமங்களை அநுட்டித்துக் கடவுளை மெய்யன்போடு வழிபடுவோரும், தம்மைப்போலப் பிறரும் பரகதி பெற்று உய்யவேண்டுமென்று விரும்பி அவ

ருக்கு நன்னெறியைப் போதிப்பவருமாயுள்ளவர் சற்பாத்திரமாவர். இந்த நன்னெறியிலே ஒழுகும்பொருட்டுச் சிரத்தையோடு முயற்சி செய்பவரும் சற்பாத்திரமாவர். குருடர், முடவர், சிறு குழந்தைகள், தரித்திரர், வியாதியாளர், வயோதிகர் என்னும் இவர்களும் தானபாத்திரமாவர். அன்னதான முதலியவற்றை இவர்களுக்குப் பண்ணலே தருமம்.

பதிசாத்திரத்தில் விருப்பமில்லாதோனும், நித்திய கருமத்தை விடுத்தோனும், ஈசுர நிந்தை செய்வோனும், குருநிந்தை செய்வோனும், தேவத்திரவியங் கவர்வோனும், கொலைசெய்வோனும், புலாலுண்போனும், கள்ளுண்போனும், கள்வனும், பிறருடைய மனைவியைப் புணர்வோனும், வேசையைப் புணர்வோனும், தாசியைப்புணர்வோனும், கன்னியரைக் கெடுப்போனும், இருதுமதியைத் தீண்டுவோனும், பொய்ச் சான்று சொல்வோனும், பொய்வழக்குப் பேசுவோனும், பிதா மாதாவைப் பேணுதோனும், சூதாடுவோனும், மித்திரத்துரோகியும், கோள் மூட்டுவோனும், செய்ந்நன்றி மறப்போனும், புறங்கூறுவோனும், சாத்திரத்தில்லாத பொருளைப் புதிதாகப் பாடிய பாட்டினால் ஒப்பிப்போனும், வட்டிக்குக் கொடுப்போனும், தேவபூசையை விற்றுத் திரவியந் தேடுவோனும், பொன்னாசை மிகுந்து தருமவேடங்களைக் காட்டிச்சனங்களை வஞ்சிப்போனும், பொருள் வைத்துக்கொண்டு தரித்திரன்போல நடித்து யாசிப்போனும், தொழில் செய்து சீவனம்பண்



ணச் சத்தியிருந்தும் அது செய்யாத சோம்பேறியும், தீச்சிந்தை நிறைந்து பொய்யுபசாரஞ் செய்து பொய்மரியாதை காட்டித் திரிவோனுமாகிய இவர்களெல்லாம் அசற்பாத்திரமாவார்கள். இவர்களுக்குத் தானம் பண்ணல் பாவம். இவர்களுக்கு இன்சொற் சொல்லலும் பாவம். கற்றோணியாலே கடலைக் கடக்க முயன்றவன் அத்தோணியோடும் அழிவதுபோலக் கல்வியறிவொழுக்கம் இல்லாதபாவிக்குத் தானங் கொடுத்தவன் அப்பாவியோடும் அழிந்து போவான்.

சற்பாத்திரமாயுள்ள பெரியோர் தம்வீட்டுக்கு வந்த பொழுது, விரைவினோடு எழுந்திருத்தல், ஓடிச் செல்லல், கண்டவுடனே 'தேவரீர் எழுந்தருளப்பெற்றேனே' என்று கொண்டாடி எதிர்கொள்ளல், ஆசனத்திருத்துதல், பாதத்தை அருச்சித்தல், 'இன்றன்றோ அடியேனுடையகிருகம் சுத்தியாயிற்று' என்று அவரை உயர்த்திப் புகழ்தல், அவர் போம்போது பதினறடியிற் குறையாமற் சென்று வழிவிடுதல் என்னும் இவை யேழும் தானஞ்செய்வோர் செயல்களாம். இவையில்லாமற் செய்யும் தானம் பயன்படாது.

---

பாத்திரங்களெல்லாவற்றினும் பரம சற்பாத்திரம் மெய்ஞ்ஞானி. அவர் ஒருவரிடத்தே சென்று 'எனக்கு இந்தப் பொருளைத்தா' என்று கேளார். அவர் எழுந்தருளியிருக்கும் இடத்திற்சென்று 'அடியேனுடைய பொருளை ஏற்றருளல் வேண்டும்' என்று பிரார்த்தித்துக்

கொடுத்தல் வேண்டும். ஞானியானவர் தமக்குத் தாதாத் தரும்பொருளை அதன்மேல் ஆசையினால் வாங்கார்; தாதாப் பரகதியடைதல் வேண்டும் என்று நினைந்து வாங்குவார். அஞ்ஞானியானவன் தாதாக் கதியடைதல் வேண்டும் என்று விரும்பாது, தன்னுடைய போசனார்த்தத்தையே விரும்பித் தானத்தை ஏற்பன்; ஆதலால்,- அஞ்ஞானி கையிலே கொடுத்தவர் தம் பொருளை அவமே போட்டு இழந்தவராவர்.

தன்னிடத்து வந்த யாசகருக்குக் கொடுத்தற்குப் பொருள் அரிதாயின், அவர் மனத்தை முகமலர்ச்சியினாலும் இன்சொல்லினாலுங் குளிர்விக்கலாமே. அவையும் அரியனவோ, அல்லவே. தன்னிடத்து வந்து இரந்த தரித்திரனை 'இவன் அற்பன்' என்று தள்ளிவிட்டுச் 'செல்வத்தையுடைய பெரியவன் எங்கே இருக்கின்றான்' என்று கருதுவோன் தாதாவாகான். இவன் கொடுக்குங் கொடையெல்லாம் அவனிடத்தே தனக்கு ஒருதியங்கருதிய செட்டாம்.

கொடை, வணக்கம், உறவு, கிருபை, பொறை என்னும் ஐந்துமுடையவனே தாதா. இவையில்லாதவன் அதாதா. அருளும் ஆதரவுமுடையவனாகிய தாதாவின் கையிலே ஏற்றவன் அந்தத் தாதாவினோடும் புண்ணியலோகத்தை அடைவன்; அருளும் ஆதரவுமில்லாதவனாகிய அதாதாவின் கையிலே ஏற்றவன் அந்த அதாதாவினோடும் நரகத்தை அடைவன்.

யாவரும் உச்சிக்காலத்திலே பசித்துவந்த ஏழைகளுக்கு இல்லை என்னாமல் முகமலர்ச்சி



யோடும் இன்சொல்லோடும் தம்மால் இயன்ற மட்டும் அன்னபானீயங் கொடுத்துப் புசித்தல் வேண்டும். தாம்புசிக்கும்போது ஒருபிடியன்னமாயினுங் கொடுத்தல் ஒருவருக்கும் அரியதன்று. இது யாவருக்கும் எளிதாகும். திருமூலநாயனாருடைய அருமைத் திருவாக்கைக் கேளுங்கள்.

திருமந்திரம்.

"யாவர்க்கு மாமிறை வற்கொரு பச்சிலை
யாவர்க்கு மாம்பசு விற்கொரு வாயுறை
யாவர்க்கு மாமுண் ணும்போதொரு கைப்பிடி.
யாவர்க்கு மாம்பிறர்க் இன்னுரை தானே."

பகற்காலத்தில் வந்த அதிதிக்குப் போசனங்கொடாத பாவத்தினும், இராக்காலத்தில் வந்த அதிதிக்குப் போசனங் கொடாத பாவம் எட்டுமடங்கதிகம். தயிர் பால் நெய் முதலிய உயர்ந்த பதார்த்தங்களுள் எதை அதிதிக்குப் பரிமாறவில்லையோ அதைத் தாமும் புசிக்கலாகாது. இரவிலே போசனகாலத்தில் வந்தாலும், பின்பு வந்தாலும், சமயந் தப்பிப் போயிற்று என்று, வந்த அதிதியை அன்னங்கொடாமல் அனுப்பலாகாது. அதிதிக்கு அன்னங்கொடுக்கச் சத்தியில்லையாயினும், படுக்கை இளைப்பாறுமிடம் தாகதீர்த்தம் பிரியவசனம் என்னும் இவைகளாலாயினும் உபசரித்தல்வேண்டும். அதிதி புறத்திருப்பத் தாம் புசித்தவரும், பத்திவஞ்சனை செய்தவரும் கண்டமாலை நோயினால் வருந்துவர். சூரியாஸ்தமயன காலத்திலே தம் வீட்டில் வந்து சேர்ந்தவருக்கு இடம் படுக்கை

முதலியவை கொடாதவர் நரகத்துன்பத்தை அநுபவித்து மறுபிறப்பிலே தாம் கைப்பிடித்த மனைவியரை இழந்து துக்கமுற்றுத் திரிவர்.

அதிதியானவன் வேற்றூரினின்றும் வழிப்போக்கனாய் அன்னமுதலிய உதவி பெறும்பொருட்டு வருபவன். அவன் ஒருநாளிருந்தாற்றான் அதிதியெனப்படுவன். ஊரிலிருப்பவனையும் வேறொரு நிமித்தத்தினால் வருகிறவனையும் அன்னத்தின்பொருட்டு ஊர்தோறுந் திரிகின்றவனையும் அதிதியென்று கொள்ளலாகாது.

---

## கல்வி.

மனிதர்களாலே தேடற்பாலனவாகிய பொருள்கள் கல்விப்பொருள் செல்வப்பொருள் என இரண்டாம். கல்வியாவது கற்றற்குரிய நூல்களைக் கற்றல். கல்வியெனினும் வித்தையெனினும் பொருந்தும். கற்றற்குரிய நூல்களாவன அறம் பொருள் இன்பம் வீடு என்னும் உறுதிப்பொருள்களை அறிவிக்கும் நூல்களும், அந்நூல்களை அறிதற்குக் கருவிகளாகிய நிகண்டு இலக்கணம் கணக்கு முதலிய நூல்களுமாம். அறமெனினும் தருமமெனினும் பொருந்தும். வீடெனினும், முத்தியெனினும், மோக்ஷமெனினும் பொருந்தும்.

செல்வப்பொருள் பங்காளிகள், கள்வர், வலியவர், அரசர் என்னும் இவர்களாலே கொள்ளப்



படும்; கல்விப்பொருளோ ஒருவராலும் கொள்ளப்படமாட்டாது. செல்வப்பொருள் வெள்ளத்தாலாயினும் அக்கினியாலாயினும் அழியும்; கல்விப்பொருளோ ஒன்றாலும் அழியமாட்டாது. செல்வப்பொருள் பிறருக்குக் கொடுக்குந்தோறும் குறைந்துகொண்டேவரும்; கல்விப்பொருளோ பிறருக்குக் கொடுக்குந்தோறும், பெருகிக்கொண்டேவரும். செல்வப்பொருள், சம்பாதித்தல் காப்பாற்றல் இழத்தல் என்னும் இவைகளாலே துன்பஞ்செய்து, பலரையும் பகையாக்கும். கல்விப்பொருளுடையவர், இம்மையிலே சொற்சுவை பொருட்சுவைகளை அநுபவித்தலாலும், புகழும் பொருளும் பூசையும் பெறுதலாலும், பின்னே தருமத்தையும் முத்தியையும் அடைதலாலும், இடையறாத இன்பத்தை அநுபவிப்பர். இப்பெரியவரைச் சேர்ந்து அறியாதவைகளையெல்லாம் அறிந்தோம் என்று உலகத்தார் பலரும் அவரிடத்து அன்புடையவராவர். ஆதலினாலே, செல்வப்பொருளினும் கல்விப்பொருளே சிறப்புடையது.

உயர்குலமும் அழகும் செல்வாக்கும் உடையவராயினும், கல்வியில்லாதவர் முருக்கம்பூவுக்குச் சமமாவர். இராசாக்களுக்கு அவர் தேசத்தின் மாத்திரம் சிறப்புண்டாம். கற்றறிந்தவருக்கு அவர் சென்ற சென்ற தேசங்களிலெல்லாம் சிறப்புண்டாம். ஆதலின் இராசாக்களினும் கற்றறிந்தவரே சிறப்புடையர். ஆதலி

னல், யாவரும் கல்வியைச் சிறிதும் அவமதியாது வருந்திக் கற்றல்வேண்டும்.

அழுக்குப்படியாத சீலையிலே சாயம் நன்றாகப்பிடிக்கும்; அழுக்குப் படிந்த சீலையிலே சாயம் நன்றாகப் பிடிக்கமாட்டாது. சிறுபிராயத்திலே கற்ற கல்வி புத்தியிலே நன்றாகப் பதியும். புத்தி சமுசாரத்திலே விழுந்து வருத்தத்தை அடைந்துகொண்டிருக்கின்ற முதிர்ந்த பிராயத்திலே கற்றாலும், கல்வி நன்றாகப் புத்தியிலே பதியமாட்டாது. ஆதலினாலன்றோ ஔவையார் "இளமையிற் கல்" என்று அருளிச்செய்தார்.

கல்வியை நல்லாசிரியரிடத்தே சந்தேகமும் விபரீதமும் அறக் கற்றல் வேண்டும். சந்தேகமாவது இதுவோ அதுவோ என ஒன்றிலே துணிவு பிறவாது நிற்றல். விபரீதமாவது ஒன்றை மற்றொன்றாகத் துணிதல். வியாதி வறுமைகள் இல்லாமையும், பொருள் இளமை முதலியவைகள் உண்மையும், கல்வி கற்றற்குச் சிறந்த கருவிகள். மிகச்சிறந்த கருவி ஆசிரியருடைய உள்ளத்திலே, அருள் உண்டாகும்படி நடத்தல். ஆதலினாலே, கல்வி கற்கு மாணாக்கர் ஆசிரியரை விதிப்படி சிரத்தையோடு வழிபட்டே கற்றல்வேண்டும். வழிபாடாவது, இன்சொற் சொல்லல், வணங்குதல், உற்றவிடத் துதவுதல் முதலாயின.

கல்வியிலே தேர்ச்சியடைய வேண்டுமாயின் இடைவிடாது கற்றல்வேண்டும். ஒருநாள்



ஊக்கமாகவும், மற்றொரு நாள் சோம்பலாகவும் இராமல், எப்பொழுதும் தங்கள் தங்கள் சத்திக்கு ஏற்பக் கல்வியிலே பயிலல்வேண்டும். சோர்வு அடையாமல் நாடோறும் கிரமமாகச் சிறிதாயினும் நன்றாகக் கற்கின்றவர் எப்படியும் அறிவுள்ளவராவர். தாம் அதிக சமர்த்தர் என்று நினைத்து ஒவ்வொரு வேளையில் மாத்திரம் கற்கின்றவர் அதிகமாகத் தேர்ச்சி அடையமாட்டார். மணற்கேணியைத் தோண்டுந்தோறும் ஊற்றுநீர் சுரந்து பெருகிக்கொண்டே வருதல்போல, கல்வியைக் கற்குந்தோறும் அறிவு வளர்ந்துகொண்டே வரும். ஆதலினால், கல்வியைச் சிறிது கற்றமாத்திரத்தால் அமையாது மேன்மேலும் கற்றல் வேண்டும்.

தாங்கேட்ட பாடங்களை நாடோறும்போற்றலும், தாங்கேட்ட பொருள்களைப் பலதரமுஞ் சிந்தித்தலும், ஆசிரியரை அடுத்து அவைகளைக் குறைவு தீரக்கேட்டலும், ஒருசாலை மாணாக்கர் பலருடனும் பலதரமும் பழகுதலும், தாம் ஐயுற்ற பொருளை அவரிடத்து வினவுதலும், அவர் வினவியவைகளுக்கு உத்தரங் கொடுத்தலும், தாம்கேட்டறிந்ததைப் பிறருக்கு அறிவித்தலும், ஆகிய இவைகளெல்லாம் கல்வி பயிலும் மாணாக்கருக்குக் கடன்களாம்.

நூல்களிலே சிலநாட்பழகினால், விவேகிகளாயினும், சிலவற்றில் வல்லராதலும் அரிது. பலநாட்பழகினால், மந்தர்களாயினும், பலவற்றிலும், வல்லவராவர். நூற்பொருளை விரைவி

னாலே பார்த்தால், விவேகிகளாயினும், ஒன்றுந் தெரியாது. விரையாது அமைவுடனே பார்த்தால், மந்தர்களாயினும், கருகாது தெரியும்.

பெரும்பாலும் எல்லாருக்கும் கற்பதிற் கருத்திறங்கும், கற்றதிற் கருத்து இறங்காது. அது நன்மையன்று. கருத்தைக் கற்பதிலே மட்டுப்படுத்தி, கற்றதிலே சிந்தாமல் இறக்கல் வேண்டும். வருந்திக் கற்ற நூலை மறக்கவிட்டு வேறு நூலைக்கற்றல் கையிலே கிடைத்த பொருளை எறிந்து விட்டு, வேறுபொருளை அரிப்பரித்துத் தேடல்போலும். பசி முதலிய வருத்தத்தாலாவது, அன்னமுதலியவற்றின் கண் அவாவினாலாவது, யாதாயினும் வேறொரு நிமித்தத்தாலாவது, கருத்து மயங்கினால், அப்பொழுது கல்வியிற் பழகுதலொழிந்து, அம்மயக்கந்தீர்ந்த பின்பு பழகல் வேண்டும்.

கல்வியுடையவர் தாங் கற்றறிந்தபடி நல்வழியிலே ஒழுகுதலும், நன்மாணாக்கர்களுக்குக் கல்வி கற்பித்தலும், எல்லாருக்கும் உறுதியைப் போதித்தலுமாகிய இம்மூன்றையும் எந்நாளும் தமக்குக் கடனாகக் கொள்ளல்வேண்டும். இவ்வியல்புடையவரே கல்வியாலாகிய பயனை அடைந்தவராவர். இம்மூன்று மில்லாவிடத்துக் கல்வியினாற் பயனில்லை.

சரீரசுகத்துக்கு ஏதுவாகிய அன்னவஸ்திர முதலியவற்றையும் ஆன்மசுகத்துக்கு ஏதுவாகிய ஞானத்தையும் கொடுப்பது வித்தையேயாதலின், எல்லாத் தானங்களினும் வித்தியா



தானமே சிறந்தது. ஒருவருக்கு அன்னவஸ்திரங் கொடுத்தால், அவை அவருக்குமாத்திரமே பயன்படும். பயன்படுவதும் சிறிது பொழுது மாத்திரமே. ஒரு விளக்கேற்றுதல், அவ்வொருவிளக்கிலே பலவிளக்கும், அப்பலவிளக்கினுள்ளும் ஒவ்வொரு விளக்கிலே பற்பல விளக்குமாக, எண்ணில்லாத விளக்கு ஏற்றப்படுதற்கு ஏதுவாதல்போல, ஒருவருக்குக் கல்வி கற்பித்தல், அவ்வொருவரிடத்திலே பலரும், அப்பலருள்ளும் ஒவ்வொருவரிடத்திலே பற்பலருமாக, எண்ணில்லாதவர் கல்வி கற்றுக் கொள்ளுதற்கு, ஏதுவாகும். அவர் கற்ற கல்வியோ அப்பிறப்பினன்றி மற்றைப் பிறப்புக்களினும் சென்று சென்று உதவும். ஆதலின் வித்தியாதானத்துக்குச் சமமாகிய தருமம் யாதொன்றுமில்லை. தாங்கற்ற கல்வியை நன்மாணாக்கர்களுக்குக் கருணையோடு கற்பியாதவர் காட்டிலே நச்சுமாமரமாவர்.

---

## செல்வம்.

செல்வமாவது இரத்தினம் பொன் வெள்ளி நெல் முதலாயின. தருமத்துக்கும் இன்பத்துக்கும் துணைக்காரணம் செல்வம். இது பற்றியன்றே மாணிக்கவாசகசுவாமிகள் "முனிவரு மன்னரு முன்னுவ பொன்னான் முடியும்" என்றும் "வழியாரிருமை யழியார்" என்றும் திருக்கோவையாரில் அருளிச்செய்தார்.

அழியாப்பொருளாகிய கல்வியையும் கல்வித்தேர்ச்சிக்கு உரிய புத்தகங்களையும் கொள்ளுதற்கும், பசி முதலியவைகளினால் வருந்தாது கவலையற்றிருந்து கல்வி கற்றற்கும், கற்ற கல்வியை அழகு செய்து தமக்கும் பிறர்க்கும் பயன்படுத்தற்கும் கருவி செல்வமே. கல்வியுடையவரும் வறியவராயின், பசிநோயினாலும் இராக்கவலைகளினாலும் வருந்தி, தாம் முன் கற்ற கல்வியையும் மறந்துவிடுவர். வறியவர் மெய்ந்நூற் பொருளைத் தெளிய அறிந்து போதித்தாராயினும், 'நாம் இவர் சொல்லை விரும்பிக் கேட்போமாயின் கண்ணோட்டத்தினால் இவர் குறையை முடித்தல்வேண்டுமே' என்று பயந்து, யாவருங் கேளாதொழிவர். ஆதலின் அவர் வாய்ச்சொல் பயனில் சொல்லாய் முடியும்.

செல்வமில்லாதவர், வறுமைத் துன்பமொன்றினன் மாத்திரமா, அத்துன்பம் மூலமாகச் செல்வர் வீட்டுவாயிலை நோக்கிச் செல்லுதற்றுன்பமும், அவரைக் காணுதற்றுன்பமும், கண்டாலும் அவர் மறுத்தபோது உண்டாகுந் துன்பமும், மறுதவிடத்தும் அவர் கொடுத்ததை வாங்குதற்றுன்பமும், அதனைக் கொண்டுவந்து போசனத்துக்கு வேண்டுமவைகளைக் கூட்டுதற்றுன்பமும் முதலிய பல துன்பங்களாலும் நாடோறும் வருந்துவர்.

எல்லா நன்மையும் உடையவராயினும், பொருளில்லாதவரை அவருடைய தாய் தந்தை மனைவி மைந்தர் முதலாயினவரும் அவமதிப்பர். ஒரு நன்மையும் இல்லாதவராயினும், பொருளுடையவரை அவர் பகைவரும் நன்கு மதிப்பர். வறியவரிடத்தே தாம் கொள்வதில்லாமையன்றிக் கொடுப்பதுண்டாதலும் உடைமையால், அது நோக்கிச் சுற்றத்தார் யாவரும் கைவிடுவர்.



கல்வியும், தருமமும், இன்பமும், கீர்த்தியும், மனிதருள்ளே பெருமையும், உறவும், நினைத்தது முடித்தலும், வெற்றியுமாகிய எல்லாம் செல்வமுடையவருக்கே உண்டு. செல்வமில்லாதவர் உலகத்திலே நடைப்பிணமாவார். ஆதலினால், யாவரும் செல்வத்தை இடையறு முயற்சியோடு வருந்திச் சம்பாதித்தல் வேண்டும்.

பொருள் சம்பாதிக்கு நெறிகளாவன: வித்தை கற்பித்தல், உயிர்க்கு உறுதி பயக்கும் நூல்களையும் உரைகளையுஞ் செய்து வெளிப்படுத்தல், வேளாண்மை, வாணிகம், இராசசேவை, சிற்பம் முதலியவைகளாம். ஞானநூலை வேதனத்தின் பொருட்டுக் கற்பிக்கலாகாது; கற்பித்தவர் நரகத்தில் வீழ்ந்து வருந்துவர்.

பொருள் சம்பாதிக்குமிடத்து, தருமநெறியாலே சம்பாதித்தல் வேண்டும். தருமநெறியால் வந்த பொருளே மேற்சொல்லிய பயன்களெல்லாவற்றையுங் கொடுக்கும். களவு, பொய்ச்சான்று சொல்லல், பொய்வழக்குப் பேசல், பொய்ப்பத்திரம் பிறப்பித்தல், விசுவாசகாதம்,

பரிதானம் வாங்கல், சுங்கங்கொடாமை முதலிய பாவநெறிகளாலே பொருள் சம்பாதிக்கலாகாது. பாவநெறியால் வந்த பொருள் முன் செய்த புண்ணியத்தையுங் கெடுத்து, இம்மையிலே தீராத வசையையும், சந்ததி நாசத்தையும், இராச தண்டத்தையும், மறுமையிலே நரகத் துன்பத்தையும், பிறவித் துன்பத்தையும் விளைவிக்கும்.

காலந்தோறும் சம்பாதிக்கப்படும் பொருளை நான்குபாகமாகப் பகுத்து, அவைகளுள், இரண்டு பாகத்தைத் தமது அநுபவத்துக்கு ஆக்கி, ஒரு பாகத்தை ஆஸ்தியின் பொருட்டுச் சேர்த்து, எஞ்சி நின்ற ஒருபாகத்தைக் கொண்டே தருமஞ்செய்தல்வேண்டும். ஆஸ்தியின் பொருட்டுச் சேர்க்காது செலவிட்டவர் பின்பு வியாதியினாலேனும் கிழப்பருவத்தினாலேனும் பொருள் சம்பாதிக்கும் திறமை இல்லாதபொழுது, பெண்டிர் பிள்ளைகளோடு வருத்தமடைவர். அக்காலத்திலே பெண்டிர் பிள்ளைகளும் அவரை உபசரியாது கைவிடுவர்.

முதலிற் செலவு சுருங்கினால், பொருள் ஒரு காலத்தும் நீங்காது. முதலிற் செலவு சுருங்கக் கூடாதாயின், முதலுக்கொக்கவாயினும் செலவழித்தல் வேண்டும். எவனுக்கு முதலிற் செலவு மிகுமோ, அவன் வாழ்க்கை உள்ளதுபோலத் தோன்றி மெய்மையால் இல்லையாகிப் பின்பு அத்தோற்றமும் இல்லாமற் கெட்டுவிடும். வரவு செலவு கணக்கெல்லாம் அப்பொழுது



அப்பொழுது சிறிதுந் தவறுமல் எழுதிக் கொள்ளல் வேண்டும். கணக்கெழுதாமல் யாதொன்றுஞ் செய்யலாகாது. மாசந்தோறும் வரவு செலவு இருப்புக்கணக்குப் பார்வையிட்டு முடித்தல்வேண்டும்.

சம்பாதிக்கப்பட்ட பொருளிலே, அநுபவத்தின்பொருட்டும் தருமத்தின்பொருட்டும் செலவிட்டதொழிய, எஞ்சி நின்றதைக் கொண்டு, தக்க பிரயோசனத்தைத் தருதற்குரிய விளைநிலம் தோட்ட முதலியவை வாங்கல் வேண்டும். அல்லது முதற்பொருளுக்கும் வட்டிக்குங் குறைவுபடாத ஈட்டையும் தகுதியாகிய சான்றினையுமுடைய பத்திரத்தைப் பெற்றுக்கொண்டு, வட்டிக்குக் கொடுத்தல் வேண்டும். கடனுடையவன் தம்மிடத்து வைத்த அசைக்கப்படுபொருளாகிய ஈட்டை, அவனுக்குக் கொடுக்குமளவும், கெடுதியும் குறைவும் விகாரமும் பயனின்மையும் உருமாற்றமும் அடையாமற் காத்தல் வேண்டும். அந்த ஈட்டைத் தாம் அநுபவித்தால் வட்டியில்லை. அநியாய வட்டியும் வட்டிக்கு வட்டியும் வாங்குதல் பெருங் கொடும்பாவம். பிராமணன் ஒருகாலத்திலும் வட்டி வாங்குதல் கூடாது. ஆபத்துக்காலத்தில் மாத்திரம் வாங்கலாம்.

தந்தை வழியாகவேனும், தாய் வழியாகவேனும், தாயினுடைய தந்தை முதலானவர்களின் வழியாகவேனும் வந்த பொருள் தாயம்

எனப்படும். வித்தை கற்பித்தல், வேளாண்மை, வாணிகம், சிற்பம், சேவை முதலிய தொழில்களாலும் யாசனத்தாலும் அடையப்பட்ட பொருள் உடைமை எனப்படும். இவ்வுடைமைப் பொருளைத் தமதிச்சைப்படி தான முதலானவைகளாகச் செய்யலாம். பெண்ணின் பொருட்டுத் தந்தை முதலானவர்களாலே கொடுக்கப்பட்ட பொருள் சீதனம் எனப்படும். சீதனப்பொருளைக் கணவனேனும் தந்தையேனும் உடன்பிறந்தாரேனும் கொள்ளுதற்கும் கொடுத்தற்கும் உரியரல்லர்.

இத்தேசங்களிலே, பலவகைத்தொழில்கள் செய்து சீவனஞ் செய்யச் சத்தியுடையவர்களுள், அவை செய்யாது சோம்பேறிகளாய் இருந்துகொண்டு, அநேகர் நாணமின்றிப் பலரிடத்தும் சென்று யாசித்தும், அநேகர் தாயப்பொருளையே கொண்டும், அநேகர் தம்மனைவியர்களுடைய சீதனப்பொருளையே கொண்டும், அநேகர் தாவரசங்கமங்களாகிய தாயத்தையும் சீதனத்தையும் ஈடு வைத்தும், விக்கிரயஞ் செய்தும் சீவனஞ் செய்கின்றார்கள். தாவரம் - அசைக்கப்படாத பொருள். சங்கமம்-அசைக்கப்படு பொருள். அறிவும் ஆண்மையும் மானமும் உடையவர்கள் இப்படிச் செய்வார்களோ, செய்யார்கள். கூழேயாயினும் தமது தொழின் முயற்சியாலே கிடைத்தது அமிர்தமேயாகும். பருப்பு நெய் பாயசம் வடை தயிர் முதலியவற்றோடுகூடிய அன்னமேயாயினும், யாசனத்தினாலாவது, பிறருடைய தொழின் முயற்சியினாலாவது





கிடைத்ததாயின் அது விஷமேயாகும். தொழின் முயற்சிகள் சுவதேசத்திலே பலிக்காவிடின், இதர தேசங்களிலாயினும் சென்று, தாமே வருந்திச் சம்பாதித்துச் சீவனஞ் செய்தலே அறிவும் ஆண்மையும் மானமும் உடையவருக்கு அழகு. இத்தேசங்களில் அநேகர் பணம் வைத்துக்கொண்டும் யாசித்துச் சீவனஞ் செய்கின்றார்கள். இவர்களுக்குப் பிக்ஷை கொடுப்பவர்கள், உண்மையை ஆராய்ந்தார்களாயின், தங்களைப் பார்க்கினும், இவர்களே செல்வமுடையவர்கள் என்று அறிவார்கள். இவர்கள் நாட்டுவேடர் எனப்படுவர்கள். பொருள் வைத்துக்கொண்டு யாசித்துப் புசித்தவர்கள் நரகத்துன்பத்தை அநுபவித்து, மறுபிறப்பிலே மாடாய்ப் பிறந்து, அன்னம்போட்டவருக்கு உழைப்பார்கள்.

---

## தருமம்.

அடிமையானவன், தன்னிடத்தே தன் நாயகன் ஒப்பித்த பொருளை, அவன் கருத்தறிந்து, அக்கருத்தின்படியே, செலவுசெய்தல் வேண்டுமன்றோ. அந்நாயகன் கருத்துக்கு மாறாகச் சேமித்து வைத்துக்கொண்டாலும், தன்னிச்சைப்படி செலவு செய்து அழித்தாலும், அவனாலே தண்டிக்கப்படுவானன்றோ. ஆன்மாக்களெல்லாம் சகலலோக நாயகராகிய

கடவுளுக்கு மீளாவடிமைகள். தமக்குத் திருத்தொண்டு செய்து பிழைக்கும்பொருட்டு ஆன்மாக்களுக்கு இவ்வருமையாகிய மனித சரீரத்தைக் கொடுத்தருளினவர் அக்கடவுளே. மனிதர்களிடத்துள்ள பொருளெல்லாம் அவர் கொடுத்தருளிய பொருளே. பொருள் கொடுத்தருளிய கடவுளுடைய திருவுளக் கருத்து யாது? அவர்கள் தங்களுக்கும் பிறருக்கும் சரீரசுகத்தின் பொருட்டும் ஆன்மசுகத்தின் பொருட்டும் செலவு செய்தல்வேண்டும் என்பதே அவர் திருவுளக்கருத்து. ஆன்ம சுகமே மிகமேலாகிய சுகம். அவ்வான்மசுகத்துக்குக் காரணம் சரீர சுகம். ஆதலினாற் சரீரசுகத்தின் பொருட்டுச் செலவு செய்வதும் ஆன்ம சுகத்தின் பொருட்டே என்று தெளிந்து, ஆன்ம சுகத்தையே நாடல் வேண்டும். எல்லாரும் இவ்வுண்மையைத் தெளிய அறிந்து, தமக்குக் கடவுள் அருளிச்செய்த பொருளை அவர் திருவுளக்கருத்தின்படியே செலவு செய்து, சரீர சுகத்தையும் அது நெறியாக ஆன்மசுகத்தையும் அடைதல்வேண்டும். அப்படிச்செய்யாது கடவுளுடைய திருவுளக் கருத்துக்கு மாறாக வீண்செலவு செய்வோரும், உலோபத்தினாலே சேமித்து வைப்போரும், அக்கடவுளாலே தண்டிக்கப்படுவர்.

தங்கள் தங்களால் இயன்றமட்டும் வருந்திப் பொருள் சம்பாதிப்பவர்களுள்ளே சிலர், தாங்கள் உண்ணாதும், உடாதும், தங்கள் பிதா மாதாக்கள் முதலிய பந்துக்களுக்குக் கொடாது,



தும், தருமஞ்செய்யாதும், அப்பொருளைத் தரையிலே புதைத்து வைக்கின்றார்கள். வீட்டுச் சுவரினுள்ளே வைத்துக் கட்டடஞ் செய்கின்றார்கள்; இவர்கள் இறந்தபின் இந்தப் பொருளை அநுபவிப்பவர் யாவரோ! அறியேம்.

சிலர் தங்கள் பொருளைத் தருமத்திலே சிறிதும் செலவு செய்யாது, தங்கள் பிள்ளைகளுக்கு வைத்துவிட்டு இறக்கின்றார்கள். அந்தப் பிள்ளைகள் அந்தப் பொருளே நிலையென்று நினைந்து, கல்வியை அவமதித்துச் சோம்பேறிகளாய்த் திரிந்துவிட்டு, அந்தப்பொருளெல்லாம் வியபிசார முதலியவைகளிலே சில காலத்துள்ளே செலவிட்டு, வறியவர்களாயும், தீரா வியாதியாளர்களாயும், அலைகின்றார்கள்.

சிலர், புத்திரபாக்கியம் இல்லாதவர்களாய் இருந்தும், தங்கள் பொருளைத் தருமத்திலே சிறிதும் செலவிடாது வைத்துவிட்டு, இறக்கின்றார்கள். அந்தப் பொருளெல்லாம் அவர்கள் பந்துக்களுக்குங் கிடையாது, வீண் வழக்குகளிலே செலவாய் விடுகின்றன.

சிலர் தங்கள் பிதா மாதா முதலிய பந்துக்கள் பசியினால் வருந்தத் தாங்களும் தங்கள் பெண்டிர் பிள்ளைகளும் உண்டுடுத்துக் களிப்புற்றிருக்கின்றார்கள். எஞ்சிய பொருளெல்லாம் அநியாய வட்டிக்குக் கொடுத்துப் பிறர்குடியைக் கெடுக்கின்றார்கள்.

சிலர் தங்களை நம்பிய பெண்டிர் பிள்ளைகளையுங் கைவிட்டு, பொதுப்பெண்களை நம்பி, தங்

கள் பொருளெல்லாம் அவர்கள் பொருட்டே செலவு செய்கின்றார்கள்.

சிலர் தங்கள் தாயத்தாரோடு வழக்குத் தொடுத்து, அவ்வழக்கிலே எல்லாம் செலவிட்டு, அவர்களையும் வறியவர்களாக்கித் தாங்களும் வறியவர்களாகின்றார்கள்.

சிலர் தங்கள் பகைவர்கண்மீது வைரஞ் சாதிக்கத் துணிந்து, பொய்வழக்குத் தொடுத்துப் பொய்ச்சாட்சிகளுக்கும் உத்தியோகத்தர்களுக்கும் பரிதானங் கொடுத்தலிலே தங்கள் பொருளெல்லாஞ் செலவழிக்கின்றார்கள். பரிதானம் - கைக்கூலி.

சிலர் தாங்கள் உண்ணலும், உடுத்தலும், ஆபரணந் தரித்தலும், வாகனமேறலும், கூத்துப்பார்த்தலும், கீதங் கேட்டலுமே மனிதப் பிறப்பாலாகிய பயனென்று நினைந்து, எல்லாப் பொருளையும் அவைகளின்பொருட்டே செலவு செய்கின்றார்கள்.

சிலர் விவாக முதலிய சடங்குகளிலும் உத்தரக்கிரியைகளிலுமே செலவு செய்து, பெருந்திரளாகிய பொருளையெல்லாம் இரண்டு மூன்று தினத்துள்ளே பாழாக்குகின்றார்கள். தொழில் செய்து சீவனஞ்செய்யச் சத்தியிருக்கவும் அது செய்யாத சோம்பேறிகளுக்குத் தங்கள் பொருளெல்லாங் கொடுத்துக் கொடுத்து, அவர்கள் செய்யும் வியபிசாரம் மதுபானம் சூது முதலிய பாவங்களுக்குத் தாங்களே காரணராகின்றார்கள்.



இவர்கள் யாவரும், தாங்கள் நெடுங்காலம் வருந்திச் சம்பாதித்த பொருள்களெல்லாவற்றையும், நல்லறிவும் நல்லோரிணக்கமும் இல்லாமையினாலே, இப்படி வீணிலே செலவு செய்து, பின் கடன்பட்டும் செலவு செய்கின்றார்கள். இத்தன்மையாகிய செய்கைகளினாலன்றோ, இந்தத் தேசங்களில் அநேகர் ஆன்மசுகத்தோடு சரீரசுகத்தையும் இழந்து, வறுமையுற்று வருந்துகின்றார்கள்.

பசி தாகங்கொண்டு தங்கள் வீட்டில்வந்த ஏழைகளுக்கு அன்னப்பாலாயினும் சலமாயினுங் கொடாத வன்கண்ணர்களாகிய சிலர் 'பூரி கொடுக்கப் போகின்றோம்' என்று சொல்லி இடமுங் காலமும் வரையறுத்துக் கொடிகட்டித் திரளான ஏழைச்சனங்களை ஒருங்கு கூட்டிச் சேவகர்களை வாயிலிலே நிறுத்தி, இரண்டு மூன்று யாமம் வரையும் அடைத்து வைத்து, ஒருகையிலே கோலையும் மற்றொருகையிலே பணத்தையும் எடுத்துக்கொண்டு போய், முகமலர்ச்சி காட்டாமலும், இன்சொற்களைச் சொல்லாமலும், காலணா அரையணாக்களை வீசியெறிந்து, மேல்விழுந்தெடுக்கிற ஏழைச்சனங்களைக் கோலினால் அடித்துத் துர்வார்த்தைகளினாலே வைது, கழுத்தைப் பிடித்துத் தள்ளுகின்றார்கள்.

தேவாலயத் திருப்பணிக்கும் நித்திய பூசைக்கும் ஒருபணமாயினுங் கொடுத்தற்கு உடன்படாதவர்கள் சிலர், உற்சவத்திலே நடனம் கீதம் வாணமுதலியவற்றின் பொருட்

டுப் பெருந்தொகைப் பொருளைச் செலவழிக்கின்றார்கள். அப்பொழுதும் அபிஷேகத்தின் பொருட்டு ஒரு ஆழாக்குப் பாலாயினுங் கொடார்கள்.

மகிமைபொருந்திய புராதனாலயங்கள் பல கிலமாய்க்கிடப்ப அவைகளைப் புதுக்குவித்தற்கும், அவைகளிலே பூசை உற்சவமுதலிவற்றை விதிப்படி நடத்துவித்தற்கும், மனம் பொருந்தாதவர்கள் சிலர், தெருத்தோறும் நூதனாலயங்களைக் கட்டுவித்துப் பூசை உற்சவமுதலியவற்றை விதியின்றி நேர்ந்தபடி நடத்துவிக்கின்றார்கள்.

சமீபத்திலே பூசையின்றி இருக்கும் புராதனாலயங்களிலே ஒருகாலப் பூசையேனும் செய்வித்தற்கு உடன்படாதவர்கள் சிலர், தூரத்திலே பூசை உற்சவமுதலியவற்றிற்கு முட்டுப்பாடில்லாதவைகளும் எண்ணிறந்த திருவாபரணமுதலியவற்றை உடையவைகளுமாய் இருக்குந் தேவாலயங்களுக்குப் பொருளுதவி செய்கின்றார்கள்.

தொழில் செய்து சீவனஞ்செய்யச் சத்தியில்லாதவர்களாகிய குருடர் முடவர் சிறுகுழந்தைகள் வியாதியாளர்கள் வயோதிகர்கள் என்னும் இவர்களுக்கும், ஆபத்துக்காலத்தில் வந்த அதிதிகளுக்கும் கஞ்சியாயினும் வார்ப்பியாது, அவர்களைத் துர்வார்த்தைகளினாலே வைதும், கழுத்தைப் பிடித்துத் தள்ளியும், அடித்தும், ஓட்டிவிடும் வன்கண்ணர்கள்



சிலர், தொழில் செய்து சீவனஞ்செய்ய வல்லவர்களாகியும், சரீரபுஷ்டியுடையவர்களாகியும், வியபிசாரம் பொய்ச்சான்று சொல்லல் சூது முதலிய பாதகங்களிலே காலம் போக்குபவர்களாகியும் உள்ள சோம்பேறிகளுக்கு முகமலர்ச்சிகாட்டிக் கும்பிட்டு, இன்சொற்சொல்லி, நெய், வடை, பாயசம், தயிர் முதலியவற்றோடு அன்னங்கொடுத்துப் பணமுங் கொடுக்கின்றார்கள்.

சரீரசுகம் ஆன்மசுகம் என்னும் இரண்டுக்கும் ஏதுவாகிய கல்வியிலே மிக்க விருப்பமுள்ள வறியபிள்ளைகளுக்குக் கவலையற்றிருந்து கற்கும்பொருட்டு அன்னவஸ்திரம், உதவுதற்கு மனம் பொருந்தாதவர்கள் சிலர், கல்வியிற் சிறிதாயினும் பொழுது போக்காது வியபிசாரமுதலியவை செய்து பிரமேகம் கிரந்தி அரையாப்பு பகந்தரம் முதலிய நோய்களைப் பெற்றுக்கொண்டு திரியும் பிரமசாரிகளுக்கு விவாகத்தின்பொருட்டுப் பொருளுதவி செய்கின்றார்கள்.

புராதனாலயங்களிலே கும்பாபிஷேகம்செய்விக்கத் தலைப்பட்டும், அதனை விதிப்படி செய்வித்தற்கும், அவைகளிலே இடிந்த திருக்கோபுரம் திருமதில் முதலியவைகளைப் புதுக்குவித்தற்கும், அவைகளிலே அரசு முதலியவைகள் முளைக்கும்பொழுதெல்லாம் அவைகளைக் களைந்தெறிந்து விட்டுச் சுண்ணாம்பு பூசும் பொருட்டுக் கூலியாளை நியோகித்தற்கும், மனம்

பொருந்தாதவர்கள் சிலர், அதிபாதகிகளும் மகாபாதகிகளுமாய்த் திரியும் எண்ணில்லாத சோம்பேறிகளுக்கு அக்கும்பாபிஷேக காலத்திலே அளவிறந்த திரவியங்களைச் செலவிட்டு விலாப்புடைக்க அன்னங்கொடுக்கின்றார்கள்.

சிலர், சரீர புஷ்டியையுடைய அளவிறந்த சோம்பேறிகளுக்கு மகோற்சவகாலங்களிலே, சத்திரங்களிலே, ஒவ்வொருவருக்கு கால்ரூபா, அரைரூபா, முக்கால்ரூபா, ஒருரூபா வீதமாகச் செலவுசெய்து அன்னங் கொடுக்கின்றார்களே! ஐயையோ அவர்கள் நெய்யாறு தயிராறு பெருக அவ்வன்னத்தை விலாப்புடைக்கப் புசித்து விட்டு, தங்களுக்காயினும் பிறருக்காயினும் யாது நன்மை செய்கின்றார்கள்! அநேகர் தெருத்திண்ணைகளிலே படுத்துத் தூங்குகின்றார்கள். அநேகர் தாசி வீடுகளிலும் தெருத்திண்ணைகளிலும் சூதாடுகின்றார்கள். அநேகர் கேட்கத்தகாத சிற்றின்பப்பாட்டுகளைப் பாடிக் கொண்டிருக்கின்றார்கள். இச்சோம்பேறிகளுடைய செய்கைகள் இவைகளேயாயும், நம்முடைய செல்வர்கள் இச்சோம்பேறிகளுக்கே அன்னங்கொடுக்கிறவர்களாயும் இருந்தால், இரதம் நிலையில் வாராது தெருவிலே நிற்றல் ஆச்சரியமா! அடுத்தடுத்து இப்படி நடக்குமாயின், நம்மையாளும் அரசினர் சிலகாலத்துள்ளே இரதோற்சவம் நடவாவண்ணம் தடைசெய்வது ஆச்சரியமா!



இச்சோம்பேறிகளுக்கு அன்னங் கொடுக்கிறவர்கள் "இரதத்தை இழுத்துக்கொண்டு போய் நிலையிலேவிடுஞ் சனங்களுக்கு அன்னங் கொடுப்போம்" என்று பறையறைவித்தால், பசியினால் வருந்துகின்ற அளவிறந்த ஏழைச் சனங்கள் முகின் முழக்கங்கேட்ட மயிற்கூட்டங்கள் போலப் பெருமகிழ்ச்சி கொண்டு ஓடிவந்து சேருவார்களே. ஒவ்வொருவருக்கு ஒவ்வொரு அணா வீதமாகச் செலவு செய்து, இவ்வேழைகளுக்கு அன்னங்கொடுத்தால், இவர்கள் நொடிப் பொழுதினுள்ளே இரதத்தை இழுத்துக்கொண்டுபோய், நிலையில் விட்டுவிடுவார்களே.

நம்முடைய சத்திரபதிகள், இப்படிச்செய்ய விருப்பமில்லாதவர்களாயினும் பிறிதொன்று செய்யலாமே. சத்திரவாயிலில் வரும் சோம்பேறிகளுக்கெல்லாம் 'இரதம் நிலையிலே சேர்ந்தாலன்றிச் சத்திரத்தில் அன்னம் கொடோம்' என்று வெளிப்படுத்துவார்களாயின், இச்சோம்பேறிகள் 'ஓகோ வந்தது மோசம், புத்தி புத்தி' என்று சொல்லிக்கொண்டு, நொடிப்பொழுதிலே இரதத்தை இழுத்து நிலையிலே சேர்த்துவிட்டு வந்து, போசனஞ் செய்வார்களே.

நம்முடைய தேசத்தார்களுள் அநேகர் உலோபமின்றித் தருமஞ்செய்யப் புகுந்தும், தாங்கள் நெடுங்காலம் வருந்திச் சம்பாதித்த பொருளெல்லாவற்றையும் மேற்சொல்லியபடியே பாழுக்கிறைத்து, குளிக்கப்போய்ச் சேறு

பூசிக்கொள்வார் போலப் பாவத்தையே தேடிக்கொள்கின்றார்கள். இவர்கள் ஆன்மசுகத்தை விரும்பாது, தற்காலத்திலே மூடர்களாலே சிறிது பொழுது புகழப்படுதலொன்றையே விரும்புகின்றார்கள். இவர்களாலே எண்ணில்லாத சனங்கள் சோம்பேறிகளாய் மூடர்களாய்ப் பாவிகளாய் எரிவாய் நரகத்துக்கு இரையாகுகின்றார்கள். இவைகளுக்கெல்லாம் காரணம் நல்லறிவில்லாமையேயாம். நல்லறிவு கல்வி கேள்விகளாலன்றி வாராது. ஆகலினாலே, தருமஞ்செய்யப் புகுவோர், தருமங்களையும் தருமஞ்செய்யுங் கிரமங்களையும் கற்றறிந்து கொண்டாயினும், கற்றறிந்தவரிடத்திற் கேட்டறிந்து கொண்டாயினும், விதிப்படி செய்யக்கடவர்கள்.

நல்லோரிணக்கமும் நல்லறிவுமுடையவர்கள், தங்கள் பொருளிலே தங்களுக்கும் தங்கள் பிதா மாதா முதலிய பந்துக்களுக்கும் பெண்டிர் பிள்ளைகளுக்கும் வேண்டும்வரையும் வைத்துக்கொண்டு, மற்றதைத் தங்கள் ஆன்மசுகத்தின் பொருட்டு உத்தம தருமங்களிலே செலவு செய்வார்கள். அப்படிச் செய்பவர்கள் ஆன்மசுகத்தை மாத்திரமின்றி, தற்காலத்திலும் பிற்காலத்திலும் அறிவுடையோர் வாய்ப்படும் நிலையுள்ள புகழையும் அடைவார்கள்.

பொருளினாலே ஆவசியகமாகச் செயற்பாலனவாகிய உத்தம தருமங்களைச் சொல்லுவோம்:—



க. பூர்வகாலத்திலே ஈசுராநுக்கிரகம் பெற்ற பெரியோர்களாலே செய்யப்பட்ட தேவாலயங்களுள்ளும் புண்ணிய தீர்த்தங்களுள்ளும் இலமாயுள்ளவைகளை முன்போலச் செய்வித்தல்வேண்டும். அப்படிச் செய்தவர் பெறும் பயன், முன் அவைகளைச் செய்தவர் பெற்ற பயனிலும், ஆயிரமடங்கதிகமாம். அத்தேவாலய முதலியவைகளுள்ளே பழுதடைந்த இடங்களைப் பழுதறப் புதுக்குவித்தல் வேண்டும். அப்படிப் புதுக்குவித்தவர் பெறும்பயன், அவைகளை முன் செய்தவர் பெற்ற பயனிலும் நூறுமடங்கதிகமாம்.

உ. பெரியோர்கள் தாபித்த தேவாலயங்களுள்ளே, பூசை உற்சவமுதலிய நடவாத தேவாலயங்களிலே, ஆகமவிதிப்படி வழுவறச் சிரத்தையோடு பூசை உற்சவ முதலியவை செய்வித்தல் வேண்டும்.

ங. தேவாலயத்துத் திருமதில் திருக்கோபுர முதலியவைகளிலே அரசு முதலியவை முளைத்து அவைகளுக்குச் சேதஞ்செய்யாவண்ணம், கூலியாட்களை நியோகித்து, அவர்கள் காலந்தோறும் பார்வையிட்டு அவ்வரசு முதலியவற்றைக் களைந்தெறிந்துவிட்டுச் சுண்ணம்பு பூசிக்கொண்டு வரும்படி செய்தல்வேண்டும்.

ச. தரிசனத்தின்பொருட்டுச் சமீபத்திலே தேவாலயம் இல்லாத இடங்களின் மாத்திரம் நூதனமாகத் தேவாலயம் கட்டுவித்து, இயன்றமட்டும் பூசை முதலியவைகளை விதிப்படி நடத்துவித்தல் வேண்டும்.

ரு. கல்வியறிவொழுக்கங்களாலும் ஈசுரபத்தியினாலும் சிறந்து விளங்கும் போதகர்களைக்கொண்டு, தேவாலயங்களிலும், புண்ணிய தீர்த்தக்கரைகளிலும், மடங்களிலும், சனங்களுக்குச் சமயத்தைப் போதிப்பித்தல்வேண்டும். இதுவே

எல்லாத் தருமங்களினும் மிக மேலாகிய தருமம் இத்தருமம் இல்லாவிடத்து மற்றைத் தருமங்கள் பயன்படாவாம். கடவுளுடைய குணங்களையும், மகிமைகளையும், அவரை வழிபடும் முறைமையையும், அவ்வழிபாட்டாலே பெறப்படும் பயனையும் அறியாதவர், கடவுளை வழிபட்டு உய்வது எப்படி? அவர்களுக்குத் தேவாலயமுதலியவைகளினாலே பயன் யாது?

௬. வித்தியாசாலைகளைத் தாபித்து, கல்வி யறிவொழுக்கங்களிற் சிறந்த உபாத்தியாயர்களை நியோகித்து, பிள்ளைகளுக்குக் கருவிநூல்களையும், லௌகிகநூல்களையும், சமயநூல்களையும், படிப்பித்தல்வேண்டும். கல்வியிலே மிக்க விருப்பமும் இடைபடா முயற்சியுமுள்ள பிள்ளைகளுள்ளே வறிய பிள்ளைகளுக்கு அன்னமும் வஸ்திரமும் புத்தகமுங் கொடுத்தல்வேண்டும். வருஷந்தோறும் பரீக்ஷைசெய்து, சமர்த்தர்களாகிய பிள்ளைகளுக்குப் பரிசு கொடுத்தல் வேண்டும்.

௭. அன்னசாலை இல்லாத இடத்திலே அன்னசாலை தாபித்து, சிரத்தையோடு தலயாத்திரை தீர்த்தயாத்திரை செய்பவர்களுள்ளும் கடவுளுக்கு இடைபடாத் திருத்தொண்டு செய்பவர்களுள்ளும் வறியவர்களாய் உள்ளவர்களுக்கும், தொழில்செய்து சீவனஞ்செய்யச் சத்தியில்லாதவர்களாகிய குருடர் முடவர் சிறுகுழந்தைகள் வியாதியாளர்கள் வயோதிகர்கள் என்னும் இவர்களுக்கும், அன்னங் கொடுத்தல்வேண்டும். குருடர் முதலானவர்களுக்குச் சரீரசுகத்தின்பொருட்டு அன்னங்கொடுத்தன் மாத்திரத்தால் அமையாது, அவர்களுக்கு ஆன்மசுகத்தின்பொருட்டுக் கடவுளுடைய குணமகிமைகளைப் போதிப்பித்தலுஞ் செய்ய வேண்டும்.



௮. வைத்தியசாலை இல்லாத ஊரிலே வைத்தியசாலை தாபித்து, வைத்தியசாஸ்திரத்திலே அதிசமர்த்தர்களும் இரக்கமுடையவர்களுமாகிய வைத்தியர்களை நியோகித்து, வியாதியாளர்களுக்கு மருந்து செய்வித்தல் வேண்டும்.

௯. ஆன்மார்த்த பூசைக்கும் பரார்த்தபூசைக்கும் உபயோகமாகும்பொருட்டு, விதிப்படி திருநந்தனவனம் வைப்பித்துப் பாதுகாத்தல்வேண்டும். திருநந்தனவனத்துள்ள புஷ்பங்களைக் கடவுட் பூசையினன்றிப் பிறகருமங்களிலே உபயோகித்தல் அதிபாதகம்.

௧௦. குளம் இல்லாத ஊரிலே குளந்தோண்டுவித்தல் வேண்டும். தூர்ந்த குளத்திலே தூர் வாருவித்தல்வேண்டும். படித்துறையில்லாத குளத்துக்குப் படித்துறை கட்டுவித்தல்வேண்டும். கடவுட் பூசகர்களுக்கு உபயோகமாகும் பொருட்டுக் குளக்கரையிலே பூசைமண்டபம் கட்டுவித்தல் வேண்டும். ஸ்நானம் சந்தியாவந்தனம் தீர்த்தபானம் முதலியவைகளுக்கு உபயோகமாகுங் குளங்களை சௌசஞ் செய்தல், அழுக்குவஸ்திரந் தோய்த்தல், இருதுவுடைய பெண்கள் ஸ்நானஞ்செய்தல், இலை முதலியவைகள் விழுந்து அழுகுதல் முதலியவைகளாலே அசுசி அடையாவண்ணம் காவலாளர்களை நியோகித்துப் பாதுகாத்தல்வேண்டும்.

௧௧. வழிப்போக்கர்களுக்கு நிழலிடும்படி வழிகளிலே மரங்களை வைப்பித்தல் வேண்டும். வழிகளிலும் குளக்கரைகளிலும் ஆவுரிஞ்சுகல் நாட்டல்வேண்டும். வழிகளிலே வேனிற்காலத்திலே தண்ணீர்ப்பந்தர்கள் வைத்தல் வேண்டும்.

௧௨. அநாதப்பிள்ளைகளை வளர்த்துக் கல்வி கற்பித்து விடல் வேண்டும். திக்கற்ற விதவைகளை அன்னவஸ்திரங்

கொடுத்துக் காப்பாற்றல்வேண்டும். விவாகமின்றி இருக்குங் கன்னிகைகளைப் பொருள் செலவிட்டு அவ்வவர் வருணத்திலே விவாகஞ்செய்து கொடுத்தல் வேண்டும். அநாதப் பிணங்களைச் சுடுதல்வேண்டும்.

பொருள்வைத்துக்கொண்டு தங்கள் தங்களால் இயன்றமட்டும் தருமஞ்செய்யாத உலோபிகளை, நரகத்திலே, இயமதூதர்கள், செக்கிற்போட்டு எள்ளைப்போல அரைப்பார்கள்; அதுவுமன்றி ஆலையிலிட்டுக் கரும்புபோல நருக்குவார்கள்; அதுவுமன்றி நீரிலே கலந்த உப்பு அந்நீரோடு பின்னமின்றி இருத்தல்போல அவர்கள் சரீரத்தை அக்கினியோடு பின்னமற்றிருக்கும்படி அக்கினிச்சுவாலையாகிய நரகத்தின் கண்ணே போடுவார்கள்; அவர்களை அக்கினிமயமாகிய சூலத்தலையில் ஏற்றுவர்கள்; அவர்களுடைய அவயவங்களெல்லாவற்றையும் ஈர்வாளினால் அரிவர்கள்; எலும்புகளை முறிப்பர்கள்; வறுத்த மணலை முகத்திலே போடுவர்கள். கூரியவாயினையுடைய இருப்பு முளையை அவர்கள் நெஞ்சினுள்ளே இறங்க அடித்துப் புறம்பே பொருந்திய இருப்பாணி வளையத்திலே சங்கிலியைப் பூட்டி, இரண்டிருப்புத் தூணைநாட்டி, அவைகளின்மேலே உத்திரத்தைப்போட்டு, அவைகளினடுவே நூறுவருஷங்கிடக்கும்படி கட்டித் தூக்கி, காலுங் கையும் இரண்டுபுறத்திலும் பறக்கும்வண்ணம் விடுவர்கள். அவர்களுடைய சிரசிலும், நெற்றியிலும், முகத்திலும், வாயிலும், மார்பிலும், கையிலும், காலிலும் அக்கினியிற் காய்ச்சிய



இருப்பாணிகளை அறைவர்கள். அவர்களுடைய நாக்கினடுவே துளைத்து, அக்கினியிற் காய்ச்சிய இருப்புச் சங்கிலிகளை மாட்டி, அவைகளிலே அதிபாரமாகிய இருப்புக் குண்டுகள் பலவற்றைக் கட்டித் தூக்குவர்கள். அதன்பின்பு கைகளிலும் இருப்புச்சங்கிலி பூட்டி, நான்கு மடங்கு கனமுள்ள இருப்புக்கட்டிகளைக் கட்டிவிடுவர்கள். அவர்கள் சரீரத்தை எள்ளுப்போல அரிந்தரிந்து அதனைத் தின்னச்சொல்லுவர்கள்; அஃதன்றி அக்கினியிற் காய்ச்சிய ஊசியினாலும் அவர்கள் சரீரத்தைக் குடைந்து இரத்தத்தை ஏற்றுக் குடிக்கவும் சொல்லுவர்கள்; அந்தப் புண்வாயிலே அக்கினிச் சுவாலைபோன்ற காரநீரையும் இறைத்துச் செம்பினையும் உருக்கி விடுவர்கள்; அதற்குப் பின்பு எண்ணெயினையும் காய்ச்சி விடுவர்கள். அவர்களை ரௌரவம் மகாரௌரவம் முதலிய நரகங்களெல்லாவற்றிலும் வீழ்த்தி வருத்துவர்கள்.

இப்பாவிகள் எண்ணில்காலம் நரகத்துன்பத்தை அநுபவித்தபின்பு, பூமியிலே மலந்தின்பவைகளாகிய நாய் பன்றி காகம் முதலியவைகளாய் எண்ணில்லாததரம் பிறந்துழல்வர்கள். அதன்பின், மனிதப்பிறவிகடோறும், இருமல் ஈளை சோகை வெப்பு முதலிய நோய்களினாலும், வறுமையினாலும் வருந்துவர்கள். பெரும்பசியாகிய அக்கினி சுவாலிக்க, ஒரு பிடியன்னமுங் கொடுப்பாரின்றி, கண்டவர்கள் சீச்சீ என்று ஓட்ட நாய்போலத் திரிவர்கள். வறுமை

கொடிது! நரகினுங் கொடிது! பூமியில் நரகரெனப்படுவோர் வறுமை நோயினாலே பீடிக்கப்படுவோரன்றி மற்றியாவர்! அடுத்தவர்கள் அடி அடி, என்று அடிக்க, பெண்டிர்பிள்ளைகள் கதற, குலைகுலைந்து துன்பக்கடலின் மூழ்குவர்கள். இரக்கத்தகாத இடங்களெல்லாம் இரப்பர்கள். இரக்குந்தொழிலே தங்களுக்குத் தொழிலாக, எரிகின்ற பசிக்கனல் வருத்தக் காற்றுப்போலத்திரிந்து, காகம்போலக் கதறிக் கதறிக் கால் கடுத்தோய வருந்தி, 'ஐயையோ சிறிதாயினும் பெலமில்லையே' யாவர் நமக்கு அன்னமிடுவார்கள். ஒருதுணையு மில்லையே, என்று அலறி அலறிக் கால் வீங்கி மரிப்பார்கள். இப்படி மரித்தாலும், தருமஞ் செய்யாப்பாவம் விடுமோ, விடாது. பின்னரும் பலமுறை நீசர்களாய்ப் பிறந்து, பார்த்தோரெல்லாம் பிச்சைப் பிசாசு என்று சொல்லும்வண்ணம், சுழன்று திரிந்து வருந்துவர்கள்.

தாங்களே நெடுங்காலம் வருந்தித் தேடிய பொருளைக்கொண்டு தருமஞ்செய்யாத உலோபிகள் படுந்துன்பங்கள் இவைகளேயாயின், 'நாம் தருமஞ்செய்கின்றோம்' என்று சொல்லிப் பொய்வேடங்காட்டி உலகத்தாரை வஞ்சித்து அவர் பொருளைப் பறித்துத் தருமஞ் செய்யாது விடுவோர்களும், தாங்கள் கூறியவாறே தருமஞ் செய்யப் புகுந்தும், அப்பொருளிலே அணுவளவாயினும் அபகரிப்பவர்களும், தங்களைப் பிறர் நம்பி வந்தடுத்துத் தருமஞ்செய்யும் பொருட்டுத் தங்களிடத்து ஒப்பித்த பொருளைத் தருமஞ்செய்யாது அபகரிப்பவர்களும், பிறர் தருமஞ்செய்யும்பொழுது அதனைத் தடுப்பவர்களும், படுந்துன்பங்களை, ஐயையோ! யாவர் சொல்லவல்லவர்?



பொருளுடையவர்கள், உலோபம் இல்லாமலும், வீண் செலவு செய்யாமலும், தங்கள் தங்களால் இயன்றமட்டும், மேற்கூறிய தருமங்களையும், அவைபோலும் முக்கிய தருமங்களையும், கிரமமறிந்து, விதிப்படி சிரத்தையோடு செய்யக்கடவர்கள். செய்வார்களாயின், இம்மையிலே நிலைபெற்ற கீர்த்தியையும், சந்ததிவிருத்தியையும், மறுமையிலே பரகதியையும் அடைவார்கள்.

பொருளில்லாதவர்கள், தருமத்தில் விருப்பமுடைய பிறர் தங்களிடத்து அன்போடு வணங்கித் தந்தபொருளை வாங்கி, அதில் ஓரணுவளவாயினுங் கவராது, தருமங்களை விதிப்படி சிரத்தையோடு செய்து முடிக்கக்கடவர்கள். பொருளுடையவர்களுக்கு நல்லறிவுச் சுடர் கொளுத்தித் தருமஞ் செய்யும்பொருட்டு அவர்களை ஏவினவர்கள் பரகதியை அடைவர்கள்.

ஆன்மாக்கள் சரீரத்தை விட்டு நீங்கும்பொழுது, அவர்களுக்கு உண்டாகும் அச்சமுந் துன்பமுஞ் சொல்லலாகுமா! அப்பொழுது தங்கள் வீட்டையும் தன தானியங்களையும் நினைத்து நினைத்து 'இனி இவைகளை யாவர் அநுபவிப்பவர்! நாம் உடலை விட்டுப் பிரியும்பொழுது இவைகளெல்லாம் நமக்கு அன்னிய

மாகுமே' என்று எல்லையில்லாத மனத்துயரம் மேலிட, இறப்பர்கள். ஆன்மாக்கள் இறக்கும்பொழுது படுந்துன்பம், பாம்பு தன் வாயினாலே பற்றும்பொழுது தவளை படுந்துன்பத்துக்குச் சமமாகும். அப்பொழுது பிதா மாதாப் பெண்டிர் பிள்ளைகள் முதலாயினோர் அவர்களைக் காக்க வல்லர்களோ? இல்லை இல்லை! அவர்கள் எண்ணில்காலம் வருந்தித்தேடிய திரவியங்கள் அவர்கள் போம்பொழுது துணையாகுமோ! இல்லை இல்லை! அப்பொழுது அவர்களுக்கு அழியாத் துணையாய் உடன் செல்வது அவர்கள் செய்த புண்ணியமே!

ஆதலினாலே, யாவரும், பேசக்கூடாவண்ணம் நாக்கை அடக்கி விக்கல் எழுவதற்கு முன்னே, இத்துணைச் சிறப்பினதாகிய புண்ணியத்தை விரைந்து செய்தல்வேண்டும். விக்கல் வந்தபொழுது, புண்ணியத்தைச் செய்தலேயன்றி, அங்குள்ளார் பிறரை நோக்கி 'நீங்கள் நம்முடைய பொருளைத் தருமத்திலே செலவிடுங்கள்' என்று சொல்லலும் முடியாதே. அவ்விக்கல்தான் இன்னபொழுது வருமென்பதுந் தெரியாதே. ஆதலினாலே, இறக்கும்பொழுது செய்வோம் என்று நினையாது புண்ணியத்தை நாடோறும் செய்தல்வேண்டும்.

திருவள்ளுவர் குறள்.

"அன்றறிவா மென்னா தறஞ்செய்க மற்றது
பொன்றுங்காற் பொன்றாத் துணை.
நாச்சென்று விக்குள்மேல் வாராமு னல்வினை
மேற்சென்று செய்யப் படும்."

---



## கடன்படல்.

சரீரசுகத்தின் பொருட்டாவது, தருமத்தின் பொருட்டாவது, யாவரும் தங்கள் தங்கள் வரவுக்கேற்ப, மட்டாகச் செலவு செய்தல் வேண்டும். வரவுக்கு மேலே செலவு செய்யப் புகுவோர் கடன்படத் தலைப்பட்டுப் பெருந்துன்பத்தையும் அவமானத்தையும் அடைவர். கடனுடையவருக்கு இம்மை மறுமை இரண்டினும் இன்பமே இல்லை. எத்துணைப் பெருஞ் செல்வராயினும் கடன்படத் தலைப்படுவோர், விரைவிலே தங்கள் செல்வமெல்லாம் இழந்து, தரித்திரராவர். இம்மையிலே மனிதர்கள் அநுபவிக்குந் துன்பங்களெல்லாவற்றினும், கடனால் உண்டாகுந் துன்பத்தின் மிக்க துன்பம் யாதொன்றும் இல்லை. தனிகனைத் தாயைக் கண்டாற்போலப் பேரானந்தத்தோடு கண்டு அவனிடத்தே கடன்பட்டவர், பின்பு அவன் எதிர்ப்படும்போது அவனைப் பேயைக் கண்டாற்போலப் பெரும்பயத்தோடு கண்டு நடுநடுங்கி ஒளிப்பிடந்தேடி ஓடுவர். தனிகன் - கடன் கொடுக்கிறவன்.

பொருளில்லையானால், கூலித்தொழில் செய்து வயிறு வளர்க்கினும் வளர்க்கலாம்;

பிச்சையேற்று உண்ணினும் உண்ணலாம்; பசிநோயால் வருந்தி இறக்கினும் இறக்கலாம். இவைகளெல்லாம் அவமானங்களல்ல. இவைகளினாலே பிறருக்கு யாதொரு கேடும் இல்லை. இவைகளினால் ஒருவருக்கும் அஞ்சவேண்டுவதில்லை. இவைகளாலே துன்பம் உண்டாயினும், அத்துன்பமோ மிகச் சிறிது; அச்சிறு துன்பமும், நல்லறிவோடு அமைந்து சிந்திக்கும்போது, நீங்கிவிடும். கடனோ இப்படிப்பட்டதன்று. பெருவியாதி முதலிய கொடுநோய்களினால் உண்டாகுந்துன்பத்தைப் பொறுக்கினும் பொறுக்கலாம்; கடனால் உண்டாகுந் துன்பத்தைப் பொறுத்தல் அரிது அரிது.

கடன்படக் கூசாதவர் பொய் சொல்லக் கூசார்; பொய்ப்பத்திரம் பிறப்பிக்கக் கூசார்; பொய்வழக்குப் பேசக் கூசார்; விசுவாசகாதஞ் செய்யக் கூசார்; வழக்குத்தீர்ப்பிலே பரிதானம் வாங்கக் கூசார்; களவுசெய்யக் கூசார்; கொலை செய்யக்கூசார். கடன்படல் எல்லாப்பாவங்களையும் வலிந்து கைப்பிடித்தழைக்குந் தூது.

ஒருவனுக்குத் தன்பொருளிற் சிறிது கடனாகக் கொடுத்தவன், அம்முதற்பொருள் வட்டியோடு வரும் வரும் என்று நெடுங்காலம் எதிர்பார்த்துக் கொண்டிருக்கின்றான்; சிலபோது தனக்கு மூட்டு வந்தவிடத்துத் தன் முதற்பொருளையும் வட்டியையும் நம்பித் தான் பிறனிடத்தே கடன்படுகின்றான்; தான் கொடுத்த கடன் வாராதபொழுது, தன் பிறமுயற்சிகளை விடுத்துக் கடனுடையவனைப் பலநாளும் பல



நாளும் தேடித் தேடிக் கேட்டுக் கேட்டு, அலைந்து திரிகின்றான்; அவன் அக்கடனைத் தீராதபோது, அவன்மீது தருமசபையிலே வழக்குத் தொடுத்து, தன் காலத்தையும் தன்னெஞ்சிய பொருளையும் பலவாற்றானும் அவ்வழக்கிலே போக்குகின்றான்; அவ்வழக்கை நடத்துதற்குத் தன்னெஞ்சிய பொருள் போதாதபோது, பிறனிடத்திலே கடன்படுகின்றான்; நெடுங்காலஞ் சென்றபின், தான் அவ்வழக்கிலே தோல்வியடையாது வெல்வியடைந்தானாயினும், கடனுடையவனிடத்தே தாவரசங்கமப் பொருள் உண்டோ இல்லையோ என்று பல நாளும் ஆராய்ந்துகொண்டு திரிகின்றான்; தாவரசங்கமப்பொருள் இல்லாதபோது, ஏங்கி வருந்தி மாய்கின்றான். தாவரசங்கமப்பொருள் கண்டு விக்கிரயஞ்செய்தவிடத்தும், அவைகளின்விலை தனக்கு வரற்பாலனவாகிய முதலுக்கும் வட்டிக்கும் வழக்குச் செலவுக்கும் போதாதபொழுது தான் பிறனிடத்தே வாங்கிய கடனைத் தீர்த்துவிட்டு 'என்செய்வேன் என்செய்வேன்' என்று பெருமூச்செறிந்து கவலைக்கடலின் மூழ்கித் தன்மனைவி பிள்ளைகளோடு பட்டினியிருந்து மாய்கின்றான். இது இப்படி இருக்க, தன் பொருளனைத்தையும் திருடரால் இழந்தவனோ சிலநாண்மாத்திரம் கவலையுற்றுப் பின்பு அக்கவலையை ஒழித்துவிட்டுத் தன்னால் இயன்ற தொழில் செய்து மகிழ்ச்சியோடு சீவனஞ் செய்கின்றான். ஆதலினாலே, ஒருவனுடைய பொருண் முழுதையும் திருடுதலினும், அவன்

பொருளிற் சிறிதையேனும் கடனாக வாங்கிக் கொண்டு அதனைத் தீர்க்காமை பெருங்கொடும் பாவம் பாவம்.

நம்முடைய தேசத்தாருள்ளே கடன்படும் வழக்கம் மிகப் பெரிது. கடன்படாதவர் நூற்றுவருள்ளே ஒருவர் கிடைப்பதும் மிக அரிது. அநேகர், சுபாசுப கருமங்களிலே பிறர் செலவு செய்வதைப் பார்த்து, தாங்களும் அப்படியே செலவு செய்யாதொழிந்தால் தங்களுக்கு அவமானமாகும் என்று எண்ணி, கண்ணைமூடிக் கொண்டு, அகப்படுமட்டும் கடன்பட்டுச் செலவு செய்கின்றார்கள். கடன்பட்டு வட்டி வளர்ந்தபின் முன்னுள்ளதும் இழந்து பசிநோயால் வருந்துதலும் கடனைத் தீர்க்க இயலாது தனிகர் குடியைக் கெடுத்தலும் அவமானமல்லவாம். வரவுக்கேற்ப மட்டாகச் செலவுசெய்து முட்டின்றி வாழ்தல் அவமானமாம். ஐயையோ இவர்கள் அறியாமை இருந்தபடி என்னை!

நம்முடைய தேசத்தார்கள் சுபாசுப கருமங்களிலே செலவிடும் பொருள் பெரும்பாலும் யாவரிடத்தே சேர்கின்றது? தொழில்செய்து சீவனஞ்செய்யச் சத்தியுடையவர்களாய் இருந்தும் அது செய்யாத சோம்பேறிகளிடத்தன்றோ? யாசித்துப் பொருள் சம்பாதிக்கும் இச்சோம்பேறிகளுள்ளே அநேகர் உண்டுடுத்து, எஞ்சிய பொருள்கொண்டு ஆபரணஞ் செய்வித்து, வீடுகட்டுவித்து, விளைநிலம் தோட்ட முதலியவை வாங்கி நூற்றுக்கு இரண்டு மூன்று



வீதம் வட்டிக்குக் கொடுத்துக்கொண்டு, செல்வர்களாய் இருக்கின்றார்களே. தொழில் செய்து வருந்திச் சம்பாதிப்பவர்களுள்ளே அநேகர் சுபாசுப கருமங்களிலே இவர்களிடத்திலே கடன்பட்டு, இவர்களுக்கே இறைத்துவிட்டு, வட்டிவளர்ந்தபின், இவர்கள் தங்கள் வீட்டு வாயிலில் வந்து சிறிதும் கண்ணோட்டமின்றித் தங்களை வாயில் வந்தபடி பேச, அவமானமடைந்து, தங்கள் தாவரசங்கமப்பொருளை விற்றுக் கொடுத்துவிட்டு அன்னத்திற்கு அலைகின்றார்களே.

---

அநேகர் ஆபரணஞ்செய்வித்தற்கும், பண்டி குதிரை வாங்குதற்கும், வீடு கட்டுவித்தற்கும், விளைநிலம் தோட்ட முதலியவை வாங்குதற்கும், கடன்படுகின்றார்கள். வட்டி வளர்ந்தபின், கடன் தீர்க்கப் பிறிதுவழியின்மையால், அவ்வாபரண முதலியவற்றை விற்கின்றார்கள். அவைகள் வாங்கிய விலைக்கு விலைப்படுதலே அரிது; அப்படியாகவே, அவைகளின் விலைப்பொருள் வட்டிக்கும் முதலுக்கும் எப்படிப் போதும்! போதாமையால், தங்களிடத்து முன்னுள்ள தாவரசங்கமப்பொருளையும் விற்றுக் கொடுத்துவிட்டு வறியவர்களாய் வருந்துகின்றார்கள்.

கடன்பட்டு ஆபரணந்தரிப்போரும், பண்டி குதிரை ஏறுவோரும், பவனி வருவோரும், பிறர் பார்த்து இன்பம் அனுபவிக்க, தாங்கள் தங்கள் கடனை நினைந்து நினைந்து நெஞ்சந்

திடுக்குத் திடுக்கெனப் பெருமூச்செறிந்து, துன்பமே அநுபவிக்கின்றார்கள். தாங்கள் துன்பக்கடலின் மூழ்கியும் பிறருக்கு இன்பத்தைக் கொடுக்கும் இந்த டாம்பிகர்களுடைய சிவகாருணியத்தை யாதுசொல்வோம்!

வாணிகஞ்செய்ய விரும்புவோர் இயன்றமட்டும் தங்கள் கைப்பொருளைக்கொண்டு வாணிகஞ்செய்வதே தகுதி. கைப்பொருளில்லாதவர் கடன்சொல்லிச் சரக்குகளை வாங்கி வாணிகஞ்செய்ய முயன்றால், கடன்கொடுப்பவன் வட்டிவாசிகளை அச்சரக்கின் விலையோடு சேர்த்தே கொடுப்பான். ஆதலினாலே, அவ்வாணிகம் தலையெடுக்காது.

கைப்பொருள் சிறிதும் இல்லாதவர், நிலத்திற்கென்றும், கலப்பைக்கென்றும், மாட்டுக்கென்றும், விதைக்கென்றும், இறைக்கென்றும், கடன்பட்டுப் பயிர்த்தொழில் செய்கின்றார்கள். கடன் கொடுத்தவர்களெல்லாரும் அறுப்புக்காலத்தில் வந்திருந்துகொண்டு, ஒற்றைக்கு இரட்டையாக அளந்துகொண்டுபோக, தாங்கள் போசனத்துக்கு முட்டுப்பட்டு வருந்துகின்றார்கள்.

கடனில் மூழ்கினவருள்ளே அநேகர், உத்தியோகத்தினாலே சீவிக்கப் புகுந்தும், தங்களுக்குக் கிடைக்கும் வேதனத்தைத் தனிகர்கள் மாசந்தோறும் வந்து வட்டியின் பொருட்டு வாங்கிக்கொண்டு போய்விட, தாங்கள் செலவுக்கு முட்டுப்படுகின்றார்கள். கடன் தீர்க்க



வழியில்லாமையால் உத்தியோகத்தை விட்டு ஒளித்துக்கொண்டு திரிவாரும், ஊரைவிட்டு ஓடிப்போவாரும், அநேகர். சிலர், இப்படிச் செய்தற்குக் கூடாமையால், மனவருத்தத்தினாலே நாடோறும் சரீர மெலிந்து துயருறுகின்றார்கள்.

கடனுடையவர் சிலர், ஒரு தனிகனுக்குக் கொடுக்கவேண்டிய முதலையும் வட்டியையும் மற்றொரு தனிகனிடத்து வாங்கித் தீர்த்தும், சிலகாலஞ் சென்றபின் அக்கடனையும் அப்படியே மற்றொரு தனிகனிடத்தில் வாங்கித்தீர்த்தும் வருகின்றார்கள். இப்படியே கடன் விருத்தியாய்விட, முடிவிலே தங்கள் தாவரசங்கமப் பொருள்களெல்லாவற்றையும் விக்கிரயஞ் செய்து கொடுத்துவிட்டு, வருத்தமடைகின்றார்கள். ஆதியிலே, வட்டி வளர்தற்கு முன்னரே, தங்கள் தாவர சங்கமப்பொருள்களிலே சிலவற்றை விற்றுக் கடனைத்தீர்த்துவிட்டு, எஞ்சிய பொருளைக்கொண்டு முட்டின்றிச் சீவிக்கலாமே: ஐயையோ! இவர்கள் பேதைமைக்கு யாது செய்யலாம்! பரிதாபம் பரிதாபம்!

---

கடன்படத் தலைப்படுவோர், தாம் கடன்படுதற்கு முன்பே 'இப்போது நமக்கு இந்தப் பணத்தொகை ஆவசியகமா? இந்தக்கடனைத் தீர்த்தற்குப் பொருள்வரும் வழி உண்டா? பொருள் விரைவில் வருமா! தாமதத்தில் வருமா? தாமதத்தில் வருமாயின், இதற்கு வட்டி வளர்ந்துவிடுமன்றோ? பொருள் வராத

விடத்து இக்கடனைத் தீர்க்கப்பிறிதுவழி உண்டா? இப்பொழுது இப்பணத்தொகை ஆவசியகமேயாயினும், கடன்படாது, நம்முடைய தாவரசங்கமப் பொருளிலே சிலவற்றை விற்றே செலவுசெய்யலாமே. இப்படிச்செய்தால் வட்டி மிஞ்சுமே! இப்படிச் செய்யாதொழிந்தால், வட்டி வளர்ந்தபின் நம்முடைய தாவரசங்கமப்பொருண் முற்றும் போய்விடுமே! அதன்பின்பு சீவனத்துக்கு யாது செய்யலாம்' என்று இவைகளெல்லாவற்றையும் செவ்வையாக ஆலோசிக்கக்கடவர்.

அநேகர், பலர் குடியைக் கெடுத்துத் தாமே வாழநினைந்து அவரிடத்தே கடன் வாங்கிக்கொண்டு, அவரை வஞ்சிக்கும்பொருட்டு, எல்லாப்பொருளையும், தங்கள் பந்துக்களுள்ளும் சிநேகருள்ளும் யாரையேனும் நம்பி அவரிடத்தே வைத்துவிட்டு, பின்பு தாம் அவராலே வஞ்சிக்கப்பட்டு, யாதொன்றும் பேசமாட்டாது ஏங்கி வருந்துகின்றார்கள். தாம் பிறரை வஞ்சித்தும், தம்மைப் பிறர் வஞ்சியார் என்று நினைக்கும் பேதைமையை யாது சொல்லலாம்! "நாமொன்றெண்ணத் தெய்வமொன்றெண்ணியது" என்னும் பழமொழியின் உண்மையை இவர்களிடத்தே காணலாம்.

அநேகர் தாங்கள் சிறிதும் கடன்படாதவர்களேயாயினும், கடன்படத் தலைப்பட்டுப் பிறர் பொருளை நம்பித் திரிகின்றவர்களோடு சிநேகஞ்செய்து, அவர்கள் பொருட்டுப் பிணை நின்று,



தங்கள் தாவரசங்கமப் பொருளெல்லாம் இழந்து, தங்கள் பெண்டிர் பிள்ளைகளாலும் அவமதிக்கப்பட்டுப் பசிநோயால் வருந்துகின்றார்கள்.

---

நம்முடைய தேசத்தாருள் அநேகர் கடன்பட்டுப் பிறர் குடியைக் கெடுத்துத் தருமஞ் செய்கின்றார்கள். இது தருமமாகுமா, ஆகாது. பொருளினாற் செயப்படுவனவாகிய தருமங்களைப் பொருளுடையார் செய்யாமையே பாவம்; வறியவர் செய்யாமை பாவமன்று. பொருளின்றிச் செய்யப்படுவனவாகிய தருமங்கள் எண்ணில்லாதன உண்டு. அவை கடவுளைச் சிந்தித்தல், துதித்தல், வணங்கல், அவர் குணமகிமைகளைக் கேட்டல், அவைகளைப் பிறருக்குப் போதித்தல், கொல்லாமை, பிறர் பொருளிச்சியாமை, பிறன் மனையாளை விரும்பாமை, வாய்மை, பொறை, இரக்கம் முதலியவைகளாம். பொருளில்லாதவருக்கு இத்தருமங்களே அமையும். பொருளுடையவருக்கோ, பொருளாற் செய்யப்படுந் தருமங்களோடு இத்தருமங்களும் வேண்டும். இத்தருமங்களின்றி அத்தருமங்கள் சிறிதும் பயன்படாவாம்.

---

கடனுடையவன் தான்வாங்கின கடனைக் கொடாவிடின், அவன்செய்த புண்ணியமெல்லாம் தனிகனைச்சாரும். வாங்கின கடனைத் தீராமல் இறந்துபோன கடனுடையவன், அளவில்லாதகாலம் நரகத்துன்பத்தை அநுபவித்தபின்பு, தனிகன் வீட்டிலே, கூலியாளாகவும்,

பெண்ணாகவும், அடிமையாகவும், குதிரையாகவும், மாடாகவும், கழுதையாகவும், பிறந்துழைப்பான்.

ஒருவன், தன்னிடத்தே பிறனால் நம்பி வைக்கப்பட்ட பொருளைத் தன்புத்திரனைப் போலக் காத்து, பொருளை வைத்தவன் கேட்கும் பொழுதே கொடுக்கக்கடவன். அப்படிப் பொருளைக் காத்துக்கொடுத்தால், அவன், இரணியதான முதலிய தானங்களைக் கொடுத்தவனுக்கு உண்டாகும் பலத்தையும், அடைக்கலம் புகுந்தவனைக் காத்தவனுக்கு உண்டாகும் பலத்தையும் அடைவான். அந்தப்பொருளைக் கவர்ந்தவன் தன் புத்திரனையும் சினேகன் முதலானவர்களையுங் கொன்ற பாவத்தை அடைவான்.

ஒருவன் வாக்குத்தத்தம் பண்ணின பொருளைக்கொடாது விட்டாலும், கொடுக்கப்பட்டதை மீட்டுங்கொள்ள விரும்பினாலும், அவன் பாவியாவான். ஒருவன் வாக்குத்தத்தம்பண்ணின பொருளைக்கொடாவிடின், அந்தப் பொருள் கடன்பொருளைப் போல அவனை இம்மையினும் மறுமையினுந் தொடரும். அவன் பலவகையாகிய நரகங்களை அடைந்து, நாய்ப்பிறப்பு முதலிய இழிவாகிய பிறப்பையும் அடைவான். தருமந்தப்பி நடக்கின்றவன்பொருட்டு வாக்குத்தத்தம்பண்ணின பொருளைக் கொடாதவன் குற்றமுடையவனல்லன்.

---



# இரசவாதம்.

பேராசை யுடையோர் இனி வரும் பயனை விரும்பி இப்போது உள்ளதையும் இழக்கின்றார். பேராசை கிலேசத்தையே விளைவிக்கும். பேராசை யுடையோருக்கு ஒருபொழுதும் திருப்தி பிறவாது. உள்ளதுபோதும் என்று அமைந்த மனமே குறைவற்ற களஞ்சியம். எத்துணைப் பெருஞ் செல்வராயினும், திருப்தியில்லாதவர் ஒரு பொழுதும் சுகமடையார். இத்தேசங்களிலே அநேகர் பேராசைகொண்டு இரசவாதத்தினாலே பெரும் பொருள் சம்பாதிக்கலாம் என்று துணிந்து, பொய்வேடம் பூண்டவர்களாலே வஞ்சிக்கப்பட்டு, தங்களிடத்து முன்னுள்ள பொருளையும் இழந்து, வறுமையுற்று வருந்துகின்றார்கள்.

சூரன் என்னும் ஓரசுரன் தவவலிமையினாலே ஆயிரத்தெட்டண்டங்களை நூற்றெட்டுகம் அரசாண்டான் என்று கந்தபுராணத்திலே சொல்லப்பட்டிருக்கின்றது. அந்தச் சூரன் தவஞ்செய்யப் புகுதற்கு முன்னரே, அவனுடைய பிதாவாகிய காசிபமுனிவர், அவனுக்கு மார்க்கண்டேய முனிவர் கடவுட் பூசை செய்து இயமனைவென்ற சரித்திரத்தைச் சொல்லினார். அம்மார்க்கண்டேய முனிவருடைய சரித்திரம் சூரன்பிறக்க எண்ணில்லாத காலத்துக்கு முன்னே நடந்தது. அம்மார்க்

கண்டேய முனிவருடைய பிதா மிருகண்டுமுனிவர். அவர் பிதா மிருகசண்டுயமுனிவர். அவர் பிதா ருச்சகமுனிவர். அக்குச்சகமுனிவர் காலத்திலே ஒருவன் இரசவாதத்தினாலே பெரும்பொருள் சம்பாதிக்க விரும்பி, தன்னிடத்துள்ள பொருளையும் இழந்து, தான் செய்த தருமங்களையும் இழந்த சரித்திரத்தைச் சொல்வாம்.

கலிங்கநாட்டிலே அரிபுரத்திலே வணிகர் குலத்திலே தேவதத்தன் என்றொருவன் இருந்தான். அவனுடைய புதல்வனாகிய தருமதத்தன் மிக்க செல்வத்தையுடையவனாய், தருமங்களைச் செய்து பெரும்புகழ் பெற்றான். அவன் தன்னுடைய தந்தையும் தாயும் இறத்தலும், தமியனாகித் துயருழந்து, பின் ஒருவாறு தேறியிருக்கும்பொழுது, ஓரிரசவாதி முண்டிதமாகிய சிரசையும், குண்டலம் பொருந்திய காதையும், விபூதியைத் திரிபுண்டரமாகத் தரித்த நெற்றியையும், உருத்திராக்ஷமாலையையும், பிரப்பு பொருந்திய கையையும் உடையவனாய், அவனிடத்து வந்தான். தருமதத்தன் அவ்விரசவாதியைக் கண்டு, வணங்கி, தன் வீட்டினுள் அழைத்துக்கொண்டு சென்று, அமுது செய்வித்து, முகமன்கூறி, பின்பு, அவனை நோக்கி, 'சுவாமீ, நீர் இங்குவந்த தென்னை' என்றான். வாதி அதுகேட்டு, 'நம்மிடத்து ஒரு வித்தை உளது. அது எவருக்கும் பேசுந்தன்மையதன்று. குருபத்தியுடையோருக்கு மாத்திரம் சொல்லத்தக்கது. நெஞ்சிற்சிறிதும் மாசில்லாத



உனக்கு நாம் அதைச்சொல்லுவோம். இரசத்தினாலே வேண்டியபொன்னைச் செய்வோம். காரிரும்பை நாகமாக்குவோம். மீட்டும் அதனைப்பொன்னாக்குவோம். ஈயத்தையும் இரசத்தையும் வெள்ளியாக்குவோம். வங்கத்தைப் பொன்னாக்குவோம். இரும்பிற் செம்புண்டாக்குவோம். ஈயத்தையும் அப்படியே செய்வோம். நமது வன்மையை உள்ளபடி சொல்ல விரும்பினேமாயின், அளப்பில்லாத வருடங்கள் வேண்டும். ஒரு பொன்னைக் கோடி பொன்னாக்குவோம். கோடி பொன்னை மலைபோலக் கோடி பொன்னாக்குவோம். உன்பொருளனைத்தையும் தருவாயாயின், உன் வீட்டிலே அப்பொருளை வைத்தற்கு இடமில்லையென்னும்படி செய்வோம்' என்றனன். இப்படிச் சொல்லிய வாதியைத் தருமதத்தன் வணங்கி, முன்னே தன்னிடத்துள்ள நிதியையும், பின்னே தன்னாலே சம்பாதிக்கப்பட்ட நிதியையும் பேடகங்களில் உள்ள ஆபரணங்களையும் கொண்டுவந்து அவன் முன் வைத்தான். வாதி அவற்றை நோக்கி 'ஓகோ! வணிகரிற்றிலகனாகிய உன்னிடத்துள்ள செல்வம் இதுதானோ' என்று கைதட்டிச் சிரித்து, 'இப்பொருள் நமது வித்தையில் இறைக்கும் போதாது. இது நாம் உருக்குமுகத்திலே சிந்துகின்ற அளவுங்காணாது. நீ நமக்குப் பின்னே திரிவாயாயின், அளப்பில்லாத பொருள் தருவோம். இதனை வைத்துக்கொள்வாயாக' என்றான். அப்பொழுது தருமதத்தன் 'சுவாமீ, கோபிக்கவேண்டாம். நீர் வேண்டிய பெருநிதி

முழுதும் தேடிக்கொண்டு வருவேன். இரும்' என்று சொல்லிக் கொண்டுபோய், வஸ்திரங்களையும், நிலங்களையும், இரத்தினங்களையும், ஆபரணங்களையும், வீடுகளையும், ஆடுமாடுகளையும் விற்று, மதிமயக்கத்தினாலே தருமத்தையும் விற்றான். இவ்வாறு தேடிய பெருநிதியனைத்தையும் கொண்டுவந்து வாதிமுன் வைத்து நிற்றலும், வாதி மனமகிழ்ந்து, அவையெல்லாவற்றையும் அக்கினியிலே உருக்கித் திரட்டி, ஒருருவாக்கி, அதனிரட்டி எடைகொண்ட இரசத்தை ஓரம்மியிலிட்டு, அப்பொன் முழுதையும் உரைத்து, அதனை உருட்டி, மட்குகையினுள்ளே மருந்தை உள்ளுறுத்திப் பொன்னை உள்ளிட்டு, அதனிடத்தே ஓர் களங்கத்தை இட்டு, சீலைமண் செய்து, அக்கினியிலே நூற்றெட்டுக் குக்குடபுடமிட்டு, அதனைப் பார்த்து. 'மிகவும் மாற்றுவந்தது; இனி ஒரு வராகியிலே பழுக்கும், காற்றில்லாத ஒருறையுள்காட்டு' என்றான். தருமதத்தன் ஒருறையுளைக் காட்டலும், இரசவாதி அதனுள்ளே போய், விறகின்மீது, சுடலையக்கினிகொண்டு வராகிமேலிட்டுப் புகைப்பித்தான். அதனாலே தருமதத்தன் கண்ணீர் பொழிய, சரீரம் வெதும்ப, எங்கும்வேர்ப்ப, ஊமைபோல ஒன்றும் பேசாமலும், போகமுயலாமலும், சும்மாவிருந்தான். அப்பொழுது இரசவாதி பொற்குகையை எடுத்து, மெல்லெனத் தனது வஸ்திரத்தினுள்ளே மறைத்துக்கொண்டு, அதுபோலத் தன்னிடத்திருந்த வேறொரு குகையைப் பக்கத்து வைத்து, புகை



யைத் தணித்து, தருமதத்தனை நோக்கி, 'இக்குகையை உன்கையினால் எடுத்து, அவ்வக்கினிமேல் வைப்பாயாக' என்றான். தருமதத்தன் அப்படிச் செய்தலும், இரசவாதி அதற்குரியன யாவற்றையும் அமைத்துச் சேமஞ்செய்து, தருமதத்தனை நோக்கி, 'நீ உணவில்லாமலும், ஒருவரோடும் பேசாமலும், பிறரைப் பாராமலும், மூன்றுநாள் நம்மையே சிந்தித்துக்கொண்டிருக்கக்கடவாய். நாம் காளி சந்நிதியிலே ஒருயாகம் முடித்தல் வேண்டும். முடித்துக்கொண்டு நாலாநாள் இங்கே வருவோம்' என்றான். தருமதத்தன் 'அப்படியே செய்க' என்று சொல்லி அவனை மும்முறை வணங்கி, அவன்பின் செல்லாது நின்றான். இரசவாதி அங்குநின்றும் விரைந்து நெடுந்தூரம்போய், உருமாறி வேறோரிடத்தை அடைந்தான். தருமதத்தன் இரசவாதி விதித்தபடியே இருந்து, மூன்று நாட் செல்லலும், 'பெரியவர் சொல்லிய நாளெல்லை சென்றுவிட்டதே, இன்று வந்திலர். அவர் சொற்றப்புவாரா' என்று தளர்ந்து, காளிகோயிலினும் நகரத்தினும் அவனைத் தேடிக் காணாது மயங்கி வாடி, வீட்டுக்குத் திரும்பினான். முன்வைத்த குகையை எடுத்துப் பார்த்து, அது இரும்பாயிருக்கக்கண்டு, மிகுந்த துயரமடைந்து வீழ்ந்திறந்தான்: அவன் தருமத்தை விற்ற பாவத்தினாலே யானையாய்ப் பிறந்தான்.

கடவுட் பூசைசெய்து இயமனை வென்ற புண்ணிய யுகத்தினும் இரசவாதத்தினாலே

பொருள் சம்பாதித்தல் இயலாதிருப்ப, நம்மவர்கள் அநேகர் இப்பாவயுகத்தில் இரசவாதத்தினாலே பொருள் சம்பாதிக்கலாம் என்று மயங்கி அலைவது என்ன பேதைமையோ அறியேம்! இரசவாத மயக்கத்தினாலே உள்ள பொருளையும் இழந்து வீண்காலம் போக்காமல் தங்கள் தங்களால் இயன்ற தொழில்களைச் செய்து வருந்திப் பொருள் சம்பாதித்து, தங்கள் அநுபவத்தின் பொருட்டும் தருமத்தின் பொருட்டும் செலவு செய்து, வாழ்ந்திருக்கக் கடவர்கள்.

---

## வருணம்.

பிராமணன், க்ஷத்திரியன் வைசியன், சூத்திரன் என நான்கு வருணத்தார் உண்டு. பிரமாவினுடைய முகத்தினின்றும் பிராமணரும், புயத்தினின்றும் க்ஷத்திரியரும், தொடையினின்றும் வைசியரும், பாதத்தினின்றும் சூத்திரருந் தோன்றினர்.

பிராமணருக்கு உரிய தொழில்களாவன: வேதமோதலும், வேதமோதுவித்தலும், யாகஞ்செய்தலும், யாகஞ்செய்வித்தலும், தானங்கொடுத்தலும், தானமேற்றலும் ஆகிய ஆறுமாம்.

க்ஷத்திரியருக்கு உரிய தொழில்களாவன: வேதமோதலும், யாகஞ்செய்தலும், தானங்கொடுத்தலும், பூமியைக் காத்தலும், யானை



குதிரை தேரூர்தலும், படைக்கலம் பயிலலும் ஆகிய ஆறுமாம்.

வைசியருக்கு உரிய தொழில்களாவன: வேதமோதலும், யாகஞ்செய்தலும், தானங்கொடுத்தலும், பசுக்காத்தலும், வாணிகஞ்செய்தலும், பயிரிடுதலும் ஆகிய ஆறுமாம்.

சூத்திரருக்கு உரிய தொழில்களாவன: பயிரிடுதலும், வாணிகஞ்செய்தலும், பசுக்காத்தலும், முதன் மூன்று வருணத்தாருக்கும் அனுகூலமாகிய தொழில்களைச் செய்தலும் ஆகிய நான்குமாம். சூத்திரர் இதிகாசபுராண முதலியவைகளை ஓதுதற்கும், வேதத்தின் பொருளைக் கேட்டற்கும், பாகயஞ்ஞ * விதியினாலே பிதிர்க்கிரியை முதலிய கருமங்களைச் செய்தற்கும், தானங்கொடுத்தற்கும் அதிகாரிகளாவர். சூத்திரர் சற்சூத்திரரெனவும், அசற்சூத்திரரெனவும் இருவகைப்படுவர். மதுமாமிசபக்ஷணம் இல்லாதவராய் நூல்களில் விதிக்கப்பட்ட சமயாசாரமுடையவராய் உள்ள சூத்திரர் சற்சூத்திரர். அவரல்லாத சூத்திரர் அசற்சூத்திரர். சற்சூத்திரரும் வைசியரும் சமமேயாவர்.

நான்குவருணத்துள்ளும் தத்தம் வருணத்தாடவர்களாலே விவாகஞ் செய்யப்பட்டவர்களாய் வியபிசாரதோஷம் இல்லாதவர்களாய் உள்ள தருமபத்தினிகளிடத்திலே பிறந்த

* பாகயஞ்ஞமென்பது பஞ்சமகாயஞ்ஞங்களுள்ளே பிரமயஞ்ஞமல்லாத நான்குமாம்.

பிள்ளைகளையே அவ்வவ் வருணத்தார்களாக அறிதல்வேண்டும்.

பிராமணன் தன்னிற்றாழ்ந்த மூன்றுவருணத்துப் பெண்களையும், க்ஷத்திரியன் தன்னிற்றாழ்ந்த இரண்டுவருணத்துப் பெண்களையும், வைசியன் தன்னிற்றாழ்ந்த ஒருவருணத்துப் பெண்ணையும் விவாகஞ்செய்து பெற்ற பிள்ளைகள் அறுவரும் அநுலோமர். க்ஷத்திரியன் தன்னினுயர்ந்த ஒருவருணத்துப் பெண்ணையும், வைசியன் தன்னினுயர்ந்த இரண்டுவருணத்துப் பெண்களையும், சூத்திரன் தன்னினுயர்ந்த மூன்றுவருணத்துப் பெண்களையும் கூடிப் பெற்ற பிள்ளைகள் அறுவரும் பிரதிலோமர். பிராமணர் முதலிய நான்கு வருணத்தாரும் பிறர் மனைவியரைச் சோரத்தாற் கூடிப் பெற்ற பிள்ளைகள் அந்தராளர். அநுலோமர் முதலாயினோர் நான்கு வருணத்துப் பெண்கள் முதலாயினோரோடு கலந்து பெற்ற பிள்ளைகள் விராத்தியர்.

பிராமணர் முதலாயினோருக்குப் பிறந்தவுடனே கொப்பூழ்க்கொடி அறுப்பதற்கு முன்னே சாதகருமஞ் செய்தல் வேண்டும். சாதகருமமென்பது பிறப்பைக் குறித்துச் சிசுவுக்குச் செய்வதோர் சுத்தி. அப்போது வெல்லம் நெய் தேன் மூன்றையுஞ்சேர்த்துப் பொன்னை உரைத்து, அந்தக்குழந்தைக்கு நாவிலே தடவல்வேண்டும்.

பிராமணருக்குப் பத்தாநாள் பன்னிரண்டாநாளிலும், க்ஷத்திரியருக்குப் பன்னிரண்டாநாள் பதினாறாநாளிலும், வைசியருக்கு இருபதாநாள் இருபத்திரண்டாநாளிலும், சூத்திரருக்கு முப்பதாநாள் முப்பத்திரண்டாநாளிலும், நாமகரணஞ் செய்தல்வேண்டும். நாமகரணமென்பது பெயரிடுதல். பெயரிடுமிடத்து, தாம் வழிபடுகடவுளுடைய பெயரையேனும் தம்பெரியோருடைய பெயரையேனும் ஜன்மநக்ஷத்திரத்திற்கு இசைய இடுதல்வேண்டும்.



பத்தாநாளிலேனும், பன்னிரண்டாநாளிலேனும், பதினாறாநாளிலேனும், ஆறாமாசத்திலேனும், ஏழாமாசத்திலேனும், எட்டாமாசத்திலேனும், கர்ணவேதனஞ் செய்தல்வேண்டும். கர்ணவேதனமென்பது காது துளைத்தல்.

மூன்றாமாசத்திலே சூரியதரிசனமும், நான்காமாசத்திலே சந்திரதரிசனமும் பசுதரிசனமும் செய்வித்தல் வேண்டும்.

ஆறாமாசத்திலேனும், எட்டாமாசத்திலேனும், பத்தாமாசத்திலேனும், பன்னிரண்டாமாசத்திலேனும் அன்னப்பிராசனம் செய்தல்வேண்டும். அன்னப்பிராசனமென்பது சோற்றை உண்பித்தல்.

பிறந்த வருஷத்தின் அந்தத்திலேனும், மூன்றாம்வருஷத்திலேனும், ஐந்தாம்வருஷத்திலேனும், ஏழாம்வருஷத்திலேனும் சௌளஞ் செய்தல்வேண்டும். சௌளமென்பது குடுமி வைத்தல். சௌளம் இல்லையாயின், யாதொரு கிரியைக்கும் உரிமை இல்லை. ஐந்தாம்வருஷத்

திலே வித்தியாரம்பஞ் செய்தல் வேண்டும். வித்தியாரம்ப மென்பது கல்வி தொடங்குதல்.

---

கருப்பமான காலமுதலாகப் பிராமணருக்கு எட்டாம் வருஷத்திலும், க்ஷத்திரியருக்குப் பதினொராம் வருஷத்திலும், வைசியருக்குப் பன்னிரண்டாம் வருஷத்திலும் உபநயனஞ் செய்தல்வேண்டும். உபநயனமென்பது பூணூல் தரிப்பித்தல். பிரமதேசை விரும்பும் பிராமணனுக்கு ஐந்தாம் வயதிலும், பலத்தை விரும்பும் க்ஷத்திரியனுக்கு ஆறாம் வயசிலும், பொருளைவிரும்பும் வைசியனுக்கு எட்டாம் வயசிலும் உபநயனஞ்செய்யத்தக்கது. சொன்ன காலங்களிலே செய்யத் தடை உண்டானபோது, பிராமணனுக்குப் பதினாறுவயசு வரையிலும், க்ஷத்திரியனுக்கு இருபத்திரண்டுவயசு வரையிலும், வைசியனுக்கு இருபத்துநான்குவயசு வரையிலும், உபநயனஞ் செய்யலாம். இம்மூன்று வருணத்தாரும் இங்கே வரையறுக்கப்பட்ட காலத்தில் உபநயனஞ் செய்யப்பெறாதொழியின், காயத்திரி மந்திரத்துக்கு உரிமையின்றிப் பிரஷ்டராவார்கள். இவர்களுக்கு வேதஞ் சொல்லலும், பெண் கொடுத்தலும், இவர்களிடத்திலே பெண்வாங்கலும் ஆகாவாம். சூத்திரருக்கு உபநயனம் தீக்ஷையிலே செய்யப்படும்.

பெண்களுக்குச் சாதகருமமுதலிய கருமங்களை மந்திரமின்றிச் செய்தல்வேண்டும். பெண்களுக்கு விவாகமே உபநயனமாகும். கணவ



னுக்குப் பணிவிடை செய்தலே குருவழிபாடாகும். சமையல் முதலிய வீட்டுவேலையே அக்கினி காரியமாகும்.

பிராமணகுலத்திற் பிறந்தவனும், உபநயனத்துக்கு முன்பு சூத்திரனுக்கு ஒப்பானவன். பிராமணர் முதலிய மூன்று வருணத்தாரும், உபநயனத்தினாலே துவிசத்துவம் அடைந்த பின்பே, வேதம் ஓதுதற்கு அதிகாரிகளாவர். துவிசத்துவமென்பது இருபிறப்புடைமை. உபநயனஞ்செய்து கொண்டவனாயினும், வேதமோதாதவன் ஒரு வைதிக காரியத்துக்கும் யோக்கியனாகான்; அவன் சூத்திரனாவன். வேதம் ஓதும் அந்தணர்களே உயர்ந்தவர்கள். அவரினும் வேதப்பொருளை அறிந்த பண்டிதர்கள் உயர்ந்தவர். அவரினும் விதிவிலக்குகளை நிச்சயமாக அறிந்தவர்கள் உயர்ந்தவர். அவரினும் விலக்கியவற்றை ஒழித்து விதித்தனவற்றைச் செய்பவர்கள் உயர்ந்தவர். அவரினும் விருப்பு வெறுப்பின்றிப் பிரமத்தை அறியும் ஞானிகள் உயர்ந்தவர். வேதம் ஓதாத பிராமணன் மரத்தினாற் செய்யப்பட்ட யானையும் தோலினாற் செய்யப்பட்ட மிருகமும்போல பெயர் மாத்திரம் உடையனன்றிப் பயன்படுதலிலன். ஒழுக்கமில்லாத பிராமணனுக்கு வேதத்திற் சொல்லிய பலன் கிடைப்பதில்லை. ஒழுக்கமுடைய பிராமணனுக்குச் சகலபலனும் குறைவின்றிக் கிடைக்கும்.

பிராமணர் முதற் சூத்திரர் இறுதியாகிய நான்கு வருணத்தாரும் தீக்ஷையினாலே துவிசத்

துவம் அடைந்தார்களாயின், ஆகமம் ஓதுதற்கு அதிகாரிகளாவர். பிராமணர் முதலிய மூன்று வருணத்தாரும், தீக்ஷை பெற்றவர்களாயின், வைதிகக்கிரியைகளையும் ஆகமக்கிரியைகளையும் அநுட்டித்தல்வேண்டும். தீக்ஷை பெறாதவர்களாயின், வைதிகக்கிரியைகளை மாத்திரம் அநுட்டித்தல் வேண்டும். சூத்திரர்களும் நான்கு வருணத்துப் பெண்களும், தீக்ஷை பெற்றவர்களாயின், ஆகமக்கிரியைகளை அநுட்டித்தல் வேண்டும். தீக்ஷை பெற்றவர்கள் ஆகமக்கிரியைகளை அநுட்டியாதொழிந்தால், தீக்ஷையினாலே பயனில்லை. தீக்ஷையில்லாத சூத்திரர் முதலானவர்களுக்குப் பிரணவமின்றி நமோந்தமாயுள்ள தேவ தோத்திரங்களைக் கொண்டு கிரியைகள் செய்தலே தகுதி.

எல்லாரும் தங்கள் தங்கள் வருணாச்சிரமங்களுக்கு உரிய ஒழுக்கங்களை வழுவாமல் அநுட்டித்தல் வேண்டும். ஒழுக்கமில்லாதவர் வேதாகமங்களை ஓதினாராயினும், அவைகளினாலே பயன் அடையார். சுத்தமாகிய ஜலத்தைத் தலையோட்டில் வைப்பினும், நல்ல பாலை நாய்த்தோற்றுருத்தியில் வைப்பினும், அவை கெட்டுப்போதல்போலவே, ஒழுக்கமில்லாதவர் கற்ற சாத்திரங்கள் கெட்டுப்போகும். தீக்ஷை உடையவராயினும், ஒழுக்கமில்லாதவராயின், தீக்ஷையில்லாதவரோடொப்பர். சூத்திரனாயினும் ஒழுக்கமுடையவனாயிற் பிராமணனெனப்படுவன். பிராமணனாயினும் ஒழுக்கமில்லாதவனாயிற் சூத்திரனெனப்படுவன். பிராமணருள்ளும் பிரம க்ஷத்திரிய வைசிய சூத்திரர் உண்டு. க்ஷத்திரியருள்ளும் பிரம க்ஷத்திரிய வைசிய சூத்திரர் உண்டு. வைசியருள்ளும் பிரம க்ஷத்திரிய வைசிய சூத்திரர் உண்டு. சூத்திரருள்ளும் பிரம க்ஷத்திரிய வைசிய சூத்திரர் உண்டு. அவரவர் நடைகளினாலே அவரவரைப் பகுத்தறிந்து கொள்ளலாம்.



நான்கு வருணத்தாருக்கும் ஆகமத்தில் விதிக்கப்பட்ட தீக்ஷைக்கு அருகரல்லாத மற்றைச் சாதியார்கள் ஆசாரியரை அடைந்து, தங்கள் தங்கள் அதிகாரத்துக்கு ஏற்பத் திருநோக்கம் முதலிய தீக்ஷையைப்பெற்று, கடவுளுடைய குணமகிமைகளை அறிந்துகொண்டு அவரைத் தியானித்துத் தோத்திரம் பண்ணலும், தேவாலயத்தை வலஞ்செய்து வணங்குதலும் செய்வார்களாயின், பரகதி பெற்று உய்வார்கள்.

---

## ஆச்சிரமம்.

பிரமசாரி, கிருகஸ்தன், வானப்பிரஸ்தன், சந்நியாசி என நால்வகை யாச்சிரமத்தார் உண்டு.

### பிரமசாரி.

பிரமசாரியானவன் உபநயனஞ் செய்யப்பெற்று ஆசாரியரிடத்திலிருந்து ஓதுதலும் விரதங்காத்தலுமாகிய ஒழுக்கத்தை உடைய

வன். பிரமசாரி சகல நற்குண நற்செய்கைகளோடுங்கூடி, ஆசாரியரை விதிப்படி வழிபட்டுக்கொண்டே வேதமுதலியவைகளை ஓதல் வேண்டும். வேதமோதும்போது ஆசாரியரை வணங்கி, வடக்குமுகமாகவேனும் கிழக்குமுகமாகவேனும் கைகளைக் கட்டிக்கொண்டு ஓதல் வேண்டும். சுக்கிலபக்ஷத்தில் வேதங்களையும் கிருஷ்ணபக்ஷத்தில் வேதாங்கங்களையும் ஓதல் வேண்டும். அட்டமி, சதுர்த்தசி, அமாவாசை, பௌர்ணிமை, பிரதமை, அயனம், விஷுவம் முதலிய விலக்கப்பட்ட தினங்களிலும் சந்தியா காலங்களிலும் வேதாகமங்களை ஓதலாகாது. வேதாங்கம் புராணம் தருமநூல் முதலியவைகளை அமாவாசை பௌர்ணிமைகளினன்றி மற்றை யெந்நாட்களினும் ஓதலாம். சந்தியாவந்தன முதலிய கருமங்களுக்கு உரியவைகளையும் நித்தியபாராயணத்துக்கு உரியவைகளையும் எந்நாளும் ஓதலாம். பிரமசாரி, சந்தனம் பூமாலை தாம்பூலம் முதலிய போக்கியப்பொருள்களை அநுபவிக்கலாகாது. பெண்கள் சமீபத்தில் இருத்தலும், அவர்களோடு கலந்து பேசுதலும், கீதங்கேட்டலும், கூத்துப்பார்த்தலும் ஆகாவாம்.

---

பிரமசாரிகள், பௌதிகப்பிரமசாரியெனவும், நைட்டிகப் பிரமசாரியெனவும் இருவகையர். பாலியவயசு தொடங்கிக் கன்னிகா கலியாணகாலம்வரையும் விரத நியமித்துத் துறவியாய் இருப்பவன் பௌதிகப்பிரமசாரி. மரணாந்தம் விரத நியமித்துத் துறவியாய் இருப்பவன் நைட்டிகப்பிரமசாரி.



பௌதிகப்பிரமசாரி, ஆசாரியரிடத்தில் ஓதற்பாலனவாகிய வேதமுதலியவைகளை அருத்தஞானம் வருமளவும் ஓதிய பின்பு, அவருக்குத் தக்ஷிணை கொடுத்து, அவரநுமதி பெற்று, சமாவர்த்தனமென்னும் விரதத்தை நிறைவேற்றி, விவாகஞ்செய்து கொள்ளல்வேண்டும். வேதமுதலிய நூல்களைக் கற்றானாயினும் அவைகளின் பொருளை அறியாதவன் சும்மா கத்துகின்ற காகத்துக்குச் சமமாவன்.

நைட்டிகப் பிரமசாரி பெண்களுடைய பெயரையுஞ் சொல்லாமல், அவர்கள் வடிவத்தையும் நினையாமல் இந்திரிய நிக்கிரகஞ் செய்துகொண்டிருத்தல்வேண்டும். அவன், போகத்தின்கண்ணே கருத்துற்றானாயின், ஆசாரியரிடத்திற் சென்று, உண்மையை விண்ணப்பஞ்செய்து, ஆகமத்தில் விதித்த விதிப்படியே அவர் சந்நிதியிலே நைட்டிகவிரதத்தை இறக்கி ஸ்நானஞ்செய்து, அவரிடத்தே வெள்ளைவஸ்திரம் இரண்டுபெற்று, பிராயச்சித்தஞ் செய்து முடித்து, அவரநுமதி பெற்றுக்கொண்டு விவாகஞ்செய்து கொள்ளல் வேண்டும். இப்படிச் செய்யிற் குற்றம் இல்லை. இப்படி விரதத்தை இறக்காது நைட்டிகப்பிரமசாரியாயே இருந்துகொண்டு பெண்களுடன் கூடுவானாயின், தன் சரீரத்தின் வளர்ந்த உரோமம் எத்தனை உண்டு அத்தனை வருஷம் மிகக்கொடிய ரௌரவ முத

வியநரகங்களிற் கிடந்தழுந்துவன். சுகசன்னி, நீரிழிவு, சயம், பெருவியாதி முதலிய நோய்களால் வருந்துவன். இவனுக்குப் பரிகாரம் ஒரு நூலிலும் இல்லை.

### கிருகஸ்தன்.

கிருகஸ்தனாவான் விதிப்படி ஒரு பெண்ணை விவாகஞ் செய்துகொண்டு தருமநெறியாலே பொருள் சம்பாதித்து, இல்லறத்தை நடத்துவோன். விவாகஞ் செய்யப்படுங் கன்னிகை தன் வருணத்திற் பிறந்தவளாயும், தன்கோத்திரத்திற் பிறவாதவளாயும், மகள் தங்கை என்கிற முறையிற் சேராதவளாயும், தனக்கு இளையவளாயும், முன்னொருவராலும் விவாகஞ் செய்யப்படாதவளாயும், மேன்மையும் நல்லொழுக்கமுமுள்ள குலத்திற் பிறந்தவளாயும், அவலக்ஷணம் இல்லாதவளாயும் இருத்தல் வேண்டும். பெரும்பாலும் மலடாகுங் குலத்திலும், பெண்ணே பெறுங் குலத்திலும், பெருவியாதி, குட்டம், சயம் முதலிய வியாதியுள்ள குலத்திலும் பிறந்தவளை விவாகஞ் செய்யலாகாது.

கன்னிகையைக் கொடுப்பவரும், குலமில்லாதவனுக்கும், நல்லொழுக்கம் இல்லாதவனுக்கும், தீர்ப்பிணியனுக்கும், அவலக்ஷணம் உள்ளவனுக்கும், அங்கஹீனனுக்கும், வீரியமில்லாதவனுக்கும், நித்திய தரித்திரனுக்கும், திறமையில்லாதவனுக்கும் கொடுக்கலாகாது. கன்னிகையைப் பொருள் வாங்கிக் கொண்டு கொடுத்தவர் நரகத்தை யடைவர். வதுவும்



வரனுமாகிய இருவருடைய சம்மதியையும் அறிந்து விவாக நடத்துதலே தகுதி. வது - மணமகள். வரன் - மணமகன்.

ஒருதாய் வயிற்றுப்பிறந்த இரண்டு பிள்ளைகளுக்கு, ஒரு நாளிலேனும், ஒரு மாசத்திலேனும், ஒரு வருஷத்திலேனும் சௌளம் உபநயனம் விவாகஞ் செய்யலாகாது. தமையன் விவாகஞ் செய்யாதிருப்பத் தம்பி விவாகஞ் செய்துகொள்ளலாகாது. தமையன் ஊமையாய்ச் செவிடனாய் இருந்தாலும், துறவு பூண்டாலும், தூரதேசத்திற் சென்று அறியப்படாதிருந்தாலும், தம்பி விவாகஞ் செய்து கொள்ளலாம்.

பெண்ணானவள் தன் கணவனுக்கும் மாமன் மாமி முதலானவர்களுக்கும் அடங்கி, அன்போடு உபசாரஞ்செய்துகொண்டு, இல்லறத்தை நன்றாக நடத்தல்வேண்டும். கணவனும், மாமன் மாமி முதலானவர்களும், அந்தப் பெண்ணுக்குச் சிறிதாயினும் துன்பஞ்செய்யாது, தங்களுடைய வளத்துக்கு ஏற்றபடி போசனம் ஆடை ஆபரண முதலியவைகளினாலே அவளைச் சந்தோஷப்படுத்திக்கொண்டு வரல்வேண்டும். எந்தக்குடியிலே ஒருபெண், தன் கணவன், கணவனுடன் பிறந்தார், மாமன், மாமி முதலானவர்களாலே துன்பம் அடைதலினாலேனும், ஆதரிக்கப்படாமையினாலேனும், மனம் நொந்து கண்ணீர் விடுவாளோ, அந்தக் குடி அக்கினிபற்றி எரிந்தாற் போல அழிந்து

விலும் பெண்ணை அவள் பிதா மாதாச் சகோதரர் முதலானவர்களும், கலியாணகாலத்திலும், பலமுறைக்காலங்களிலும், ஆடை ஆபரண முதலியவைகளினாலே சந்தோஷப் படுத்தல் வேண்டும்.

எந்தக்குலத்திலே மனைவியினுடைய பணிவிடை முதலியவற்றினாலே கணவன் பரதாரத்தை நினையாமலும், கணவனுடைய அன்பு முதலியவற்றினாலே மனைவி பரபுருஷனை நினையாமலும், ஒருவரோடொருவர் மிக ஒற்றுமையுடையராய் இருக்கின்றாரோ, அந்தக் குலம் தழைத்தோங்கும். கணவன் தன் மனைவியை விரும்பாதொழிந்தால், அவள் பரபுருஷனை இச்சித்தல் கூடும்; அதனால் அக்குலம் தாழ்ந்துவிடும். கணவனானவன் தன் காரியத்தின்பொருட்டுத் தேசாந்தரம் போகும்போது, தான் போய்வருமளவும் மனைவியினுடைய சீவனத்துக்கு வேண்டும்பொருள் கொடுத்துவிட்டுப் போதல்வேண்டும். அப்படிச் செய்யாதொழியின், அவள் மேன்மையுடையவளாயினும் சீவனத்தின் பொருட்டு இழிவான காரியஞ் செய்தல்கூடும்.

கணவன், தன்மனையாள் கருப்பவதியானால், தானம் வாங்கல், கோயில் வீடு முதலியவை கட்டுவித்தல், திருவிழா முதலிய கிரியைகளைச் செய்தல், பிதாமாதாக்களுக்கன்றி மற்றவர்களுக்கு அசுபக்கிரியை செய்தல், தீர்த்தயாத்திரை செய்தல், சமுத்திர ஸ்நானஞ் செய்தல்,



பரான்னம் புசித்தல், வபனஞ் செய்துகொள்ளல் என்னும் இவைகள் ஆகாவாம்.

பிறன் மனையாளையும், விதவையையும் வேசையையும் விரும்பாதவனும், தன் மனையாளையும், விதிக்கப்பட்ட நாள்களினன்றி விலக்கப்பட்ட நாட்களிலே கூடாதவனும் உள்ளவன், கிருகத்தனேயாயினும், விவேகிகளாலே பிரமசாரியாகவே மதிக்கப்படுவான். அவன் இம்மையிலே அரோக சரீரமும் தீர்க்காயுசுமுடையவனாய், சற்புத்திரரைப் பெற்று, பகைவர்களும் திக்குநோக்கி வணங்க வாழ்ந்திருந்து, மறுமையிலே நற்கதியை அடைவான். தன் மனைவியை விடுத்துப் பிறன் மனைவியிடத்தாயினும், வேசையிடத்தாயினும்போனவனும், தன் மனைவிமேல் அன்புவைத்து அவளைப் போசனம் ஆடை ஆபரணமுதலியவைகளினால் ஆதரியாமல் அவளுக்குத் துன்பஞ் செய்தவனும், தன் மனைவி கொண்டுவந்த சீதனப் பொருளை அழித்தவனும், அளவில்லாத காலம் நரகங்களிலே கிடந்தழுந்துவர். பிறவிதோறும் பிரமேகம், கிரந்தி, பகந்தரம், அரையாப்பு, நீரடைப்பு, கிரகணி, அண்டவாயு, குன்மம், சூலை, பிளவை, க்ஷயம், மகா சுவாசம், ஈளை, மகோதரம் முதலிய எண்ணில்லாத வியாதிகளினாலும் வறுமையினாலும் வருந்துவர்.

கிருகத்தன் நாடோறும் பஞ்சமகா யஞ்ஞங்களைச் செய்தல்வேண்டும். பஞ்சமகாயஞ்ஞங்களாவன: பிரமயஞ்ஞம், பிதிர்யஞ்ஞம், தேவயஞ்

னும், பூதயஞ்ஞமும், மானுடயஞ்ஞமும் என்பவைகளாம். அவைகளுள்ளே பிரமயஞ்ஞமாவது வேதமோதுதல்; பிதிர்யஞ்ஞமாவது பிதிர்தர்ப்பணம்; தேவயஞ்ஞமாவது தேவர்களுக்கு அக்கினியில் ஓமஞ்செய்தல்; பூதயஞ்ஞமாவது பூதங்களுக்குப் பலியன்னமிடுதல்; மானுடயஞ்ஞமாவது அதிதிகளுக்கு அன்னங்கொடுத்தல்.

இல்வாழ்வானே மற்றையெல்லா வாச்சிரமத்தாருக்கும் ஆதாரமானவன். ஆதலால், தருமநிலையும் உலகநிலையும் இல்லறத்திற்றானே உண்டாகின்றன. இல்வாழ்வான், தன் வீட்டுக்கு அதிதிகள் வந்தால், எதிர்கொண்டு இன்சொற்களைச் சொல்லி அழைத்துவந்து காலலம்பத் தண்ணீர் கொடுத்து ஆசனத்திருத்தி, அன்போடு அன்னமிட்டு, அவர் போகும்போது அவர் பின்சென்று வழிவிடல் வேண்டும். அதிதி வாராதொழிந்தால், நித்திய கருமமுடிந்தபின் தெருவிலே ஒரு பசுக்கறக்கு நேரம் அதிதியை எதிர்பார்த்துக் கொண்டு நிற்றல்வேண்டும்.

பிரமசாரியாயினும் சந்நியாசியாயினும் பிக்ஷைக்கு வந்தால், விரைந்தெதிர்கொண்டு, நல்வார்த்தை சொல்லுதல் கால்கழுவுதல் முதலிய உபசாரங்களைச் செய்து, மூன்று கவளத்திற் குறையாமற் பிக்ஷையிட்டு, கையிலே ஜலம் விடல்வேண்டும். சிநேகர் பந்துக்கள் வந்தால், அவர்களையும் உபசரித்துப் புசிப்பித்தல்வேண்டும். புதிதாக வீட்டுக்கு வந்த மருமகளையும்,



சிறு பெண்களையும், வீட்டிலுள்ள வியாதியாளர்களையும், கருப்பந்தரித்த பெண்களையும், சிறுவரையும், மூப்புடைய பிதாமாதா முதலானோர்களையும் முன்னே புசிப்பித்தல் வேண்டும்.

ஸ்நானஞ்செய்யாமல் உண்கின்றவன் மலத்தை உண்கின்றான். செபஞ்செய்யாமல் உண்கின்றவன் இரத்தத்தையும் மூத்திரத்தையும் உண்கின்றான். பூசைசெய்யாமல் உண்கின்றவன் புழுவையும் பிணத்தையும் புலையன் கட்டத்தையும் உண்கின்றான். பாலர் முதலாயினோருக்கு முன் உண்கின்றவன் மிருகமலத்தை உண்கின்றான். அதிதிகளுக்குக் கொடாது உண்கின்றவன் விஷத்தை உண்கின்றான். இப்பாவிகளெல்லாரையும் யமதூதர்கள் நரகத்தில் வீழ்த்தி, இவர்களுடைய நாக்குகளிலே அக்கினியிற்காய்ச்சிய இருப்பாணிகளை அறைந்து, இவர்கள் பதைபதைத்து அலறும்படி இவர்களுடைய உடம்பு முழுதிலும் பஞ்சலோகங்களையும் உருக்கி வார்ப்பார்கள்.

இல்வாழ்வான், நாடோறும் போசனஞ்செய்தபின்பு, பின்பகலிலே பெரியோர்கள் புராணங்களைப் படித்துப் பொருள்சொல்லத் தன் சுற்றத்தாரோடு விதிப்படி மனமகிழ்ந்து கேட்டல்வேண்டும். அஸ்தமயனகாலத்திலே சந்தியாவந்தனம் முடித்துத் தேவாலயத்தை அடைந்து, கடவுளை வலஞ்செய்து வணங்கித் தோத்திரஞ்செய்துகொண்டு, வீட்டை அடைந்து, அதிதிகளோடும் சுற்றத்தாரோடும் போசனஞ் செய்து சயனித்தல் வேண்டும்.

தன்பிதா மாதாக்கள் இறந்தமாதமுந் திதியும் வருஷந்தோறும் வரும்பொழுது, விசுவாசத்தோடு விதிப்படி சிராத்தஞ் செய்தல் வேண்டும். புரட்டாசி மாசத்திலே கிருஷ்ணபக்ஷத்திலே மகாளய சிராத்தம் செய்தல் வேண்டும். அமாவாசை, சூரியகிரகணம், சந்திரகிரகணம், விதிபாதயோகம், உத்தராயணம், தக்ஷிணாயனம், சித்திரைவிஷுவம், ஐப்பசி விஷுவம், மாசப்பிறப்பு, வைகாசிமாசத்துச் சுக்கிலபக்ஷத்திருதியை, கார்த்திகைமாசத்துச் சுக்கிலபக்ஷ நவமி, புரட்டாசி மாசத்துக் கிருஷ்ணபக்ஷத் திரயோதசி, மாசியாசத்து அமாவாசை என்னும் இத்தினங்களிலே, புண்ணிய தீர்த்தத்திலே ஸ்நானம்பண்ணிப் பிதிர்தர்ப்பணஞ் செய்து அதிதிகளோடுஞ் சுற்றத்தாரோடும் போசனம் பண்ணி, விரதநியமத்தோடிருத்தல்வேண்டும்.

கிருகஸ்தன், இப்படி இல்லறத்தை விதிப்படி நடாத்தி, மூப்பு வரும்போது வானப்பிரஸ்தாச்சிரமத்திலே பிரவேசிக்கலாம்.

வானப்பிரஸ்தன்.

வானப்பிரஸ்தனுவான் தன்மனைவியைப் புத்திரனிடத்தில் வைத்துவிட்டாயினும், தன்னோடு கூட்டிக்கொண்டாயினும், வனத்திற் சென்று, தவஞ்செய்வோன். அவன் சடையுந் தாடியும் மீசையும் நகமும் வளர்த்துக்கொண்டும், மரவுரி மான்றோல் முதலியவைகளை உடுத்



துக்கொண்டும், தழைகளினாலே செய்யப்பட்ட குடிசைகளிலே வாசஞ்செய்தல் வேண்டும். ஊரில் உண்ணத்தக்க உணவுகளை விட்டு, காட்டிலுள்ள கனி கிழங்கு முதலியவைகளையே உண்ணல்வேண்டும். அவை கிடையாதொழியின், மற்றை வானப் பிரஸ்தரிடத்திலேனும், வனவாசஞ்செய்யும் கிருகஸ்தரிடத்திலேனும், பிக்ஷையேற்று உண்ணலாம். அவர்களும் இல்லாதபோது, ஊரிற்போய், எட்டுக்கவளவன்னம் வாங்கிப் புசிக்கலாம்.

முப்பொழுதினும் ஸ்நானஞ்செய்து அக்கினிகாரியஞ் செய்தல்வேண்டும். தான் உண்ணும் உணவினாலே பூதபலியையும், அதிதிபூசை பிக்ஷையிடல் இவைகளையும் செய்யலாம். வெய்யிற்காலத்திலே நெருப்புக்குச் சமீபத்திலும், மழைக்காலத்திலே தண்ணீரிலும், பனிக்காலத்திலே வெளியிலும், இருந்துகொண்டு, தவஞ்செய்தல்வேண்டும். வேதசிரசுகளாகிய உபநிஷத்துக்களையே பாராயணஞ் செய்தல் வேண்டும். வானப்பிரஸ்தனுக்குப் புணர்ச்சி கூடாது.

இப்படி வானப் பிரஸ்தாச்சிரமத்தில் இருந்து, மிகுந்த வைராக்கியம் அடைந்தபோது, சந்நியாசாச்சிரமத்திலே பிரவேசித்தல்வேண்டும்.

சந்நியாசி.

சந்நியாசியானவன் எல்லாப்பற்றுக்களையும் முற்றத்துறந்தவன். சந்நியாசி காஷாய வஸ்

திரோபமன்றி வேறு வஸ்திரந் தரிக்கலாகாது. அவனுக்குத் தண்ட கமண்டலங்களும் இருத்தல்வேண்டும். பிதா மாதாப் பெண்டிர் பிள்ளை முதலாயினோரிடத்தும் பொருண் முதலானவைகளிடத்தும் பற்றில்லாதவனே காஷாயந் தரித்தல்வேண்டும்; பற்றுள்ளவன் காஷாயந் தரித்தால், ரௌரவநரகத்திலே கிடந்தழுந்துவன். இல்லறத்தின் வழுவினால், அவ்வழுப் பிராயச்சித்தத்தினாலே நீங்கும். துறவறத்தின் வழுவினால், அவ்வழு அவனை நரகத்திற் செலுத்துவதன்றிப் பிராயச்சித்தத்தினாலே நீங்காது. துறவறத்தின் வழுவுதல் மலைச்சிகரத்தினின்று தவறி விழுதல் போலும்.

சந்நியாசி சற்குருவை வழிபட்டு, ஞான சாத்திரங்களை ஓதி, அவற்றின் பொருளைக் கேட்டுச் சிந்தித்துத் தெளிந்து, நிட்டை கூடல்வேண்டும். தன்னை அடைந்த பரிபக்குவர்களுக்கு அவைகளை ஓதுவித்து, அவைகளின் பொருளைப் போதிப்பித்தல்வேண்டும்.

சந்நியாசி ஒருவரையும் பகைக்கலாகாது. அநித்தியமாயும் உரோகத்துக்கு இருப்பிடமாயும் உள்ள சரீரத்தின்பொருட்டு ஒருவரோடும் கோபிக்கலாகாது. தம்மவரென்றும் பிறரென்றும் விருப்பும் வெறுப்பும் வைக்கலாகாது. எல்லா வுயிர்களிடத்தும் கருணையுடையனாய் இருத்தல்வேண்டும். நடக்கும்போது தரையிலே யாதொரு ஜந்துவும் இல்லாதிருக்கப் பார்த்து அடிவைத்தல்வேண்டும். தண்ணீரை



நன்றாக வஸ்திரத்தினாலே வடித்துச் சுத்தி செய்து குடித்தல் வேண்டும். தன்னை ஒருவன் வைதாலும், அடித்தாலும், மற்றை எவ்வகைத் துன்பஞ் செய்தாலும், அவன் மேல் வெறுப்புக்கொள்ளாமல், இனிய வார்த்தைகளையே பேசல்வேண்டும். தனக்குப் பிறர் செய்யும் அவமானத்தை அமிர்தமாகவும், வழிபாட்டை விஷமாகவும் கொள்ளல்வேண்டும். வெய்யில் காற்று முதலானவைகளுக்கும், சரீரத்தில் வரும் துன்பங்களுக்கும், சிறிதும் அஞ்சாமல், அவைகளைச் சகித்துக்கொண்டு மகிழ்ச்சியுடன் இருத்தல் வேண்டும். உயிரோடிருத்தலையும் இறத்தலையும் சமமாகவே எண்ணல்வேண்டும்.

சந்நியாசி தாம்பூலம் சந்தனம் பூமாலை ஆபரணம் முதலிய போக்கியப் பொருள்களை அநுபவித்தலும், கீதங்கேட்டலும், கூத்துப் பார்த்தலும், பெண்களை இச்சித்தலும், அவர்களோடு பேசுதலும், அவர்கள் கூட்டத்திற் போதலும், கோயிலதிகாரஞ் செய்தலும், அரசர்வாயிலிற் செல்லலும், கழுத்தின்மேலன்றிக் கழுத்தின்கீழே க்ஷௌரஞ்செய்துகொள்ளலும், காஷாய வஸ்திரத்தை முழங்கால்களின்மேலன்றி முழங்கால்களின் கீழே தொங்கும்படி உடுத்தலும் ஆகாவாம்.

சந்நியாசி வலக்கையிலே பிக்ஷாபாத்திரத்தையும் இடக்கையிலே தண்டத்தையும் தரித்துக்கொண்டு, நற்குடிப் பிறப்பும் நல்லறிவும் நல்லொழுக்கமும் ஈசுரபத்தியுமுடைய கிருகத்

தர்கள் வீட்டிலே மௌனத்தோடு போய், பிக்ஷை வாங்கி, ஒருபொழுது உண்ணல்வேண்டும். தரித்திரரிடத்தே செல்லலாகாது. பிக்ஷையின்பொருட்டு யாரையேனும் நெருக்கலாகாது. பிக்ஷைக்குப்போனால், முற்றத்திலே தன்னிரண்டு கண்களையும் வலக்காற் பெருவிரலில் வைத்துக்கொண்டு நின்று, பிக்ஷையேற்றல் வேண்டும். பிக்ஷையின்பொருட்டு ஒரு பசுக் கறக்கு நேரமட்டும் நிற்றல்வேண்டும். அவ்வளவும் பிக்ஷை வாராதொழியின், மற்றை வீட்டுக்குச் செல்லல்வேண்டும்; செல்லும்பொழுது பிக்ஷையிடக் கொண்டுவந்தவர் அழைக்கின், அவ்விடத்திற்றானே நின்றுகொண்டு வாங்கல் வேண்டும்; திரும்பிப்போய் வாங்கலாகாது. பிக்ஷை கிடைத்தபோது சந்தோஷித்தலும், கிடையாதபோது துக்கித்தலும் ஆகாவாம். விஷயங்களால் இழுக்கப்படுகின்ற இந்திரியங்களை, அற்பபோசனத்தினாலும், ஏகாந்தத்தில் வசித்தலினாலும், நல்வழியிற் றிருப்பல்வேண்டும். குறிசொல்லல், வைத்தியம், சோதிடம், மந்திரவாதம் முதலியவைகளினாலே பிக்ஷை சம்பாதிக்கலாகாது.

பிக்ஷை சாந்தானிக பிக்ஷையும், கணபிக்ஷையும், மாதுகரிபிக்ஷையும், அயாசிதபிக்ஷையுமென நான்கு வகைப்படும். ஆசாரியர் முதலாயினோர், பக்தர்களாயினும், சீடர்களாயினும் அன்பினோடு தாமே தரும் மடம் விளைநில முதலியவைகளைச் சந்தானபரம்பரையாக அநுபவிக்கும்படி வாங்குவது சாந்தானிகபிக்ஷை. இல்



வாழ்வாருடைய தெருவிலே புறப்பட்டு வீடுதோறும் அரிசிவாங்குவது கணபிக்ஷை. வண்டானது ஒரு பூவிலிருந்து அதனை வாதியாமல் பல பூக்களினுஞ் சென்று சிறுகச் சிறுகத் தேனைக் கிரகித்தல் போல, விரத்தனானவன் ஒருவரை வாதியாமல் பலரிடத்தும் சென்று சிறுகச் சிறுக அன்னம் வாங்குவது மாதுகரி பிக்ஷை. தனக்கென்று காசையும் பணத்தையும் தானியத்தையும் தீண்டாதவனுக்கே இந்த மாதுகரிபிக்ஷை பண்ணுதல் தகும். மத்தியானமாதற்கு முன்னே மாதுகரிபிக்ஷைக்குப் புறப்படலாகாது. விரத்தியின் முதிர்ச்சியினாலே 'நமக்குள்ள பிராரத்தத்தை நாம் எங்கேயிருப்பினும் கடவுள் புசிப்பிப்பர்' என்று துணிந்து, இருந்தவிடத்திலே தானே ஒருவன் தானாகக் கொண்டுவந்து தந்ததை வாங்கிப் புசிப்பது அயாசிதபிக்ஷை.

ஈசுர நிந்தகர், குரு நிந்தகர், வேத நிந்தகர், ஆகம நிந்தகர், தேவத்திரவியங் கவர்வோர், சமயாசாரமில்லாதவர், கொலைஞர், கள்வர், கள்ளுண்போர், புலாலுண்போர், பிறன்மனை நயப்போர், பொய்ச்சான்று சொல்வோர், பொய்வழக்குப் பேசுவோர், கன்னிகையை விற்போர், இழிந்த வருணத்தார் முதலாயினோரிடத்துப் பிக்ஷை வாங்கலாகாது. இவர்களுடைய அன்னத்தைப் புசித்தவர்களுக்கு ஒருபோதும் சித்தசுத்தி பிறவாது. அதனால் அவர்கள் மேன்மேலும் பாவங்களையே செய்து நரகத்துன்பத்தை அநுபவிப்பர்கள். அழுக்குப் புடைவை

யுடுத்தவள், கருப்பிணி, வெள்ளாட்டி, நற்குணமில்லாதவள், எண்ணெயிட்டுக்கொண்டவள், தாம்பூலந்தின்றவள், கணவனுக்கு முன்னுண்பவள், அருவருப்பானவள், உறுப்புக்குறைந்தவள், பெருங்குட்ட முதலிய நோயுடையவள், விதிப்படி சௌச முதலியன செய்யாதவள், சனனமரணசௌசமுடையவள் முதலியோர்கள் இடும் அன்னம் வாங்கலாகாது. தீக்ஷையில்லாதவருடைய அன்னம் தீக்ஷையுடையவர் புசிக்கலாகாது.

சந்நியாசிவேடந் தரித்துக்கொண்டு மண் பொன் பெண்களில் இச்சைவைப்பவர்களும், கோயிலதிகாரஞ் செய்யப் புகுந்து தேவத்திரவியங்களை உபயோகிப்பவர்களும் பதிதராவார்கள். அவர்கள் இருபத்தெட்டுக்கோடி நரகங்களிலுங் கற்பகாலங் கிடந்தழுந்துவார்கள். அவர்கள் அநுபவிக்கும் நரகத்துன்பங்களைச் சொல்ல முடியாது. அவர்கள் எண்ணில்லாததரம் மலப் புழுவாய்ப் பிறந்து பிறந்து, மலத்தை உண்டிறப்பார்கள். இப்பிறவியினும், மேல் வரும் பிறவிகளினும், சுகசன்னி, பிரமேகம், இரந்தி, பகந்தரம், அரையாப்பு, நீரடைப்பு, கிரகணி, நீரிழிவு, மூலரோகம், பிளவை, பெருவியாதி, குட்டம், சயம், மகாசுவாசம், குன்மம் முதலிய எண்ணில்லாத வியாதிகளினாலே வருந்துவார்கள். அப்பதிதர்களை வணங்குதலும், அவர்களோடு கூடுதலும், அவர்களோடு பந்தியிலிருந்து புசித்தலும், அவர்களைத் தீண்டலும், பிறவும் பெரும்பாதகங்களாம். ஆதலினாலே,



நரகத்துன்பத்துக்கும் பிறவித்துன்பத்துக்கும் அஞ்சினவர்கள் அப்பதிதர்களைக் கண்டால், தூரத்திலே நீங்கிவிடக் கடவர்கள்.

பிரமசரிய முதலிய நான்காச்சிரமங்களும் கிருகஸ்தாச்சிரமத்தினாலேயே நிலைபெறுகின்றன. சாத்திரவிதிப்படியே அதனதன் கருமங்களை நடத்திவந்தால், இந்த நான்காச்சிரமங்களும் தனித்தனியே மோக்ஷத்தைக் கொடுக்க வல்லனவாம். நான்காச்சிரமிகளுள்ளும், வேதாகமங்களில் விதித்தபடி ஒழுகும் கிருகஸ்தன், மற்றை மூன்றாச்சிரமங்களையும் பிக்ஷைகொடுத்துப் பாதுகாத்தலினாலே உயர்ந்தவனென்று சொல்லப்படுகின்றான். நதியும் நதமும் சமுத்திரத்தைச் சேர்தல்போலவே, பிரமசாரியும் வானப்பிரஸ்தனும் சந்நியாசியும் கிருகஸ்தனையே பிக்ஷையின்பொருட்டுச் சேர்கின்றார்கள். நதியென்பது கிழக்குமுகமாக ஓடும் ஆறு. நதமென்பது மேற்குமுகமாக ஓடும் ஆறு.

தேவர்கடனை யஞ்ஞத்தினாலும், முனிவர்கடனை வேதாத்தியயனத்தினாலும், பிதிர்கடனைப் புதல்வரைப் பெறுதலினாலும், தீர்த்துக்கொண்டே, சந்நியாசத்திற் பிரவேசித்தல் வேண்டும். பிரமசரியத்திலிருந்து கிருகஸ்தாச்சிரமத்தையும், அதிலிருந்து வானப்பிரஸ்தாச்சிரமத்தையும், அதிலிருந்து சந்நியாசாச்சிரமத்தையும் அடைவதே தகுதி. ஆயினும், கிருகஸ்தாச்சிரமத்திற்கு உரிய சத்தியில்லாதவரும்,

பிரபஞ்சத்திலே மிக்க வைராக்கியமுடையவரும் விரும்பியபோது சந்நியாசம் பெறலாம்.

சந்நியாசம் பெற்றவர், குளிக்கப்போய்ச் சேறுபூசிக் கொள்ளுதல்போலக் கூடாவொழுக்கம் பூண்டு பழிபாவங்களை அடையாமல், தங்கள் காலமெல்லாம் செபம், தியானம், பூசை, ஞானநூல்களை ஓதல், ஓதுவித்தல், கேட்டல், கேட்பித்தல், சிந்தித்தல், தெளிதல், நிட்டைகூடல் என்பவைகளிலே, போக்கல்வேண்டும். இவை செய்யாதவருடைய சந்நியாசவேடம் சிறிதும் பயன்படாது.

திருமந்திரம்.

வேட நெறிநில்லார் வேடம்பூண் டென்பயன்
வேட நெறிநிற்போர் வேடமெய் வேடமே
வேட நெறிநில்லார் தம்மை விறல்வேந்தன்
வேட நெறிசெய்தால் வீடது வாகுமே.

திருவள்ளுவர்.

வானுயர் தோற்ற மெவன்செய்யுந் தன்னெஞ்சந்
தானறி குற்றப் படின்.

---



# நல்லொழுக்கம்.

பெரும்பான்மையும் எல்லாச் சாதியாருக்கும் எல்லாவாச்சிரமத்தாருக்கும் பொதுவாயுள்ள நல்லொழுக்கங்களை இயன்றமட்டும் திரட்டிச் சொல்வாம்.

கடவுளும், புண்ணியபாவமும், சுவர்க்க நரகமும், மறுபிறப்பும், முத்தியும் உண்டென்னும் உண்மையை ஒருபோதும் மறக்கலாகாது.

ஒருயிருக்கும் சிறிதாயினும் தீங்கு நினைக்கலாகாது. தனக்குத் துரோகஞ் செய்தவரிடத்தும் தான் துரோகசிந்தை இல்லாதவனாய் இருத்தல்வேண்டும். பிறவுயிர்களுக்குத் துன்பம் வந்தபொழுது தன்னை நெருப்பிலே தோய்த்தாற்போல மனந்தபித்து அதைநீக்க முயலல் வேண்டும். பொறுத்தற்கரிய கோபமும் துன்பமும் வந்தாற் சகித்துக் கொள்ளல் வேண்டும்.

பிறருடைய பொருளைக் காஞ்சிரங்காய் போல நினைத்தல் வேண்டும். தனக்குப் பிறர் இலாபங் கருதாமற்செய்த நன்றியை மறக்கலாகாது. வஞ்சனையை ஒழித்தல் வேண்டும். பகைவரும் சிநேகரும் அயலாருமாகிய மூன்றுதிறத்தாரிடத்தும் பக்ஷபாதமின்றிச் சமமாயிருத்தல்வேண்டும். பிறருடைய கல்வி செல்வ முதலியவற்றைக் கண்டு பொறாமைப்படலாகாது. கல்வியும் அறிவும் நல்லொழுக்கமும்

செல்வமும் அழகும் தமக்குப் பார்க்கினும் பிறருக்கு மிகப் பெருகல்வேண்டுமென்று நினைத்தல் வேண்டும்.

காணாதவிடத்துப் பிறரை இகழ்ந்து பேசலாகாது. விளையாட்டுக்காயினும் பொய்பேசலாகாது; எந்நாளும் சத்தியமே பேசல்வேண்டும். தன்னை வைதவனிடத்தும் கடுஞ்சொற்களைப் பேசாது, இன்சொற்களையே பேசல்வேண்டும். தனக்கும் பிறர்க்கும் பயன்படாத வீண்வார்த்தைகளைப் பேசலாகாது. கோண்மூட்டலாகாது.

தமையன் மனைவியைக் குருபத்தினியாகவும், தம்பி மனைவியை மருமகளாகவும், பிறர் மனைவியரைத் தாயும் தமக்கையும் தங்கையுமாகவும் பாவித்தல் வேண்டும்.

பிறரிடத்தே குற்றம் உண்டாயின், அவரைத் தனித்தவிடத்திற் கண்டு, அதனையும் அதனால் வருங்கேட்டையும் அவருக்கு அறிவித்து, அவரை நல்வழிப்படுத்தல் வேண்டும். ஒன்று ஒருவருக்கு மிக அப்பிரியமாய் இருப்பினும், அது அவருடைய நன்மைக்குக் காரணமாய் இருக்குமாயின், அதை ஆவசியகமாகச் சொல்லல் வேண்டும்.

ஈசுரத்துரோகி, கொலைஞன், கள்வன், கள்ளுண்போன், பொய்யன், சூதாடுவோன், தூர்த்தன், வஞ்சகன், பொறாமையுடையவன், புறங்கூறுவோன், பலரோடு பகைகொண்டவன் மிகச் செலவுசெய்பவன், பைத்தியம் பிடித்தவன் என்பவர்களோடு கூடலாகாது.



தனக்கு மந்திரங்களையேனும் சாத்திரங்களையேனும் உபதேசிக்குங் குருவை அன்போடு வழிபடல் வேண்டும். குருவுக்கு வழிபாடு செய்யாது பெறும் வித்தை சித்திபெறாது. கிரியை ஞானம் என்னும் இரண்டினுள்ளும் ஞானம் சிறந்ததுபோல, கிரியாகுரு ஞானகுரு என்னும் இருவருள்ளும் ஞானகுருச் சிறந்தவன். அதிகமாகவேனும் அற்பமாகவேனும் ஆன்மா உய்யும் வழிக்கு உரியதை அறிவித்தவனையும் குருவென்றே நினைத்தல் வேண்டும். சமயச்சடங்கு செய்விப்பவரும் ஆசாரியரேயாவர்; அவரிடத்தும் வழிபாடுசெய்தல் வேண்டும். குருவின் ஆசனத்திலும் படுக்கையிலும் இருத்தலும் படுத்தலும், அவைகளைக் காலினாலே தீண்டலும் ஆகாவாம்.

தகப்பன், தாய், பெரியதகப்பன், சிறியதகப்பன், பெரியதாய், சிறியதாய், பாட்டன், பாட்டி, மாமன், மாமி, தமையன், தமையன்மனைவி, குரு, குருபத்தினி, உபாத்தியாயர் முதலிய பெரியோர்கள் வந்தால், இருக்கைவிட்டெழுந்து வந்தனஞ் செய்தல்வேண்டும். வயசினாலும் கல்வியினாலும் ஒழுக்கத்தினாலும் முதிர்ந்த பெரியோர்கள் வரும்போது, சிறியவன், இருக்கைவிட்டெழும்பாதிருந்தால், அற்பாயுசை அடைவான். பெரியோர்களை நாடோறும் வந்தனஞ்

செய்பவனுக்கு ஆயுள், கல்வி, கீர்த்தி, பலம் என்னும் நான்கும் அபிவிருத்தியாகும்.

தன்னின் உயர்ந்தாரையாயினும், தன்னை ஒத்தாரையாயினும் வணங்கும்போது, அவ்வணக்கம் அவருக்கென்று புத்திபண்ணாமல், அவரிடத்தில் இருக்கும் கடவுளுக்கென்று புத்திபண்ணி வணங்கல்வேண்டும். தன்னை யாராயினும் ஒருவர் வணங்கும்போது 'இவ்வணக்கம் ஆன்மாவாகிய நமக்கன்று; நம்மிடத்தில் இருக்கும் கடவுளுக்கேயாம்' என்று புத்தி பண்ணல்வேண்டும்.

தான் ஒருவருக்குச் செய்த நன்றியைச் சொல்லலாகாது. தனக்கு ஒருவர் இட்ட போசனத்தை இகழ்ந்து பேசலாகாது. தான் செய்த தருமத்தையும் விரதத்தையும் புகழ்ந்து பேசலாகாது.

அங்கவீனர், ஆறுவிரலுள்ளவர்கள், வியாதியாளர், படியாதவர்கள், கிழவர், குரூபிகள், தரித்திரர், ஈனசாதியார் என்பவர்களை, அவர்களுடைய தோஷத்தைச் சொல்லிப் பரிகாசஞ் செய்யலாகாது.

ஒருவரை அடிக்கும்பொருட்டுத் தடி முதலிய ஆயுதங்களை உயரத்தூக்குதலும், அவைகளால் அடித்தலும் ஆகாவாம். புத்திரன் சீடன் மனைவி என்பவர்கள் குற்றஞ்செய்தால், அவர்களைப் பிரம்பினாலே தண்டித்தல்வேண்டும். கோபத்தினால் ஒருவர் தலைமயிரைப் பிடித்



திழுத்தலும், தலையில் அடித்தலும் ஆகாவாம். தன் வேலைக்காரர் தன்னிழலாயும், தன்மனைவியும் பிள்ளையும் தன்சரீரமாயும் இருத்தலால், அவர்செய்த பிழையை வருத்தமின்றிப் பொறுத்துக்கொள்ளல் வேண்டும்.

அயனம், விஷுவம், அமாவாசை, பௌர்ணிமை முதலிய விசேஷ தினங்களிலே, தேவாலயத்தையும், பிதா, மாதா, குரு, உபாத்தியாயர், அரசன் முதலிய பெரியோர்களையும் தரிசித்தல் வேண்டும்.

நாடோறும், சூரியன் உதிக்க ஐந்து நாழிகைக்குமுன்னே நித்திரைவிட்டெழுந்து, கடவுளைத் தியானித்து, உச்சசுரத்தினாலே தோத்திரஞ் செய்துகொண்டு, அவசியகருமமும் சௌசமும் தந்தசுத்தியும் முடித்து, ஸ்நானம்பண்ணிச் சந்தியாவந்தன முதலிய கருமங்களைச் செய்தல்வேண்டும்.

சூரியன் உதிக்க ஐந்துநாழிகை உண்டென்னுமளவில் எழும்புவது உத்தமம்; மூன்றேமுக்காநாழிகை உண்டென்னுமளவில் எழும்புவது மத்திமம்; உதயத்தில் எழும்புவது அதமம்; உதயத்தின்பின் எழும்புவது அதமாதமம். அவசிய கருமமுதற் றந்தசுத்தியிறுதியாகிய கருமங்களைச் சூரியோதயத்துக்கு முன்னே முடித்தல்வேண்டும். சூரியோதயத்துக்குப் பின்பு தந்தசுத்தி பண்ணினனாயின், தேவரும் முனிவரும் அவன் செய்யுங் கருமத்தைப் பிரசன்னமாகக் கைக்கொள்ளாமற் பரா

முகமாயிருப்பர்; ஆதலால் அக்குற்றந் தீரும்படி பிராயச்சித்தஞ் செய்தல்வேண்டும்.

உதயகாலத்திலும் அஸ்தமயன காலத்திலும் சயனமும் போசனமும் அத்தியயனமுஞ் செய்யலாகாது. சயனித்தால் மூதேவியுண்டாகும்; புசித்தால் வியாதி உண்டாகும்; அத்தியயனஞ் செய்தால் ஆயுசு குறையும்.

பிராதக்கால சந்தியாவந்தனம் நக்ஷத்திரங்கள் தோன்றும்போது செய்யின் உத்தமமும், நக்ஷத்திரங்கள் மறைந்தபோது செய்யின் மத்திமமும், சூரியன் பாதி உதிக்கும்போது செய்யின் அதமமுமாம்.

மத்தியான சந்தியாவந்தனம் பதினைந்து நாழிகையாகிய மத்தியானத்திலே செய்யின் உத்தமமும், மத்தியானத்துக்கு முன் ஒருநாழிகையிலே செய்யின் மத்திமமும், மத்தியானத்துக்குப் பின் ஒரு நாழிகையிலே செய்யின் அதமமுமாம்.

சாயங்கால சந்தியாவந்தனம் சூரியன் பாதி அத்தமிக்கும்போது செய்யின் உத்தமமும், அத்தமயனமானபின் ஆகாசத்திலே நக்ஷத்திரங்கள் தோன்றுமுன் செய்யின் மத்திமமும், நக்ஷத்திரங்கள் தோன்றும்போது செய்யின் அதமமுமாம்.

தேவாலயம் ஆறு குளம் கிணறு பூந்தோட்டம் வீடு முதலியவற்றிற்குச் சமீபத்திலும், சனங்கள் சஞ்சரிக்கும் இடங்களிலும், பசு



மேயும் இடங்களிலும், மரநிழலிலும், உழுத நிலத்திலும், பயிர்நடுவிலும், வழியிலும், சுடுகாட்டிலும், அறுகம்பூமியிலும், புற்றிலும், மலையிலும், தண்ணீரிலும் மலசலங்கழிக்கலாகாது.

காலிலே பாதகுறடேனும் செருப்பேனும் இட்டுக்கொண்டு மலசலங்கழிக்கலாகாது. சந்திரன், சூரியன், அக்கினி, தண்ணீர், காற்று, பசு, பெரியோர் என்னும் இவரெதிரே காறியுமிழ்தலும் மலசலங்கழித்தலும் ஆகாவாம். எண்ணெய் தேய்த்துக்கொண்டாயினும், ஈரவஸ்திரந் தரித்துக்கொண்டாயினும், தின்றுகொண்டாயினும், நடந்துகொண்டாயினும், கையிலே ஜலபாத்திரத்தை வைத்துக்கொண்டாயினும் மலசலம் விடலாகாது.

தலையையும் காதுகளையும் வஸ்திரத்தினாலே சுற்றிக் கொள்ளாமலும், பூணூலை வலக்காதிலே சேர்க்காமலும், மலசலம் விடலாகாது. மலசலங் கழித்தவுடனே விதிப்படி மண்ணிட்டுச் செவ்வையாகச் சௌசஞ் செய்தல்வேண்டும். மலசலங்கழிக்கப் புகுங்காலந்தொடங்கிச் சௌசாசமனம் முடிக்கும்வரையும் ஒருவரோடும் பேசலாகாது.

மயிர், எலும்பு, முள்ளு, பலியிட்டசாம்பர், உமி, குளித்தநீரால் நனைந்த பூமி, கோழை, எச்சில், மலம், மூத்திரம், உதிரம் என்னும் இவைகளை மிதியாமல் தூரத்தில் விட்டு ஒதுங்

இப்போதல் வேண்டும். மலமூத்திரங்களைப் பார்க்கலாகாது.

ஆறு, தடாகம், ஓடை, மடு முதலியவைகளிலே ஸ்நானஞ்செய்தல் வேண்டும். இவைகள் இல்லையானால், கிணற்றினின்றும் தண்ணீரை எடுத்து ஸ்நானஞ் செய்தல்வேண்டும். ஒருவர் வெட்டின குளத்திலே ஸ்நானஞ்செய்யப்புகின், அந்தக்குளத்தில் ஐந்துகை மண்ணெடுத்து வெளியிற்போட்டுவிட்டு ஸ்நானஞ் செய்தல்வேண்டும்.

தீண்டத்தகாத சாதியாரையும், புலாலுண்பவரையும், அசுத்தரையும், சனனமரணசௌசமுடையவரையும், தூரஸ்திரீயையும், ஊர்ப்பன்றி நாய் கழுதை நரி காகம் கோழி கழுகு கூகை முதலியவைகளையும், எலும்பையும் தீண்டினாலும், க்ஷௌரஞ்செய்துகொண்டாலும், சுற்றத்தார் இறக்கக் கேட்டாலும், தூர்ச்சொப்பனங் கண்டாலும், பிணப்புகை பட்டாலும், சுடுகாட்டிற்போனாலும், உடுத்த வஸ்திரத்துடனே ஸ்நானஞ் செய்தல்வேண்டும்.

திருவிழாவிலும், யாகத்திலும், விவாகத்திலும், தீர்த்தக்கரையிலும், யாத்திரையிலும், வீடு அக்கினிபற்றி எரியுங்காலத்திலும், கலகத்திலும், இடறுற்ற காலத்திலும், நீசரல்லாத மற்றையோரைத் தீண்டினால் தீட்டில்லை.

வஸ்திரந் தரித்துக்கொள்ளாமல், சயனம், ஸ்நானம், சந்தியாவந்தனம், பூசை, போசனம்



முதலியவைகளைச் செய்யலாகாது. ஜலத்தைக் காலினால் உழக்கலாகாது. ஸ்நானஞ் செய்தவுடனே உடம்பை வஸ்திரத்தினாலே துடைத்தல் வேண்டும். கையினாலே துடைக்கலாகாது. பிறர்மேலே நீர் தெறிக்கும்படி வஸ்திரத்தைத் தோய்த்தலும் மயிரை உதறலும் ஆகாவாம். நடக்கும்போது மயிரை உளர்தலாகாது. வஸ்திரத்தைத் தண்ணீரினுள்ளே பிழிதலாகாது. காலினாலே காலைத் தேய்த்துக் கழுவலாகாது. ஈரவஸ்திரத்தைத் தரித்துக்கொண்டிருக்கலாகாது.

மயிர், கரி, சாம்பர், எலும்பு, முள், விஷம், எச்சில் இவைகளைச் சலத்திலே போடலாகாது. கோழையைச் சலத்திலே உமிழ்தலாகாது.

நோயினாலே ஸ்நானஞ்செய்ய இயலாதபோது கழுத்தின்கீழ் அரையின்கீழ் கால் என்னும் இவைகளுள் ஒன்றை இயன்றபடி ஜலத்தினாலே கழுவிக்கொண்டு, கழுவாமல் எஞ்சிய உடம்பை நனைந்த வஸ்திரத்தினால் ஈரப்படும்படி துடைத்து, தோய்ந்துலர்ந்த வஸ்திரந் தரித்துக்கொண்டு, சந்தியாவந்தன முதலியவை செய்யலாம்.

முகத்தையும் கைகால்களையும் கழுவாமற் புசிக்கலாகாது. தண்ணீரினாலே கால் கழுவி, அந்த ஈரம் இருக்கும்போதே புசித்தல்வேண்டும். படுக்கையில் இருந்துகொண்டும், மூலைக்கெதிராக இருந்துகொண்டும், இடக்கையில் அன்னத்தை வைத்துக்கொண்டும், உள்ளங்

கையில் அன்னத்தை வைத்துக்கொண்டும், ஆசனத்தின்மீது இலைபோட்டுக்கொண்டும், நின்றுகொண்டும், நடந்துகொண்டும் புசிக்கலாகாது.

அசுத்தமாகிய இடங்களிலும், நானாவித சனங்கள் சேர்ந்த சங்கத்திலும், சந்தியாகாலங்களிலும், புசிக்கலாகாது. கனி கிழங்கு வற்றல் வடகம் பணியாரம் என்பவை யொழிந்த மற்றைப் பழைய உணவுகளையும், பிண்ணாக்கு முதலிய சாரமில்லாத உணவுகளையும் உண்ணலாகாது.

அங்கஹீனர், வியாதியாளர், ஆசாரமில்லாதவர் முதலாயினோராலே தீண்டப்பட்டதும் அருவருப்புள்ளதுமாகிய அன்னத்தைப்புசிக்கலாகாது. கோபமும் கவலையுமின்றி முகமலர்ச்சியோடும் மனமகிழ்ச்சியோடும் செவ்வையாக இருந்து புசித்தல்வேண்டும். தன்மனைவியோடு கூட இருந்து புசிக்கலாகாது.

வயிற்றிலே பாதிப்பங்கை அன்னத்தினாலும், காற்பங்கைச் சலத்தினாலும் நிறைத்து, காற்பங்கை வாயு சஞ்சரிக்க விடல்வேண்டும்.

இரவில் எட்டுநாழிகையினுள்ளே புசித்தல் உத்தமமும், பதினொருநாழிகையளவேல் மத்திமமும், பதினான்கு நாழிகையளவேல் அதமமுமாம்; அதன்மேற் புசிக்கலாகாது.

இராத்திரியிலே மிகப்புசிக்கலாகாது. மத்தியானத்திலே அதிக போசனஞ் செய்தால், இரவிலே புசிக்கலாகாது. இரவிலே தயிரையேனும் வெண்ணெயெடுத்த மோரையேனும் உட்கொள்ளலாகாது.



வெண்கலப்பாத்திரத்தில் விடப்பட்ட இளநீரும், தாமிர பாத்திரத்தில் விடப்பட்ட பாலும் கள்ளுக்குச் சமமாகும்; ஆதலால் அவைகளை உண்ணலாகாது.

நின்றுகொண்டு தண்ணீர் குடிக்கலாகாது. இரண்டு கையினால் மூகந்தாயினும் ஏற்றாயினுந் தண்ணீர் குடிக்கலாகாது. வாய் கொப்பளிக்கும்போது, வாயிற்புகுந்த நீரை உள்ளே புகாமல், உமிழ்ந்துவிடல்வேண்டும். வெண்கலப் பாத்திரத்தினாலேனும், தாமிரபாத்திரத்தினாலேனும், ஒருபோதும் கால் கழுவலாகாது.

புசித்தபின் காரணமின்றி ஸ்நானஞ்செய்யலாகாது. நோயாளி தலைமுழுகலாகாது. ஜননம், மரணம், கிரகணம், மாசப்பிறப்பு இவைகளினன்றி இராத்திரியிலே ஸ்நானஞ் செய்யலாகாது.

அட்டமி, சதுர்த்தசி, அமாவாசை, பௌர்ணிமை, மாசப்பிறப்பு என்னும் பஞ்சபருவங்களிலும், பிரதமை, சட்டி, துவாதசிகளிலும், உத்தரம், திருவோணம், திருவாதிரை, கேட்டை என்னு நக்ஷத்திரங்களிலும், சன்மநக்ஷத்திரத்திலும், விதிபாத யோகத்திலும், இரவிலும் எண்ணெய் தேய்த்துக்கொள்ளலாகாது.

எண்ணெய் தேய்த்துக்கொள்ளற்கு ஆடவர்களுக்குப் புதன்கிழமையும் சனிக்கிழமையும்

நல்லனவாம். பெண்களுக்குச் செவ்வாய்க்கிழமையும் வெள்ளிக்கிழமையும் நல்லனவாம்.

விலக்கப்பட்ட திதிவார நக்ஷத்திரங்களிலே எண்ணெய் தேய்த்துக்கொள்ளவேண்டினால், நெய்யும் மண்ணுந் தெறித்து எண்ணெய் தேய்த்துக் கொள்ளலாம். வியாதியாளரும் விருத்தரும் சிசுக்களும் காலம் விசாரியாமல் தைலாப்பியங்கம் பண்ணலாம்.

தலையிலே வாக்கி வடிந்த எண்ணெயை உடம்பிலே தேய்க்கலாகாது. சலமோசனம் எண்ணெய் தேய்க்குமுன்னே செய்துகொள்ளல் வேண்டும். ஸ்நானஞ் செய்தபின்பு எண்ணெய் தேய்த்துக்கொள்ளலாகாது.

க்ஷௌரஞ் செய்துகொள்ளற்குத் திங்கட்கிழமையும் புதன்கிழமையும் உத்தமம்; வியாழக்கிழமையும் வெள்ளிக்கிழமையும் மத்திமம்.

பிரதமை சதுர்த்தி சட்டி அட்டமி நவமி ஏகாதசி சதுர்த்தசி அமாவாசை பௌர்ணிமை என்னுந் திதிகளிலும், ஞாயிற்றுக்கிழமை செவ்வாய்க்கிழமை சனிக்கிழமைகளிலும், கார்த்திகை உரோகிணி மகம் உத்தரம் மூலம் உத்தராடம் உத்தரட்டாதி என்னும் நக்ஷத்திரங்களிலும், சென்ம நக்ஷத்திரத்திலும், மாசப்பிறப்பிலும், விதிபாதயோகத்திலும் விரத தினத்திலும், பத்தினிகர்ப்பிணியாய் உள்ள காலத்திலும், சந்தியாகாலத்திலும், குதபகாலத்திலும், இராத்திரியிலும், போசனஞ்செய்த பின்னும், வியாதியான காலத்திலும் வபனஞ்செய்து கொள்ளலாகாது.



தீக்ஷை ஆசாரியாபிஷேகம் மகுடாபிஷேகம் இவை செய்து கொள்ளும்போதும், பிரதிட்டை உற்சவம் யாகம் இவை தொடங்கும்போதும், விவாகத்துக்கு முதற்றினத்திலும், புண்ணியதலத்தையும் புண்ணியதீர்த்தத்தையும் அடைந்தபோதும், வியாதி நீங்கிய காலத்திலும், சிறைச்சாலையை விட்டுப் பிரிந்தகாலத்திலும், ஆசௌசமுடிவிலும், தன்னுடைய தாய் தகப்பன் ஆசாரியன் பெரியதகப்பன் சிறியதகப்பன் தமையன் தாயுடன்பிறந்தமாமன் பெண்கொடுத்த மாமன் இவர்களுடைய மனைவியர் பிதாவுடன் பிறந்தவள் சிறியதாய் தமக்கை இவர்கள் மரித்தகாலத்திலும், தனது தலையிலே பொல்லாதவை விழுந்தபொழுதும், திதிவார நக்ஷத்திரம் பாராமல் வபனஞ் செய்துகொள்ளல் வேண்டும்.

சனனாசௌசமுடிவிலே பிதா வபனஞ் செய்து கொள்ளல்வேண்டும். மரணாசௌசமுடிவிலே எல்லாரும் வபனஞ்செய்துகொள்ளல்வேண்டும். இப்படிச் செய்யாதொழிந்தால், ஆசௌசம் நீங்காது. நத்தகாலத்திலே தகனஞ் செய்தால், வபனம் அன்றைக்குச் செய்து கொள்ளாது, மற்றநாட் செய்துகொள்ளல் வேண்டும்.

தெய்வவிப்பத்தினிழலையும், மாதா, பிதா, குரு, உபாத்தியாயர், அரசன் முதலிய பெரியோ

ருடைய நிழலையும், பசுவினிழலையும், சோதிமினிழலையும் மிதித்தலும், தாண்டலும் ஆகாவாம். எருக்கு, கள்ளி, தான்றி, ஆமணக்கு இவைகளின் நிழலிலே பகற்காலத்தில் இருக்கலாகாது. விளா நிழலிலும் அரச நிழலிலும் இராக்காலத்தில் இருக்கலாகாது. நீசர் நிழல் விளக்கு நிழல்களும் ஆகாவாம். ஆடு கழுதை துடைப்பம் இவைகளின் தூள் மேலே படும்படி நெருங்கலாகாது.

இரண்டு தெய்வ விம்பத்துக்கு நடுவிலும், பிராமணர் முதலிய பெரியோர் பலருக்கு நடுவிலும் ஊடறுத்துப் போகலாகாது. ஒருவருக்கும் விளக்குக்கும் நடுவேபோகலாகாது. கழுதைக்கு நடுவினும் ஆடுகளுக்கு நடுவினும் போகலாகாது.

பெரியோர் நித்திரை செய்யும்போது அவரை எழுப்பலாகாது. பசுவானது தண்ணீர் குடிக்கும்போதும், புல்லுத் தின்னும்போதும், கன்று பால் குடிக்கும்போதும் தடைசெய்யலாகாது. பசுக்கன்றையேனும் அது கட்டுங் கயிற்றையேனும் தாண்டலாகாது.

தாம் உடுத்த ஆடைக்காற்றுப் பிறர்மேல் உறைப்பப்போதலும், பலர் நடுவே நின்று வஸ்திரத்தை உதறலும் ஆகாவாம்.

பிறர் எழுந்துபோகத் தொடங்கும்போது அவரைப் பின்னே நின்று அழைத்தலும், தும்முதலும், எங்கே போகின்றீர் என்று



கேட்டலும் ஆகாவாம். அவருக்கு யாதாயினும் சொல்லவேண்டுமாயின், விரைந்து சென்று, அவர் பக்கத்திலே நின்று சொல்லல்வேண்டும். அவர் முன்னே போய் எதிர்முகமாக நின்று ஒன்றையுஞ் சொல்லலாகாது.

பிறரைப் பார்த்து 'உம்முடைய உடம்பு நன்றாக இருக்கின்றது' என்று சொல்லலாகாது. அவர் புசித்த போசனங்களைக் கேட்டலாகாது.

மார்க்கத்திலே போகும்போது, தேவாலயமும், தெய்வவிம்பமும், ஆசாரியர் பிராமணர் அரசர் வித்துவான்கள் முதலிய பெரியோரும், பசுவும், அரசு முதலிய புண்ணியவிருக்ஷமும், நெய்க்குடம் தயிர்க்குடம் தேன்குடங்களும், நாற்சந்தியும் எதிர்ப்பட்டால், வலஞ்சுற்றிப் போதல் வேண்டும்.

பெரியோர்களும், வயோதிகர்களும், சுமை சுமப்போர்களும், வியாதியாளர்களும், பிள்ளைகளும், பசுக்களும், பெண்களும் எதிர்ப்பட்டால், அவர்களுக்கு வழிகொடுத்து, விலகிப் போதல்வேண்டும்.

பிறர் இரகசியம் பேசும்போது அதனைக் கேட்டலாகாது. இருவர் இருந்து பேசும் இடத்திலே அவரனுமதியின்றிப் போகலாகாது. பிறர் பேசும்பொழுது கதவுமுதலியவைகளின் பக்கத்திலே மறைந்து நிற்றலாகாது. பிறருடைய வீட்டின்கண்ணே புழைக்கடை வாயிலாலே போகலாகாது.

பற்கடித்தலும், நகங்களைக் கடித்தலும், மீசையைக் கடித்தலும், நகத்தினாலே பல்லைக் கிளைத்தலும், உதட்டைக் கசக்கிக்கொண்டிருத்தலும், மூக்கைத் தூக்கியிழுத்தலும், கண்மயிரைப் பிடுங்கலும், நகம் மயிர் இவைகளைத் தானாகச் சேதித்தலும் ஆகாவாம்.

வாயை மூடிக்கொள்ளாமற் கொட்டாவிவிடுதலும், பெருமூச்செறிதலும், இருமுதலும் ஆகாவாம். இரைச்சலிட்டுச் சிரித்தலும், காரணமின்றிச் சிரித்தலும், ஓசையுடன் அபானவாயுவிடுதலும் ஆகாவாம்.

காரணமின்றி, மண்கட்டியை உடைத்தலும், துரும்பு கிள்ளுதலும், நிலத்தைக்கீறலும், கையையும் தலையையும் உதறலும், கையினாலே உடம்பில் அடிக்கடி புடைத்தலும் ஆகாவாம்.

தலைசொறிதல் வேண்டின், வலக்கையினாலே சொறிதல்வேண்டும். இரண்டுகைகளினாலே தலைசொறிதலும், இடக்கையினாலே தலைசொறிதலும், முகத்தை இடக்கையினாலே தீண்டலும் ஆகாவாம். அரையின்கீழே தீண்டினாற் கைகழுவல் வேண்டும். காலை இடக்கையினாலன்றி வலக்கையினாற் றீண்டலாகாது. இருந்த ஆசனத்தைக் காலினால் உதைக்கலாகாது.

நாழியை மணைமேல் வைத்தலும், மணையைக் கவிழ்த்து வைத்தலும் ஆகாவாம். துடைப்பத்தையும், செத்தையையும், பூவின்



புறவிதழையும், பழைய கருங்கலங்களையும், கிழிந்த கட்டிலையும் பந்தரின்கீழ் வைக்கலாகாது.

நெருப்பை வாயினால் ஊதலாகாது. நெருப்பை ஆடையினாலேனும், முறத்தினாலேனும், கையினாலேனும் வீசி மூட்டலாகாது. நெருப்பை இருவருக்கு நடுவே கொண்டுபோகலாகாது; கொண்டுபோகவேண்டிற் கீழேவைத்து எடுத்துக்கொண்டு போதல்வேண்டும். அக்கினியைத் தாண்டலும், அக்கினிக்கெதிரே காலை நீட்டலும், அக்கினியை அரையின்கீழே தாங்கலும், அக்கினியிலே காலைக்காய்ச்சலும், அசுத்தமாகிய பொருளை அக்கினியிலே போடுதலும், அடுக்களையில் அக்கினியைச் சலம்விட்டவித்தலும் ஆகாவாம். விளக்கை வாயினால் ஊதி அவித்தலும், கையினாலே தாண்டலும் ஆகாவாம். தான் உயரமாகப் படுத்துக்கொண்டு அக்கினியைக் கீழே வைக்கலாகாது.

சூரியனை, உதிக்கும்போதும், அஸ்தமிக்கும்போதும், கிரகணம் பிடிக்கும்போதும், ஜலத்திலே பிரதிவிம்பித்திருக்கும்போதும், உச்சியில் இருக்கும்போதும் பார்க்கலாகாது. தன்னிழலைத் தண்ணீரிலும் எண்ணெயிலும் பார்க்கலாகாது. சுடுகாட்டக்கினியைப் பார்க்கலாகாது. வஸ்திரந் தரித்துக் கொள்ளாதவரைப் பார்க்கலாகாது.

பாதகுறடு, செருப்பு, வஸ்திரம், பூணூல், புஷ்பம், கமண்டலம் என்பவைகள் அன்னிய

னால் அனுபவிக்கப்பட்டிருந்தால் அவைகளைத் தான் அனுபவிக்கலாகாது. குடுமிக்கு வெளியிலே பூவைச் சுற்றிக்கொள்ளலாகாது.

துஷ்டவாகனத்தின்மேல் ஏறலும், தண்ணீர் அலம்பி இடித்த ஆற்றங்கரை முதலியவைகளைச்சேர்தலும், தீப்பட்ட வீட்டிலே பிரவேசித்தலும், மரத்தினுனியில் ஏறலும், மழை பெய்யும்போது காலைப்பரப்பி ஓடலும், ஜலப்பிரவாகத்துக்கு எதிராக நீந்தலும், ஒருவனாய் ஓடமேறிக் கடத்தலும், மந்தையினுள்ளே கோலின்றிப்போதலும், சர்ப்பம் மதயானை முதலியவற்றிற்கு எதிரே நிற்றலும், அவைகளைத் தொடர்தலும், குடியில்லாத வீட்டிலே தனித்துத் தூங்கலும், பாழ்ங்காட்டுக்குத் தனித்துப் போதலும், பாழ்வீட்டிலே தனித்திருத்தலும் ஆகாவாம்.

துணையின்றித் தனித்தாயினும், இன்னானென்று அறியப்படாதவனோடாயினும் வழி நடக்கலாகாது. இரவிலே தனித்து ஊர்ப்புறத்திலே போகலாகாது; போகவேண்டின், ஒருவரைக் கூட்டிக்கொண்டு போகல்வேண்டும். இருட்டிலே வெளிச்சமின்றிப் போகலாகாது.

மழையிலும், வெய்யிலிலும், இரவிலும், காடுகளிலும், குடை பாதரக்ஷை தடி இவைகளைத் தரித்தவனாகி, தேகத்துக்குத் தீங்கு வாராதபடி சஞ்சரித்தல்வேண்டும். சஞ்சரிக்கும்போது, மேற்பார்வையும் பக்கத்துப்பார்வையும் தூரப்பார்வையும் விட்டு, நுகத்தடியளவு தூரம்



வழியை நன்றாகப் பார்த்துப் போதல் வேண்டும்.

மிகவிழித்திருத்தல், மிகத்தூங்கல், மிகவிருத்தல், மிகநிற்றல், மிகநடத்தல், மிகப்படுத்திருத்தல், மிகவருந்தல், மிகப்பேசல் இவையெல்லாம் நன்மையல்ல. பகலிலே ஒருபோதும் நித்திரை செய்யலாகாது. வடக்குத்திக்கிலே தலைவைத்துச் சயனிக்கலாகாது. காலீரம் புலருமுன் சயனிக்கலாகாது.

---

## கற்பு.

பெண்களுக்குக் கற்பாவது விவாகஞ் செய்யுமுன் பிதா மாதாக்களாலும், விவாகஞ் செய்தபின் கணவனாலும், கற்பிக்கப்பட்டபடியே நீதி வழுவாமல் ஒழுகுதலாம். பெண்கள் இளமைப்பருவத்திலே பிதாவினாலும், யௌவனத்திலே கணவனாலும், மூப்பிலே புத்திரனாலும், காக்கத்தக்கவர்; ஆகையால் ஒருபோதும் பெண்கள் சுவாதீனரல்லர். கணவனும் புதல்வனும் இல்லாதமனைவியை அவளுடைய கணவன் பக்ஷத்தார் காக்கக்கடவர்; அவர்கள் இல்லாதபோது அவளுடைய தாய் பக்ஷத்தார் காக்கக்கடவர். தகப்பன் கணவன் பிள்ளைகள் இவர்கள் இல்லாமல் தனித்திருக்கவிரும்பும் பெண், பிறந்தகுலம் புகுந்த குலம் இரண்டுக்கும், வசையையுண்டாக்கி விடுவள்.

பிதாமாதாக்கள் பெண்ணுக்குச் சிறுபிராயத்திலே கடவுளுடைய குணமகிமைகளையும், புண்ணிய பாவங்களையும், சுவர்க்க நரகபலன்களையும், கடவுளை வழிபடு முறைமையையும், கணவனுக்குத் தொண்டுசெய்யும் முறைமையையும் கற்பித்து, வீட்டுவேலைகளைப் பழக்கல்வேண்டும். பெண்களுக்கு உரிய தருமங்களெல்லாவற்றுள்ளும் முக்கிய தருமம் பதிவிரதம். "குலமகட் கழகுதன் கொழுநனைப் பேணுதல்" என்றார் பெரியோர்.

சூரியோதயத்துக்கு முன்னே நித்திரை விட்டெழுதல், கடவுளைத் தியானித்துத் துதித்தல், வீடு விளக்கஞ்செய்தல், பாத்திரசுத்திசெய்தல், தேவபூசைத்திரவியங்கள் அமைத்தல், மாமன் மாமியாரை வந்தித்தல், கணவனுடைய பணிவிடையைச் செய்தல் இவை முதலியனவெல்லாம் மங்கலவாழ்க்கையையும் செல்வத்தையும் விரும்பிய நன்மனைவியின் செய்கைகளாம்.

உரலிலேனும், உலக்கையிலேனும், அம்மியிலேனும், வாயிற்படியிலேனும், முறத்திலேனும் இருக்கலாகாது; இருந்தாற் சீதேவி நீங்குவள்.

நாடோறும் தன்னாயகன் உண்டபின் தான் உண்ணுதலும், அவன் சயனித்தபின் தான் சயனித்தலும், அவன் நித்திரைவிட்டெழுவதற்கு முன்னே தான் நித்திரைவிட்டெழுதலும் பதிவிரதைக்கு உரியசெய்கைகளாம். கண



வன் கொடுத்த பொருளை வீணாகச் செலவழியாமையும், அவனுடைய வரவுக்கேற்பச் செலவழித்தலும், அவனோடு ஒத்திருத்தலும், அவனாணைப்படி நடத்தலும், கடுஞ்சொல்லின்மையும், இன்சொற்சொல்லலும் அவள் செய்கைகளாம்.

பதிவிரதை தன்வீட்டுக்கு வரும் துறவிகள் முதலிய பெரியோர்களையும் அதிதிகளையும் உபசரித்து, அவர்களுக்கு அன்னங்கொடுத்தல் வேண்டும். குருடர், முடவர், வியாதியாளர், விருத்தர் முதலானவர்கள் வந்தால், முகமலர்ச்சியோடு இயன்றமட்டும்பிக்ஷைகொடுத்து, இனிய வார்த்தைகளைச் சொல்லி அனுப்ப வேண்டும். யாவரோடாயினும் இடி இடித்தது போல உரத்த சத்தத்தோடு பேசலாகாது. இனியகுரலோடு மிருதுவாகப் பேசல்வேண்டும்.

நாயகனுடைய ஆயுள் பெருகும்பொருட்டு மஞ்சளணிதல்வேண்டும். தன்னாயகன் பெயரைச் சொல்லலாகாது. அவன் இருந்தாலன்றி அவனெதிரே தான் இருக்கலாகாது. அவனுடைய உச்சிட்டத்தை அமிர்தம்போலப் புசித்தல் வேண்டும். நாயகன் ஏவுமுன்னரே அவன் குறிப்பறிந்து நடத்தல்வேண்டும். தன்னாயகன் வீட்டுக்கு வரும்பொழுது அவனை முகமலர்ச்சியோடு எதிர்கொண்டு கை கால் கழுவச் சலங் கொடுத்து உபசரித்தல்வேண்டும்.

தகாத வார்த்தை பேசல், தலைக்கடையிலே நிற்றல், பலகணிவழியாகப் பார்த்தல், சிரித்தல்,

பகலிலே நித்திரைசெய்தல், காரியஞ்செய்யாமை, ஆஞ்ஞையில்லாமல் வெளியேபோதல், அயலாரோடு பேசுதல், பொதுப்பெண்கள் போலப் பார்த்தல், தம்மை அழகுபெற அலங்கரித்தல், கூத்து முதலியவைகளைப் பார்க்க விரும்புதல், கணைக்காலும் தனமுந் தெரிய ஆடை உடுத்தல், முதிர்ந்த வயசுடையவர் இல்லாத வீட்டுக்குப்போதல், கூட்டத்தினுள்ளே புன்னகை செய்தல், வேசை தூர்த்தை கற்புநிலைகெட்டவள் மாயக்காரி இவர்களுடன் கூடுதல், கணவனைவிட்டு அயலூருக்குப்போதல், கணவனை விட்டுத் தீர்த்தயாத்திரை முதலானவை செய்தல், தான் விரும்பிய இடத்திலே தூங்குதல், அயல் வீட்டில் இருத்தல் இவையெல்லாம் ஒழுக்கங் கெடுதற்கு ஏதுவாம்.

மனைவியானவள் தனக்கு ஈசுரசங்கற்பத்தினால் வாய்த்த கணவன் அழகில்லாதவனாயினும், நற்குணமில்லாதவனாயினும், வியாதியானாயினும், வறியவனாயினும், கல்வியில்லாதவனாயினும், வயோதிகனாயினும் அவனைச் சிறிதும் அவமதியாது, நன்குமதித்து வழிபடல்வேண்டும். இயன்றமட்டும் தன் கணவனுக்குக் கோபம் பிறவாவண்ணம் நடக்க முயலல் வேண்டும். ஒருபோது கோபம் பிறந்தால் அதனைப் பொறுத்துக் கொண்டு முகமலர்ச்சி காட்டி, இன்சொற்களைச் சொல்லி, அதனைத் தணித்தல்வேண்டும். ஒருபோது கணவன் அநீதியாகக் கோபித்துக் கண்டித்தாலும், தானும் கோபித்து எதிர்வார்த்தை பேசாது



மௌனமாயிருந்து, இதமேபேசி, அக்கோபத்தை ஆற்றல்வேண்டும். "பெண்டிர்க் கழகெதிர் பேசா திருத்தல்" என்று பெரியோர் விதித்திருக்கின்றார்.

மனைவியானவள் தன் கணவனுடைய குற்றங்களைப் பிறருக்குச் சொல்லலாகாது; "குற்றம் பெண்டிர் கூற்றெனத் தகும்" என்றார் ஔவையார். கணவனுடைய துர்க்குணங்களைச் சொப்பனத்திலும் நினைக்கலாகாது. அவனுடைய நற்குண நற்செய்கைகளையே பாராட்டி, அவனை மெய்யன்போடு உபசரித்தல்வேண்டும்.

மனைவியானவள் தன்னுடைய பிதாமாதாச் சகோதரர் முதலிய சுற்றத்தார்களெல்லாரிடத்திலும் பார்க்கத் தன்னாயகனிடத்தே மிக்க அன்புவைத்தொழுகல்வேண்டும். பதிவிரதையானவள் தான் தரித்த ஆபரணங்களெல்லாவற்றையும் துறந்திருந்தாலும், தன் மங்கிலியத்தைமாத்திரம் ஓரிமைப் பொழுதாயினும் துறந்திருக்கமாட்டாள்; அதுபோலவே தன் பிதா மாதா முதலிய சுற்றத்தார்களெல்லாரையும் விட்டு நீங்கினாலும், தன்னாயகனைமாத்திரம் விட்டுநீங்காள்; மனைவியும் கணவனும் ஒருமைப்பட்டு மகிழ்ந்திருந்தால், குலமுழுதும் மகிழ்ச்சியடையும்; அதனாலே தருமம் பொருள் இன்பம் என்னும் மூன்றுபயனும் உண்டாகும்; மனைவியானவள் தன்னாயகன் தன்வீட்டில் இருக்கும்பொழுது மாத்திரமே தன்னை ஆபரணம் புஷ்பம் முதலியவைகளினாலே அலங்

கரித்துக்கொள்ளல்வேண்டும்; தன்னை அவன் பிரிந்திருக்கும்பொழுது அலங்கரித்துக் கொள்ளலாகாது.

மனைவி கற்பு நிலை தவறினவளானால், குலங் கெடும்; அதனால் எல்லாப் பயனுங் கெடும்; ஆகையால் முயற்சிகொண்டு மனையாளைத் தருமமுடையவளாய் இருக்கும்படி காத்தல் வேண்டும். அவள் இரவினும் பகலினும் சற்றேனும் அயலாரோடு பேசாதிருக்கும்படி, மாமியார் முதலானவர்கள் அவளைக் காக்கக்கடவர்கள். பெண்கள் தங்களைத் தாங்களே காத்தல்வேண்டும்; அதுவே அவர்களுக்கு நல்ல காவலாகும்.

விவேகமில்லாத சில பெண்கள், செல்வர் வீட்டுப்பெண்கள் தரித்திருக்கின்ற ஆடையாபரணங்களைப்போலத் தங்களுக்கும் வாங்கித் தரும்பொருட்டுத் தங்கள் கணவர்களை வருத்துகின்றார்கள்; கடன்பட்டாயினும் வாங்கிக் கொடுத்தாலொழியத் திருப்தியடையார்கள்; வாங்கிக் கொடாத பொழுது அவர்களை அவமதிக்கின்றார்கள். விவேகமுள்ள பெண்கள் தங்கள் கணவர்கள் தங்கள் பொருள் வரவுக்கேற்ப வாங்கிக்கொடுப்பவைகளைப் பெற்றுக் கொண்டு, செய்ந்நன்றியறிந்தவர்களாய்த் திருப்தியடைவார்கள். தம்மினும் செல்வராயுள்ளவர்களைப் பார்த்துப் பெருமூச்செறிந்து வீண்வருத்தமடையாமல், தம்மினும் வறியவராயிருப்பவர்களைக் கண்டு தமக்கு உள்ளதே மிக்கதென்று மனமகிழ்ச்சி அடைவார்கள்.



நன்மனையாள், வீட்டிலே தன் கணவன் யாதொருதொழிலும் இல்லாதிருக்கும்பொழுது, கடவுளுடைய குணமகிமைகளை அறிவிக்கும் நூல்களைத் தனக்கு வாசித்து அவைகளின் பொருளை அறிவிக்கும்படி பிரார்த்திப்பாள். தன் கணவன் இடம்ப நிமித்தம் செலவு செய்ய எண்ணினால், இனிய வார்த்தைகளைச் சொல்லித் தடுத்து, வீணிலே செலவாகும் பணத்தைத் தருமத்திலே செலவிடும்படி வேண்டிக்கொள்வாள். தன் கணவன் பிதாமாதாக்களையாயினும் சகோதரர்களையாயினும் சகோதரிகளையாயினும் பகைக்காதபடிக்கும், அவர்களோடு எதிர் வார்த்தை பேசாதபடிக்கும், அவர்களை அன்போடு பாதுகாக்கும்படிக்கும், பணிந்து இனிய வார்த்தைகளினாலே வேண்டிக் கொள்வாள். கெட்ட மனையாளோ இப்படிச் செய்யாமல் எந்நாளும் குடும்பத்திலே கலகமே விளைப்பாள்.

தூரஸ்திரி முதனாள் சண்டாளிக்கும், இரண்டாநாள் பிரமக்கொலை செய்தவனுக்கும், மூன்றாநாள் வண்ணாத்திக்குஞ் சமமாவாள்; ஆதலினால் அவள் இந்த மூன்று நாளும் யாதொரு கருமத்துக்கும் உரியவளல்லள். இராத்திரியில் வீட்டுக்கு விலக்கானால், அவ்விராத்திரியை மூன்று பாகமாக்கி, முதலிரண்டு பாகத்தில் விலக்கானால், அந்நாண்முதலாகக் கொள்ளல்வேண்டும்; மூன்றாம்பாகத்தில் விலக்கானால் மற்றநாண்முதலாகக் கொள்ளல் வேண்டும்.

வீட்டுக்கு விலக்காயுள்ள மூன்றுநாளும், சரீரசுத்திநிமித்தம் நதி முதலியவைகளைத் தீண்டாமல் வேறொருவரைத் தண்ணீர் தரச் சொல்லிச் சரீரசுத்திசெய்து, ஒருநேரம் பகற்பொழுதிலே போசனஞ் செய்துகொண்டிருத்தல் வேண்டும். இம்மூன்றுநாளும் இராத்திரியிற் புசித்தலும், பகலிலே நித்திரை செய்தலும், வீட்டுக்கு விலக்காயுள்ள மற்றைப் பெண்களைத் தீண்டலும், தன்னாயகனெதிரே முகங்காட்டலும், அவனோடு பேசலும், நெற்குத்துதல் முதலிய தொழில்களும் ஆகாவாம்.

தூரஸ்திரி தொட்ட வெண்கலப்பாத்திரத்தையும், பித்தளைப்பாத்திரத்தையும், மூன்றுதரம் வெள்ளையிட்டு நெருப்பூசிக் காய்ச்சிற் சுத்தியாம். அவள் படுத்தநிலம் கோமயத்தினாலே மெழுகிற் சுத்தியாம். அவள் இருந்த இடத்திலே இரண்டுவிற்கிடைக்குள்ளே தொட்டாற் றீட்டாகும்; இரண்டுவிற்கிடைக்குள்ளும் காஷ்டத்தினாலேனும் திருணத்தினாலேனும் மறைத்தால் அப்பாலுள்ள நிலத்திலே தீட்டில்லை.

தூரஸ்திரி நாலாநாள் மண்ணினாலே தந்தசுத்திசெய்து, சூரியோதயத்துக்குமேல் ஆறுநாழிகை சென்றபின், உடம்புமுழுதும் கோசலமும் புற்றுமண்ணும் பூசி, புடைவையை உவர்மண் முதலியவற்றினாலே சுத்திசெய்து, நதி முதலியவைகளிலே ஸ்நானம் பண்ணல்வேண்டும். ஸ்நானம்பண்ணினவுடனே தன்னாயகன் முகத்திலே விழித்தல்வேண்டும்; மற்றைப் புருஷர்முகத்திலே விழிக்கலாகாது. அப்போது நாயகன் இல்லையாயின், தன்னாயகனை மனசிலே சிந்தித்துச் சூரியனைத் தரிசித்தல்வேண்டும். இப்படிச் செய்துகொண்டு வீட்டிலேபோய் பஞ்சகவ்வியமேனும் பாலேனும் நெய்யேனும் உட்கொண்டு, திரும்பவும் ஸ்நானஞ்செய்து, அன்று முழுதும் பாத்திரங்களைத் தீண்டாமலும் பணிசெய்யாமலும் இருத்தல்வேண்டும். ஐந்தாநாள் ஸ்நானஞ்செய்தபின்பு பணிக்கு உரியவளாவாள்.



நாலாநாட்டொடங்கிப் பன்னிரண்டாநாள் வரையும் ருது உண்டானால், சலமோசனத்துக்குச் சுத்திசெய்வதுபோலச் சுத்திசெய்தல்வேண்டும். அப்பாற் பதினெட்டாநாள் வரையும் ருது உண்டானால் ஸ்நானம்பண்ணல் வேண்டும்; அப்பால் ருது உண்டானால் மூன்றுநாள் விலக்காயிருந்து, நாலாநாள் ஸ்நானஞ் செய்தல்வேண்டும்.

மனையாள், தன் கணவன் இறந்துவிட்டால், விதவைக்கு உரிய ஒழுக்கங்களை வழுவாமல் அநுட்டித்தல்வேண்டும். விதவை மயிருடனிருத்தலும், ஆபரணந்தரித்தலும், வெற்றிலை பாக்கு உண்ணலும் ஆகாவாம். வெள்ளைப் புடைவை தரித்தல்வேண்டும். ஒருபொழுது பகலிலே புசித்தல்வேண்டும். பாயல் வேண்டாது தரையிலே சயனித்தல் வேண்டும். ஐம்பொறிகளையும் அடக்கல்வேண்டும். அட்டமியிலும் சதுர்த்தசியிலும் பௌர்ணிமையிலும்

உபவாசஞ் செய்தல் வேண்டும். செபம், தியானம், பூசை, திருக்கோயிலிலே திருவலகிடுதல், திருமெழுக்கிடுதல், பூக்கள் கொய்து திருமாலைகள் தொடுத்தல் முதலிய பணிகளை நாடோறும் விதிப்படி செய்தல்வேண்டும். மிக முதிர்ந்த வயசையுடைய பெரியோர்களிடத்திலே அறிவு நூல்களைக் கேட்டல்வேண்டும்.

கற்புநிலை தவறிய பெண்கள் நரகத்திலே அக்கினிமயமாகிய இருப்புப்பாவையைத் தழுவி வருந்துவர்கள். இயமதூதர்கள் அவர்களை இருப்புக்குடத்தினுள்ளே புகுத்தி, அதன் வாயை அடைத்து, அக்கினிமேல் வைத்து எரிப்பார்கள்; அவர்கள் சரீரத்தை உரலில் இட்டு இடிப்பார்கள்; அக்கினிமயமாகிய சிலையிலே சிதறும்படி அறைவர்கள்; இருட்கிணற்றிலே விழுத்துவர்கள்; அங்கே இரத்தவெள்ளம் பெருகும்படி கிருமிகள் அவர்கள் உடம்பைக் குடையும்; பின்னும் அவர்கள் அக்கினிநரகத்தில் வீழ்த்தப்பட்டு 'என் செய்தோம் என் செய்தோம்' என்று நினைந்து நினைந்து அழுங்குவர்கள்.

பரபுருஷரை இச்சித்துத் தீண்டின பெண்களை இயமதூதர்கள் அக்கினியிற் காய்ச்சிய ஊசிகளினாலே குத்துவர்கள். அவர்களுடம்பிலே தாமிரத்தை உருக்கி வார்ப்பார்கள். பரபுருஷரை இச்சித்துப் பார்த்த பெண்களுக்குக் கண்களிலே அக்கினியிற் காய்ச்சிய ஊசிகளி



னாலே குத்தி முற்கூறிய மற்றைத் துன்பங்களையுஞ் செய்வர்கள்.

கணவன் சொற்படி நடவாதவள் நாயாயும் நரியாயும் பிறப்பள். கணவனை இகழ்ந்தவள் புலியாய்ப்பிறப்பள். பரபுருஷனை இச்சித்தவள் பேய்வடிவமடைவள். கணவன் பசித்திருக்கப் புசித்தவள் பன்றியாய்ப் பிறப்பள்.

கற்புநிலை தவறியபெண்கள். பிறவிதோறும், பிரமேகம், கிரந்தி, சூலை, கிரகணி, குடல்வாதம், குட்டம் முதலிய எண்ணில்லாத வியாதிகளினாலும், வறுமையினாலும் வருந்துவர்கள்.

---

## வீட்டுவேலை.

நாடோறும் சூரியோதயத்துக்கு முன்னே நித்திரை விட்டெழுந்து, அவசிய கருமமும் சௌசமும் தந்தசுத்தியும் முடித்துக்கொண்டு, வீட்டின் உள்ளும் புறமும் துடைப்பத்தினாலே செவ்வையாக அலகிட்டு, சாம்பரையும் குப்பையையும் வாரித் தூரத்திலே கொட்டிவிட்டுக் கை கழுவி, கோமயங்கரைத்த சலத்தினாலே எங்குந் தெளித்தல்வேண்டும்.

பூசைத்தானத்தையும், மடைப்பள்ளியையும், போசனசாலையையும், நாடோறும் கோமயத்தினாலே மெழுகல்வேண்டும். கற்படுத்த

நிலத்தைக் கோமயத்தினால் மெழுகாது, சலத்தினாலே கழுவல்வேண்டும். செங்கலல்லாத கல்லிலே பட்டசாணம் மலத்துக்கொக்கும். செவ்வாய்க்கிழமையிலும், அமாவாசையிலும், பௌர்ணிமையிலும், மாசப்பிறப்பிலும், கிருத்திகை நக்ஷத்திரத்திலும், சிராத்த தினத்திலும், வீடெங்கும் மெழுகல்வேண்டும்.

தாமிர பாத்திரங்களைப் புளியினாலும், வெண்கலப் பாத்திரங்களையும் பித்தளைப்பாத்திரங்களையும் சாம்பராலும், ஈயப்பாத்திரங்களைச் சாணத்தினாலும் தேய்த்துச் சலத்தினாலே அலம்பிக் கவிழ்த்து விடல்வேண்டும். எச்சில் முதலிய அசுசிகள் பட்டாலும், தீண்டத்தகாத மனிதர்களும் மிருகங்களும் பறவைகளும் தீண்டினாலும், இவைகளை நெய்பூசிக் காய்ச்சல் வேண்டும்.

ஆண்ட மட்பாண்டங்களை ஸ்நானஞ் செய்யுமுன்னே தொடலாகாது. மட்பாண்டங்களைத் தாழ்ந்தசாதியாரும், சமயாசாரமில்லாதவரும், பதிதரும், அன்னியசமயத்தாரும், தூரஸ்திரியும், ஆசௌசமுடையவரும், ஒட்டகம் ஊர்ப்பன்றி கழுதை நரி நாய் கோழி காகம் கழுகு கூகை முதலியவைகளும் பார்த்தாலும், தீண்டினாலும், அவைகளிலே எச்சில் பட்டாலும் அவைகளைக் கழித்துவிட்டுப் புதுப்பாண்டங் கொள்ளல் வேண்டும்.

அரிசியையும் பருப்பையும், கல்மண் உமி மயிர் முதலிய குற்றங்கள் இல்லாமற் பரிசோ



தித்து வைத்துக்கொள்ளல் வேண்டும். கறிகளை அரிவாள் கொண்டு திருத்தி வைத்துக் கொள்ளல் வேண்டும். புழுக்கள் பூச்சிகள் எறும்புகள் இல்லாதவைகளும் பொறிப்பறவாதவைகளுமாகிய விறகுகளைத் தெரிந்தெடுத்து வைத்துக்கொள்ளல் வேண்டும்.

குடத்தையும் சலம் வடிக்கும் வஸ்திரத்தையும் எடுத்துக்கொண்டு, நதி முதலியவைகளை அடைந்து, ஸ்நானஞ் செய்து, அநுட்டான முடித்து, குடத்தை இரண்டுதரங்கழுவி, வஸ்திரத்தினாலே ஜலத்தைக் குடத்தில் வடித்து, எடுத்து மூடிக்கொண்டு, வீட்டை அடைந்து, வேறு ஜலத்தினாலே கால்கழுவி, உள்ளே புகுந்து குடத்தை இறக்கி, சுத்தி செய்யப்பட்ட தானத்திலே சிறிது ஜலங்கொட்டி, அதன் மேல் வைத்தல் வேண்டும்.

முன் கவிழ்க்கப்பட்ட பாத்திரங்களெல்லாவற்றையும் அலம்பி எடுத்தல்வேண்டும். மட்பாண்டங்களைச் சுத்திசெய்தெடுத்தல் வேண்டும். குழல் கொண்டாயினும் விசிறிகொண்டாயினும் வாயுவை எழுப்பி அடுப்பில் அக்கினியைச் சொலிப்பித்து, உலைப்பெய்தல் வேண்டும்.

பாத்திரத்தில் அரிசியை இட்டு, ஜலம் வார்த்து, ஆறுதரம் நன்றாகக் களைந்து, கழுநீரை ஊற்றிவிட்டுச் சமையல் பண்ணல் வேண்டும். திருத்தப்பட்ட கறிகளை ஜலம்விட்டுச் செவ்வையாக அலம்பி எடுத்துச் சமையல் பண்ணல்வேண்டும். அம்மி குழவிகளை நன்றாகத்

தேய்த்துக் கழுவிக் கூட்டரைத்துக்கொண்டு முன்போலக் கழுவிவிடல்வேண்டும்.

மடைப்பள்ளியினுள்ளே மூக்குநீர் சிந்தலும், இருமுதலும், தலைசொறிதலும், ஆகாவாம். தலைசொறிந்தாலும் காது கண் மூக்கு அரைக்கீழ் என்னுந் தானங்களைத் தீண்டினாலும், உடனே கை கழுவல் வேண்டும். கை கழுவிய பொழுதெல்லாம் ஈரந்துடைக்கும் பொருட்டு ஒரு கைதுவட்டி வைத்துக் கொள்ளல்வேண்டும்.

அன்னத்தையேனுங் கறியையேனுந் தொட்டால் கை கழுவாமல் பால் தயிர் நெய் முதலிய மற்றைப் பதார்த்தங்களை ஒருபோதுந் தொடலாகாது. அன்னத்துக்கும் கறிக்கும் வெவ்வேறகப்பை வைத்துக்கொள்ளல் வேண்டும். அன்னங்கறி வைக்கும் மட்பாண்டங்களிலே பால் தயிர் வைக்கலாகாது. பால் தயிருக்கு வேறு பாண்டங்களும் வேறகப்பைகளும் வைத்துக் கொள்ளல் வேண்டும். பாலை வடித்தே காய்ச்சல் வேண்டும். எந்தப் பதார்த்தங்களையும் மூடாமல் வைக்கலாகாது. குடித்து மிகுந்த ஜலத்தையும், கால்கழுவி மிகுந்த ஜலத்தையும், மற்றொன்றுக்கும் உபயோகிக்கலாகாது.

கோமயத்தினாலே மெழுகப்பட்ட போசன சாலையிலே, ஒவ்வொருவருக்குந் தனித்தனியே ஒவ்வொரு முழவிடம் கோமயத்தினாலே புள்ளியில்லாமல் மெழுகி மண்டலஞ் செய்தல் வேண்டும். போசனத்துக்கு விதிக்கப்பட்ட இலைகளைச் சலத்தினாலே கழுவி, அவ்வவ்விடங்



களிலே போட்டு, அவைகளைச் சலத்தினாலே புரோக்ஷித்தல்வேண்டும். வாழையிலையைத் தண்டுரியாமல் அதனடி வலப்பக்கத்திலே பொருந்தும்படி போடல்வேண்டும்.

அன்னம் கறி முதலியவைகளை மட்பாண்டங்களில் வைத்துக்கொண்டு படைக்கலாகாது; வெண்கலப்பாத்திரம், ஈயப்பாத்திரம், கற்சட்டி, மரப்பாத்திரம் இவைகளில் வைத்துக்கொண்டு கிரமப்படி படைத்தல்வேண்டும். அன்னத்தை அகப்பையினாலன்றிக் கையினாற் படைக்கலாகாது. நெய்யையேனும் லவணத்தையேனும் உச்சிட்டத்திலே படைக்கலாகாது. உச்சிட்டஞ் செய்தபின் லவணம் வேண்டுமாயின், கறியிலேனும் மோரிலேனும் கலந்து படைத்தல் வேண்டும்.

போசனஞ் செய்தவர் எழுந்தபின், இலையை எடுத்து எறிந்துவிட்டு, கை கால்களைக் கழுவிக் கொண்டு உச்சிட்டத் தானத்தைக் கோமயங் கரைத்த சலந்தெளித்து, இடையிலே கையை எடாமலும், முன்பு தீண்டிய இடத்தைப் பின்பு தீண்டாமலும், புள்ளியில்லாமல் மெழுகி, புறத்தே போய்க் கை கழுவிவிட்டு, பின்னும் அந்தத்தானத்திலே கோமயங் கரைத்த சலந் தெளித்துவிடல்வேண்டும்.

தமது பந்திக்கு உரியரல்லாதவருக்கு அன்னங்கறி படைத்தால், கை கழுவாமல் உள்ளே உள்ள அன்னங்கறிகளைத் தீண்டலாகாது. அவருக்குப் படைத்து மிகுந்த அன்னங்கறிகளை அவரின்மேலாகிய சாதியாருக்குஞ் சமயத்

தாருக்கும் படைக்கலாகாது. அவருக்கு எடுத்துப்படைத்த பாத்திரங்களைச் சுத்திசெய்யாமல் உள்ளே சேர்க்கலாகாது. அவர் புசித்த உச்சிட்டத்தானத்தை அவரே சுத்திசெய்து ஜலபாத்திரத்தைக் கவிழ்த்துவிடும்படி செய்து, புறமும் உள்ளும் சலம்விட்டு அலம்பி எடுத்தல் வேண்டும்.

சாதியாலும் சமயத்தாலும் ஒத்தவரேயாயினும் ஸ்நானஞ் செய்யாதவரும், ஆசௌசமுடையவரும், போசனஞ்செய்தால் தாமே இலையெடுத்தெறிந்து சுத்திசெய்துவிட்டுச் சலபாத்திரத்தைக் கவிழ்த்துவிடல்வேண்டும்.

எல்லாரும் போசனஞ் செய்தபின்பு, தான் போசனஞ்செய்துகொண்டு, பாத்திரங்களெல்லாவற்றையும் சுத்திசெய்து வைத்தல் வேண்டும். புசிக்கும்போது இடையில் எழுந்துவிட்டுத் திரும்ப இருந்து அவ்வன்னத்தைப் புசிக்கலாகாது. பகலிலே நித்திரை செய்தலாகாது; நித்திரைசெய்தால், ஸ்நானஞ்செய்யாமற் பாண்டங்களைத் தொடலாகாது. வெற்றிலை பாக்குத்தின்றுகொண்டு சமையல் பண்ணலும், போசனம் படைத்தலும் ஆகாவாம். வீட்டுக்குப் புறத்திலே போனால் கால் கழுவாமல் உள்ளே பிரவேசிக்கலாகாது.

பிற்பகலிலே வீட்டின் உள்ளும் புறமும் அலகிட்டுச் சலந்தெளித்தல்வேண்டும். அஸ்தமயனகாலத்திலே வாய்கொப்பளித்துக் கைகால் கழுவி, அனுட்டானமுடித்துக்கொண்டு, விளக்



கேற்றி இலக்குமியைத் தியானித்துக் குங்குமமும் ஒரு புஷ்பமுஞ்சாத்தி வைத்தல்வேண்டும்.

பின்பு சமையல் செய்துமுடித்து, எல்லாரும் போசனஞ் செய்தபின், தானும் போசனஞ் செய்துகொண்டு, மிகுந்த அன்னத்தை எடுத்து வெண்கலப் பாத்திரத்திலேனும், ஈயப்பாத்திரத்திலேனும், கற்சட்டியிலேனும், மரப்பாத்திரத்திலேனும் வைத்து மூடிவிட்டு, மட்பாண்டங்களெல்லாவற்றையும் சுத்திசெய்து கவிழ்த்தல் வேண்டும். மற்றைப் பற்றுப்பாத்திரங்களெல்லாவற்றையும் எளிதிற் சுத்திசெய்யப்படும் வண்ணம் சலம்விட்டு வைத்துவிட்டுக் கதவு பூட்டிக்கொண்டு நித்திரை செய்தல்வேண்டும். சூரியோதயத்துக்கு முன்னே விழித்தெழுந்துவிடல் வேண்டும். படுக்கும்போதும் விழிக்கும்போதும் கடவுளை அன்போடு தியானித்து, அவருடைய திருநாமங்களை உச்சரித்தல்வேண்டும்.

ஆசௌசமுடிவிலே பழைய மட்பாண்டங்களெல்லாவற்றையும் கழித்துவிட்டு, புதுமட்பாண்டங் கொள்ளல்வேண்டும். வீடெங்கும் சுத்திசெய்தல்வேண்டும். வஸ்திரங்களெல்லாவற்றையுந் தோய்த்தும் சயனங்களைக் கழுவியும் வெய்யிலிலே உலரும்படி போடல்வேண்டும். வெண்கலப்பாத்திர முதலிய பாத்திரங்களை வெள்ளையிட்டு நெய்பூசிக் காய்ச்சல் வேண்டும். சூரியோதயத்துக்குமேலே, ஆறு நாழிகை சென்றபின், ஆசௌசமுடையவரும், ஆசௌசமுடையவரிடத்தே போசனஞ் செய்தவரும்,

ஸ்நானஞ்செய்து புண்ணியாகவாசனஞ் செய்வித்துப் பஞ்சகவ்வியம் உட்கொண்டு, திரும்பவும், ஸ்நானஞ்செய்தல் வேண்டும். அதன்பின்பே சமையல் ஆரம்பித்தல் வேண்டும்.

தைச் சங்கராந்தியிலே, பழைய மட்பாத்திரங்களெல்லாவற்றையும் கழித்துவிட்டு, வீடெங்கும் சுத்திசெய்து, வஸ்திரங்களெல்லாவற்றையும் தோய்த்தும் சயனங்களைக் கழுவியும் வெய்யிலிலே உலரும்படி போட்டுவிட்டு, ஸ்நானஞ்செய்து, நவபாண்டங்களை ஆளல்வேண்டும்.

---

## வீட்டுக்கொல்லை.



அழுகின பதார்த்தங்களும் மலமூத்திரங்களும் துர்க்கந்தத்தை வீசும். துர்க்கந்தம் அளாவிய காற்றைப் பூரித்தாலும், அந்தக் காற்று உடம்பிலே பட்டாலும், மலமூத்திரங்களை மிதித்தாலும், மலமூத்திரபூமியிலே உண்டாகிய பதார்த்தங்களைப் புசித்தாலும், மலமூத்திரவழுக்குச் சேர்ந்த சலத்தை உபயோகித்தாலும், பலவித நோய்கள் உண்டாகி, மனிதருக்குச் சடிதியிலே மரணத்தை விளைவிக்கும். ஆதலினாலே, மனிதர் சஞ்சரிக்கும் இடமெல்லாம் சுசியுடையதாய் இருக்கும்படி பாதுகாத்தல் பெருந்தருமம்.

வீட்டுக்குச் சமீபத்திலே மலமூத்திரங்களை விடுதலும், எச்சிலிலைகளையும் குப்பைகளையும்



போடலும், எச்சிலுமிழ்தலும், கை கால் கழுவலும், ஆகாவாம்.

வீட்டைச்சேர்ந்த கொல்லையெங்கும் மலமூத்திரங்களினாலும், எச்சிலினாலும், குப்பையினாலும் அசுசி அடையாவண்ணம் அந்தக் கொல்லையிலே, வீட்டுக்குத் தூரத்திலே, மலகூடமும், எச்சிலிலைக்குழியும் குப்பைக்குழியும் அமைப்பித்தல் வேண்டும். இப்படிச் செய்தால் கொல்லையும் வீடும் அசுசியடையாமல், சுசியுடையவைகளாயே இருக்கும்.

வீட்டுக்குச் சமீபத்தில் சிறுகுழிகள் உண்டானால் அவைகளைத் தூர்த்துப்போடல் வேண்டும். அப்படிச் செய்யாதொழிந்தால், அவைகளிற்சென்ற தண்ணீர் அங்கே தங்கிச் சேறுகித் துர்க்கந்தத்தை வீசும்; அந்தச் சேற்றிலே புழுமுதலிய செந்துக்கள் உண்டாகும். அந்தத் துர்க்கந்தத்தினாலே சுரமுதலிய வியாதிகள் வரும்.

கொல்லையில் உதிர்ந்த இலைகளையும் சருகுகளையும் நாடோறும் பெருக்கி, குப்பைக் குழியிலே கொட்டல்வேண்டும். கொல்லையிலே முளைத்த பயன்படாத செடிகளெல்லாவற்றையும் காலந்தோறும் களைந்து, குப்பையுடனே போடல்வேண்டும். இப்படிச் சேர்கின்ற இரணான குப்பை பயிர்களுக்கு நல்ல எருவாகும்.

யாவரும் தங்கள் தங்கள் வீட்டுக்கொல்லைகளிலே உபயோகமாகும் பயிர்களையும், சிறந்த மரங்களையும், அழகிய புஷ்பச் செடிகளையும் வைத்து, அந்தக்கொல்லைகளை மிகச் சிறப்பித்

தல் வேண்டும். இத்தன்மையுடைய கொல்லைகளிலே உண்டாகும் நல்லகாற்று ஆரோக்கியத்தை விளைவிக்கும். பனைமரங்களையும் தென்னைமரங்களையும் வீட்டுக்குச் சமீபத்தில் வைக்கலாகாது.

கிணற்றினுள்ளே இலைகள் உதிர்ந்து அழுகினாலும், சூரியகிரணம் படாதொழிந்தாலும், ஜலங்கெட்டுப்போம்: ஆதலினாலே, கிணற்றுக்குச் சமீபத்திலே பெருமரங்களை வைக்கலாகாது. பழஞ்சலமும், தூர் அதிகமாக உள்ள சலமும், வியாதியை உண்டாக்கும். ஆதலினாலே கிணற்றுச்சலத்தைக் காலந்தோறும் முழுதும் இறைத்துத் தூர்வாரிச் சுத்திசெய்வித்தல் வேண்டும். இரண்டு மூன்று நாளுக்கொருதரம் கிணற்றுச்சலம் முழுதையும் இறைப்பித்து வந்தால் கொல்லையிலுள்ள மரங்களுக்கும் செடிகளுக்கும் பயிர்களுக்கும் உபயோகப்படும்; அதுமட்டோ, ஜலம் நன்றாயிருக்கும். புதிது புதிதாக ஊறுஞ்சலம் நல்ல சுவையுடையதாயும், வியாதியை விளைவிக்காததாயும் இருக்கும்.

சுசியுடைமை சரீரத்துக்கு ஆரோக்கியத்தையும், மனசுக்குச் சௌக்கியத்தையும் கொடுக்கும். இவ்வுண்மை அவிவேகமுள்ள ஏழைச்சனங்களுக்குத் தெரியாது: ஆதலினாலே பக்கத்திலுள்ள விவேகிகள் இதை அவர்களுக்கு நன்றாகத் தெரியும்படி சொல்லல்வேண்டும்.

---



## ஆரோக்கியம்.

அறம் பொருள் இன்பம் வீடு என்னும் புருஷார்த்த நான்கையும் அடைவதற்குக் கருவி சரீரம். ஆதலினால், மரணபரியந்தம் தங்கள் தங்கள் சரீரத்தை வியாதி அடையாவண்ணம் பாதுகாப்பது யாவருக்கும் ஆவசியகம்; ஆகையாற் சரீரத்தை ஆரோக்கியமுடையதாகப் பாதுகாக்கு முறைமைகளைச் சொல்வாம்.

நாடோறும் சூரியோதயத்துக்கு முன்னே விழித்தெழுந்தால், புத்திதெளிவடையும்; நரம்புத்துவாரத்து நீர்சுத்தியுறும்; பித்தம் நீங்கும்; வாதபித்தங்கள் தத்த நிலையைப் பொருந்தும்.

காலையிலே சிலப்பமேனும் குதிரையேற்றமேனும் கால் நடையேனுஞ் செய்துகொண்டு வந்தால் சரீரம் இறுகும்; பசிஉண்டாகும்; வாதமும் கபமும் வலியும் சூலையும் நீங்கும்; மலம் இறங்கும்.

காலந்தோறும் ஒழுங்காகப் போசனஞ் செய்துகொண்டு வருதல்போலவே, அதினின்று பிரியும் மலசலாதிகளை ஒழுங்காக மோசனஞ் செய்துகொண்டு வருதலும் ஆரோக்கியத்துக்கு ஏதுவாகும். நாடோறும் காலை மாலை என்னும் இரண்டு நேரத்திலும் தவறாமல் மலமோசனஞ் செய்யும்படி பழகிக் கொள்ளல் வேண்டும். இடையிலே மலசல மோசனஞ் செய்யவரினும்

தடைப்படாது செய்தல்வேண்டும். மலசலங் களை அடக்கினல் வியாதிஉண்டாகும். மலசலம் தங்காமல் இறங்குமாயின் வாதபித்த சிலேஷ் மங்கள் தத்தநிலையைப் பொருந்தும். சமாக்கினி உண்டாகும்; வியாதிகள் அணுகாவாம்; சமாக் கினியாவது திருப்தியாக உட்கொள்கின்ற அன்னபானீயமுதலியவைகளை யெல்லாம் முறை மைப்படி காலவளவைக்கு மாறுபடாமல் நன்ரு கத் தகிக்கும் உதராக்கினியாம்.

இயல்பாகிய துவர் உள்ள தூள் இலை கொம்பு என்பவைகளினுலே பல்லின் உள்ளையும் புறத்தையும் செவ்வையாக விளக்கல்வேண்டும். இப்படி விளக்கினுல், வாதபித்தசிலேஷ்மங்களி ஞலே பல்லினிடத்தும் அதன் வேரினிடத்தும் உண்டாகின்ற இருபத்துமூன்று ரோகங்களும் உண்டாகாவாம். பற்கள் அசைவில்லாமல் உறு தியாய் இருக்கும். செங்கல், மணல், கரி, பாளை, வைக்கோல் என்பவைகளினுலே பல் விளக்க லாகாது.

சரீரத்தில்உள்ள மயிர்க்கால்கள்வழியாக வேர் வையாய்க் கழியும் அழுக்குக்களெல்லாம் இரத் தத்தினின்று தடையின்றிப் பறியும்பொருட்டு, நாடோறும் ஒழுங்காகச் சரீரத்தைத் தேய்த்து ஸ்நானம்பண்ணிக்கொண்டு வரல்வேண்டும்.

ஸ்நானத்துக்குப் பிராதக்காலமே உத்தம காலம். பிராதஸ்நானஞ்செய்தால், பசிஉண்டா கும்; நோய்அணுகாது. வெந்நீரிலேசெய்யும் ஸ்நானத்தைப்பார்க்கிலும், தண்ணீரிலே செய்



யும் ஸ்நானமே உடம்புக்கு அதிக உறுதியைத் தரும்.

சூரிய சந்திர கிரணம்படாத நீரும், காற் றுப்படாத நீரும், பாசிநீரும், அதிக சேறுள்ள நீரும், இலை உதிர்ந்த நீரும், புழு உள்ள நீரும், துர்க்கந்தமுள்ள நீரும், வியாதிகளை விளைவிக் கும்; ஆதலினுல், இவைகள் ஸ்நானம் சமையல் பானம் என்பவைகளுக்கு ஆகாவாம்.

ஸ்நானம் பண்ணி நெடுநேரம் ஈரத்தோ டிருக்கலாகாது. உடம்பிலே ஈரஞ்சுவறினுல் குளிர் உண்டாகும்; அதினுல் வியாதி உண்டா கும்; ஆதலினுலே குளிரும் வியாதியும் உண் டாகாவண்ணம் சீக்கிரம் ஸ்நானம்பண்ணி, அது முடிந்தவுடனே உடம்பிலே சற்றும் ஈர மில்லாமல் துடைத்துவிட்டுத் தோய்த்துலர்ந்த வஸ்திரந்தரித்துக் கொள்ளல் வேண்டும். உடுத்தவஸ்திரம் நனைந்தால், உடனே அதைக் களைந்துவிட்டு வேறு உலர்ந்த வஸ்திரந் தரித் துக்கொள்ளல்வேண்டும்.

மனமுயற்சியாலேனும் சரீரமுயற்சியாலே னும் உடம்பு இளைத்திருக்கும்பொழுதும், போச னஞ்செய்தவுடனும் ஸ்நானம்பண்ணலாகாது. பிள்ளைகள் காலையிலே ஸ்நானஞ் செய்யாது போசனஞ் செய்தால், ஐந்துநாழிகை நேரத்திற் குப் பின்பு ஸ்நானம் பண்ணல் வேண்டும்.

உடுக்கிற வஸ்திரங்களும் சயனிக்கிற படுக் கைகளும் சிறிதும் அழுக்கில்லாமற் சுத்தமா யிருத்தல்வேண்டும். சரீரத்தினின்றும் வெளிப் படும் அழுக்கானது வஸ்திரம் மெத்தை தலை

யணை முதலியவைகளில் ஒட்டிக்கொள்ளும். அவைகள் தோலோடு சம்பந்தப்பட்டால், அவைகளிலே படிந்திருக்கின்ற அழுக்கானது மயிர்க்கால்களை அடைத்து, வியாதியை விளைவிக்கும்; படுக்கைகளை நாடோறும் காற்றிலே போடல்வேண்டும்.

காலந்தோறும் ஒழுங்காகப் போசனஞ் செய்துவரல்வேண்டுல். அகப்பட்டபொழுதெல்லாம் போசனஞ் செய்யலாகாது. முன் புசித்த போசனம்முழுதும் சீரணமாகி மிகப்பசி தோன்றியபின்பு போசனஞ்செய்தல்வேண்டும். இப்படிச் செய்யாதொழிந்தால் புசித்தபோசனஞ் செவ்வையாகச் சீரணமாகாது. அதுமட்டோ, பக்குவாசயத்திலே சிறிது சீரணமாயபோசனம் புசித்தபோசனத்தோடு கலந்து, வியாதியை விளைவிக்கும்.

போசனம் பண்ணுமிடத்து தன் சரீரசுபாவத்தோடு மாறுகொள்ளாதவைகளையும், காலவியல்போடு மாறுகொள்ளாதவைகளையும், சுவைவீரியங்களினாலே தம்முள்ளே மாறுகொள்ளாதவைகளையும் புசித்தல்வேண்டும். அப்படிப் புசிக்குமிடத்தும், அளவுக்கு அதிகமாகவேனும் அற்பமாக வேனும் புசிக்கலாகாது. போசனம் மிகுந்தாலும் குறைந்தாலும் நோய் செய்யும்.

போசனஞ் செய்யும்பொழுது சலபானம் பண்ணலாகாது. போசனமுடிந்தபின்பே சலபானம் பண்ணல்வேண்டும். தாகமெடுத்தாலும் மீட்டும் மீட்டும் சலபானம் பண்ணலாகாது.



அதிக சுடுகையுள்ள அன்னமும், நன்றாகச் சமையாத அன்னமும், குழைந்த அன்னமும், ஊசிய அன்னமும், பழங்கறியும், கருணைக்கிழங்கில்லாத கிழங்குகளும் புசிக்கலாகாது.

நன்றாகச் சமைத்த துவரம்பருப்பைப் போசனத்தின் முதலிலே பசுநெய்யுடன் அன்னத்திற் கலந்து புசித்தால், ஒருபிடி அன்னத்திற்கு ஒருபிடி சதை வளரும். அன்னத்தில் இட்டுண்ணும் கறிகளோடு துவரப்பருப்பு ரசம்சேர்த்துக் கொள்வது உத்தமம்.

போசன முடிவிலே புளித்த தயிரும் உப்பும் அன்னத்திற் சேர்த்துப் புசித்தால், முன்னுண்ட பதார்த்தங்களின் உள்ள திரிதோஷமும் நீங்கும்; எல்லாப்பதார்த்தங்களும் சீரணமாகும். மோரும் அன்னமும் புசித்தால், பசி உண்டாகும். மேகநீரும் மூலமும் பாண்டுவும் கிராணியும் நீங்கும்.

ஊறுகாயெல்லாம் உதராக்கினியை வளர்க்கும்; அருசியைப் போக்கும்; வாதபித்தசிலேஷ்மங்களைத் தொலைக்கும். ஆதலினாலே, தயிர்ச்சாதத்தோடும் மோர்ச்சாதத்தோடும் ஊறுகாய் சேர்த்துக்கொள்ளல் வேண்டும்.

இரவிலே தயிரும், மோரும், கீரைகளும், கிழங்குகளும், கனிகளும் உண்ணலாகாது. பகலிலே பால் உண்ணலாகாது. இரவில் உண்ணத்தக்க கறிகளாவன துவரம்பருப்பு, அவரைப்பிஞ்சு, முருங்கைக்காய், முள்ளிக்காய், தூதுளங்காய் என்பவைகளாம்.

இராவிலே சேஷித்த அன்னத்தில் ஒரு சுக்குத்துண்டைப்போட்டு, ஆறிய வெந்நீரைவிட்டு வைத்தல் வேண்டும். அந்தப்பழஞ்சோற்றைக் காலையிலே அந்த நீராகாரத்தோடு புசித்தல் வேண்டும். அப்படி புசித்தால், வாதபித்தம், போம்; தாகம் நீங்கும்; பசியுண்டாகும்.

இரண்டுகாலபோசனமே உத்தமம். மூன்றுகாலபோசனங்கொள்ளல் வேண்டுமானல், காலையிலே மூன்றேமுக்கானுழிகையுள்ளும், உச்சிக்காலத்திலே பதினைந்து நாழிகையுள்ளும், இராத்திரியிலே ஏழரை நாழிகையுள்ளும், போசனஞ் செய்தல் வேண்டும்.

சரீரமுயற்சியேனும் மனமுயற்சியேனும் செய்து இளைத்தவுடனே போசனம் பண்ணலாகாது. போசனஞ் செய்தவுடனே கடுமையாகிய மனமுயற்சியேனும் சரீரமுயற்சியேனும் செய்யலாகாது. போசனஞ் செய்தவுடனே நூறடியுலாவலாகிய குறுநடை கொள்ளல் வேண்டும்.

காலை வெய்யிலிற்காய்ந்தால், வியாதிகளெல்லாம் அணுகும். மாலைவெய்யிலிற்காய்ந்தால், வியாதிகள் அணுகாவாம். நெருப்பிற்காய்ந்தால், அதியுஷ்ணமும், அதிதாகமும், இரத்தபித்த நோயும், இரத்தக்கொதிப்பும் உண்டாகும். சுடுகாட்டுப்புகை உடம்பிலே பட்டால் ஆயுசைக் கெடுக்கும். பனியிலும், மழையிலும், பனிக்காற்றிலும், பெருங்காற்றிலும் திரிதலாகாது.



சரீரத்தில் உள்ள இரத்தம் அசுத்தமாகிய காரிரத்தமாயின், வியாதி உண்டாகும்; சுத்தமாகிய செவ்விரத்தமாயின் வியாதி உண்டாகாது. அசுத்த வாயுவைப் பூரித்தாற் செவ்விரத்தமும் காரிரத்தமாகும்; சுத்தவாயுவைப் பூரித்தாற் காரிரத்தமும் செவ்விரத்தமாகும்; ஆதலினல் எப்போதும் சுத்தவாயுவையே பூரித்தல்வேண்டும். தன்னலும் பிறராலும் இரேசிக்கப்பட்ட காற்றும் துர்க்கந்தம் அளாவிய காற்றும் அசுத்தமாகிய நச்சுக்காற்ருகும். காற்றில்லாத ஒடுங்கியவீட்டினுள்ளும், நெருங்கிய சனக்கூட்டத்தினுள்ளும் இருக்கலாகாது. இருந்தால் அசுத்தவாயுவே பூரிக்கப்படும்; அதனல் விளையுங்கேடு தற்காலத்தில் விளங்காதாயினும், சற்றேற காலம் செல்லச்செல்ல இனிதுவிளங்கும்.

யாவரும் தாம் தாம் இருக்கும் அறையினுள்ள காற்றுச்சுத்தமாய் இருக்கும்பொருட்டு அங்கங்கே வேண்டுமட்டுங் காற்று வீசப்பண்ணிக்கொள்ளல்வேண்டும். அறையினுள்ளே சுத்தவாயு வீசவேண்டுமாயின், ஒருபலகணியாயினும் வைத்துக்கொள்ளல் வேண்டும். நிலமட்டத்தில் அசுத்தவாயு அளாவியிருத்தலினலே, கீழே படுக்காது கட்டிலின்மேற் படுப்பதே உத்தமம்.

தோலிலே ஒளி படுவது சரீரத்துக்கு ஆரோக்கியத்தை விளைவிக்கும். தரைமட்டத்திற் ருழ்வாயும் ஈரமாயும் இருளுள்ளதாயும் உள்ள அறையினுள்ளே இருந்து வேலைசெய்

வோர் சரீரம் வெளுத்து வியாதியடைகின்றனர். தோலை ஊடுருவிச் செல்லும் ஒளி அத்தோலுக்கு மாத்திரமன்றி, இரத்தத்துக்கும் நயத்தைக் கொடுக்கும்; அந்த நயம் அதன்வழியாக உடம்பு முழுதினுஞ் செறியும்; ஆதலினால் வீடுகளும், படைப்பள்ளிகளும், பள்ளிக்கூடங்களும், கம்மியர்சாலைகளும், காற்றுவீசத்தக்கவைகளாய் மாத்திரமன்றி, வெளிச்சம் நன்றாகச் செல்லத்தக்கவைகளாயும் இருத்தல் வேண்டும்.

சூரியகிரணமானது, பயிர் செடி முதலிய தாவரங்களுக்குப் போலவே, மனிதருக்கும் நன்மையைக்கொடுக்கும். நிழலிலே வளரும் பயிர்கள் வெளுத்து, சூரியகிரணம் படும் பயிர்களைப் பார்க்கிலும்மிகப்பெலங்குறைந்திருக்குமன்றோ? அது போலவே, இருட்டறைகளில் இருக்கும் மனிதர்கள் வெளுத்து, நல்ல வெளிச்சம் பொருந்திய வீடுகளில் இருப்பவர்களைப் பார்க்கிலும் மிகப்பெலங்குறைந்திருப்பார்கள்.

சுத்தவாயு உள்ள இடங்களிலே, நாடோறும் சரீரம் வேர்த்துக் களைக்கும்படி அதிக நேரம் வேலைசெய்தல் வேண்டும். அதுகூடாத போது, சுத்தவாயு உள்ள இடங்களிலே, ஓடி உலாவித் திரிதல்வேண்டும். உலாவுதலுக்கு மாலைப்பொழுதினும் காலைப்பொழுதே உத்தம காலம். சூரியன் அத்தமிக்குங் காலத்தினும் பார்க்கப் பகற்காலத்தில் வேலைசெய்தலே ஆரோக்கியத்துக்கு ஏதுவாகும்.

காலந்தோறும் போசனம் ஒழுங்காகச் செய்துவருதல் போலவே சரீரமுயற்சியும் ஒழுங்காகச் செய்துவரல்வேண்டும். சிலநாள் ஒழுங்காகச் சரீரமுயற்சி செய்துகொண்டு வந்து ஒரு நாட் செய்யாது விட்டால், அதுசிலநாள் ஒழுங்காகப் போசனஞ் செய்துகொண்டுவந்து ஒரு நாட் போசனஞ் செய்யாது விடுதல் போலும்.



குனிந்த நிலையிலும் நிமிர்ந்த நிலையே ஆரோக்கியத்தை விளைவிக்கும். ஆதலினால், இருக்கும்போதும், நிற்கும்போதும், நடக்கும்போதும், வேலைசெய்யும்போதும், சரீரம் குனிந்த நிலையின்றி நிமிர்ந்த நிலையுடையதாயே இருத்தல் வேண்டும்.

நிமிர்ந்த நிலையினாலே சரீரத் தவயவங்கள் பலவும் செவ்வையாக இயங்கப்பெற்று அழகுடையனவாய்விளங்கும். குனிந்த நிலையினாலேமார்பு ஒடுங்கி, வயிறு தாழ்ந்து, தோள்கள் கவிந்து, சரீரம் நோயடையும். குனிந்த நிலையினும்பார்க்க நிமிர்ந்த நிலையிலே நெடுநேரம் அதிகவேலை செய்யலாம். பிள்ளைகள் தலையுந் தோள்களும் குனிப்பழகும்படி ஒருபோதும் விடலாகாது.

குனிந்த நிலையினும் பார்க்க நிமிர்ந்த நிலையிலே சுவாசக் கருவிகளெல்லாம் செவ்வையாக இயங்கும். அப்பொழுது உண்டாகும் சத்தம் மிகத் தெளிவாக விளங்கும்.

உரக்கப் பாடுவதினாலும் வாசிப்பதினாலும் குரலுறுப்புக்கள் தேறிப் பெலங்கொள்ளும்; அதனாலே மார்பு ஆரோக்கியம்பெற்று விசாலிக்கும்; சுவாசப்பைகளும் மிடறும் பெரும்பாலும் ஆரோக்கியத்தை அடையும்.

வார்த்தை வசனிக்குமிடத்து மிதமாக வசனித்தால் உள்ளறிவும் ஆரோக்கியமும் உண்டாகும். அதிகமாக வசனித்தால், இரசதாதுவும் இரத்ததாதுவும் சுண்டும்; அதனாற் பித்தம் அதிகரிக்கும்; அதனாற் சிலேஷ்மரோகம் பிறக்கும்; அதனாற் சலரோகம் உண்டாகும்.

மனமும் சரீரமும் தாம்செய்த முயற்சியளவுக்கேற்ப இளைப்பாறல்வேண்டும். மனசையும் சரீரத்தையும் இளைப்பாற்றுவது நித்திரை. நித்திரைக்கு ஏற்றகாலம் பகற்காலமன்று இராக்காலமேயாம்.

பகனித்திரையானது பதினெட்டுவித வாதரோகங்களை விளைவிப்பதற்கு ஒருவித்தாகும். பத்தியங்கொண்டவருக்கு சூரிய வெப்பமும், உண்ட ஔஷத வெப்பமும், பத்தியத்தினால் உண்டாகும் வெப்பமும் ஆகிய மூன்று வெப்பத்தோடு பகனித்திரையாலாகும் வெப்பமும் கூடுமாயின், நேத்திரரோகங்களும் இரத்த பித்தரோகமும் உண்டாகும்; பகனித்திரையினாலே இரா நித்திரை குழம்பிவிடும்.

இரவில் நித்திரை செய்யாதவரிடத்தே சித்தமயக்கம் மந்தம் முதலிய நோய்கள் வந்து பொருந்தும். அர்த்தராத்திரிக்குமுன் இரண்டு நாழிகை நேரம் நித்திரைசெய்வது அர்த்தராத்திரிக்குப்பின் நான்கு நாழிகை நேரம் நித்திரை செய்வதற்குச் சமமாகும். ஆதலினால், இராத்திரியின் பிற் பாகத்தில் நித்திரை செய்வதினும் முற்பாகத்தில் நித்திரை செய்வதே ஆரோக்கியத்துக்கு ஏதுவாகும். விடியற்காலத்தில் ஒருமுறைவிழித்துப் பின் செய்யும் நித்திரை கனாக் காண்டற்கு ஏதுவாகி உரோகத்தை விளைவிக்கும். ஆதலினால், விடியற்காலத்து நித்திரையை இயன்றமட்டும் தவிர்த்துக் கொள்ளல்வேண்டும். நித்திரை செய்யாமையும் குறைந்த நித்திரையும் போலவே, மிகுந்த நித்திரையும் வியாதிக்கு ஏதுவாகும். தூக்கம் உண்டாகுமுன் படுத்தால் நித்திரை வரும் வரையும் மனம் துர்விஷயத்திற்சென்று கேட்டை விளைவிக்கும்.



இரவிலே நெடுநேரஞ் செல்லுமுன் போசனஞ்செய்து கொண்டு, அது சீரணமானவுடனே சீக்கிரம் படுத்து நித்திரை செய்து, சூரியன் உதிக்க ஐந்து நாழிகைக்கு முன்னே விழித் தெழுந்துவிடப் பழகிக் கொள்ளல் வேண்டும். உண்ட உணவு சீரணமாகுமுன் சயனிக்கலாகாது.

சயனிக்குமிடத்து வடக்குத் திக்கல்லாத திக்கிலே தலைவைத்து, இடக்கை கீழாகச் சயனித்தல்வேண்டும். கழுத்துக்கும் தோளுக்கும் மத்தியிலிருக்கும் அளவினதாகிய உயரமும், வேண்டியமட்டினதாகிய நீளமும் உள்ளதாக, இலவம் பஞ்சினாலே தைப்பித்த தலையணையின்மேலே சிரசுவைத்துப் படுத்துக்கொண்டால், பாதாதிகேசம் வரைக்கும் உள்ள எந்தப் பக்கத்து நரம்புகளும் சமனாக இருக்கும்; சிரசைப் பற்றிய நோய்கள் நீங்கிவிடும்.

வாரத்துக்கு இரண்டுதரமாயினும் ஒருதரமாயினும் எண்ணெய் தேய்த்து ஸ்நானஞ் செய்தல் வேண்டும். பக்ஷத்துக்கு இரண்டு தரமாயினும் ஒருதரமாயினும் க்ஷௌரஞ் செய்வித்துக் கொள்ளல் வேண்டும். ஒன்றரைமாசத்துக் கொருதரம் நசியம் இடல்வேண்டும். நான்கு மாசத்துக் கொருதரம் பேதிமருந்து உட்கொள்ளல்வேண்டும். ஆறு மாசத்துக்கு ஒருதரம் வமனமருந்து உட்கொள்ளல்வேண்டும். பேதியெனினும்ரேசனமெனினும்பொருந்தும். வமனமெனினும் சர்த்தியெனினும், வாந்தியெனினும் பொருந்தும்.

எண்ணெய் தேய்க்குமிடத்து, நாசிக்கு நந்நான்கு துளியும், காதுகளுக்கு அவ்வாறு துளியும்விட்டு, சிரசிலும் உடம்பிலும் கால்களிலும் சூடெடாமல் தேய்த்து ஊறச் செய்து, பின்பு சிகைக்காயரைப்புத் தேய்த்து ஸ்நானஞ் செய்து, ஈரமும் வேர்வையும் இல்லாவண்ணம் துடைத்தல் வேண்டும். நெய் தேய்த்துக் கொண்டால், பருப்பரைப்புத் தேய்த்தல் வேண்டும்.

எண்ணெயைக் கால்களில் இட்டாற் கண்ணோய் நீங்கும்; கண்களில் இட்டாற் காதுநோய் நீங்கும்; காதுகளில் இட்டால் தலைநோய் நீங்கும்; தலையில் இட்டால் எல்லா நோயும் நீங்கும்.

சித்திரை வைகாசிமாசங்களில் சூரியோதயமாகி ஐந்து நாழிகையுள்ளும், ஆனி ஆடி



மாசங்களில் எட்டு நாழிகையுள்ளும், ஆவணி புரட்டாசி ஐப்பசி கார்த்திகை மாசங்களில் நாலு நாழிகையுள்ளும், மார்கழி தை மாசங்களில் இரண்டு நாழிகையுள்ளும், மாசி பங்குனி மாசங்களில் மூன்று நாழிகையுள்ளும் அப்பியங்க ஸ்நானஞ்செய்தல் வேண்டும்.

வாததேகிகள் பசுநெய் ஒருபங்கு எண்ணெய் இரண்டு பங்கு ஆமணக்குநெய் மூன்றுபங்காகவும், பித்ததேகிகள் எண்ணெய் ஒருபங்கு ஆமணக்குநெய் இரண்டுபங்கு பசுநெய் மூன்று பங்காகவும், சிலேஷ்மதேகிகள் ஆமணக்குநெய் ஒருபங்கு பசுநெய் இரண்டுபங்கு எண்ணெய் மூன்றுபங்காகவும், முக்கூட்டு நெய் சேர்த்து ஸ்நானஞ்செய்வது உத்தமம்.

தைலந்தேய்த்து ஸ்நானஞ் செய்தால், அன்றைக்கும், மற்றநாளும் புளியும், தயிரும், மோரும், பாலும், பாகற்காயும், அகத்தியிலையும் சேர்க்கலாகாது.

கஷாயம், அரைத்த மருந்து, எண்ணெய் என்னும் இம்மூன்றுள் ஒன்று கோடைக்காலத்திலே பேதிக்குக் கொடுக்கத்தக்க மருந்தாம். மழைக்காலத்திலேனும் பனிக்காலத்திலேனும் கொடுத்தால், அம்மருந்துகளின் குணம்கெட்டுவிடும். இம்மூன்றுகாலங்களிலும் நேர்வாளமாயினும் உப்பாயினுஞ் சேர்ந்த மருந்தைக் கொடுத்தால், கிரமமாகப் பேதியாகும்.

---

## வியாதிநீர்த்தல்.

பழவினையினாலும் காரணங்களினாலும் வியாதி உண்டாகும்போது, அவ்வியாதி நீக்கத்தின் பொருட்டுச் செய்யத் தகுவது இது செய்யத்தகாதது இது என்று அறிந்துகொள்வது யாவருக்கும் ஆவசியகம்.

வியாதி உண்டாகும் காலங்களிலே, நோயாளி, தன்மனமும் சரீரமுமாகிய இரண்டும் ஒருங்கு ஆறியிருக்கும் பொருட்டு, சரீரமுயற்சிகளையும் மனமுயற்சிகளையும் விட்டு விடல் வேண்டும்.

நோயாளி, கல்வியறிவொழுக்கங்களிற் சிறந்தவனும், ஈசுரபத்தியும் குருபத்தியும் அடியார்பத்தியும் உடையவனும், வைத்தியசாத்திரங்களைச் சந்தேக விபரீதமறக் குருமுகமாகக் கற்றறிந்தவனும், மிகுந்த புத்திநுட்பமுடையவனும், ஒளஷதங்களைப் பாகஞ் செய்பாகந் தவறுமற்செய்து முடித்தலினும் பல வியாதிகளைத் தீர்த்தலினும் அதிசமர்த்தனும் உள்ள வைத்தியனைக்கொண்டு வைத்தியஞ் செய்வித்தல்வேண்டும்.

நோயாளி, தான் இராஜாவேயாயினும், வைத்தியனிடத்து மெய்யன்புவைத்து, அவனை உபசாரத்துடன் அழைப்பித்து, ஆசனத்திருத்தி, தனது நோய் நிலைமை உள்ளபடி



அறிவித்து, ஒளஷதத்துக்கு வேண்டுந் திரவியங்கொடுத்து, அவன் கொடுக்கும் ஒளஷதத்தை இரண்டுகையினாலும் வாங்கிக்கொண்டு, சிரத்தையோடும் உண்ணல்வேண்டும். ஒளஷதத்தினால் வருந்துன்பங்களைப் பொறுத்துக் கொள்ளல் வேண்டும்; வைத்தியனால் விதிக்கப்பட்ட பத்தியங்களைக் கொள்ளல்வேண்டும். விலக்கப்பட்ட அபத்தியங்களை முழுதுந் தள்ளல்வேண்டும். கண்ட கண்ட ஒளஷதங்களை உண்ணலாகாது. ஒளஷதம் உண்டலினாலே தனக்கு உண்டாகும் குணகுணங்களை வைத்தியனுக்கு உண்மையாகச் சொல்லல்வேண்டும். பூர்வகர்மத்தினால் வியாதி சம்பவித்தபோது, அந்தக் கர்மத்தை விதிப்படி அன்போடு செய்யப்படும் பதிபுண்ணியத்தினாலே நிவர்த்திசெய்து கொள்ளல்வேண்டும்.

கிராம்பு, நாகப்பூ, தேன், திராட்சைப்பழம், ஒருவருஷஞ்சென்ற நெல்லின்பொரி, பச்சைக் கர்ப்பூரத்தூள் என்னும் இவைகள் உண்ட ஒளஷதத்தினது தன்மையைக் கெடுக்காத வஸ்துக்களாதலால், இவைகளுள் யாதாயினுமொன்றை ஒளஷதம் உண்ட வாயிலே சிறிது இட்டுக்கொள்ளலாம்.

நோயாளி யிடத்தில் இருந்துகொண்டு ஒளஷதபாக முதலியன செய்யுந் துணையாளர் அந்த நோயாளிக்கு உரிமை யுடையவரும், அவனிடத்தே மிகுந்த அன்புடையவரும், வைத்தியனுடையமனத்தை ஒத்தவரும், மிகுந்த

புத்திநுட்பமும் நல்லொழுக்கமும் உடையவருமாய் இருத்தல் வேண்டும்.

நோயாளி இருக்கும் அறை காற்று உலாவத்தக்கதும், வெளிச்சம் உள்ளதும், விசாலமும், சுத்தமுமாய் இருத்தல்வேண்டும். அது பண்டங்கள் இல்லாத வெற்றறையுமாய் இருக்குமாயின், உத்தமோத்தமம்.

காதிலே கேட்குஞ் சத்தத்தினாலே நோயாளியின் மனங் குழம்பி இளைத்துப்போகும்; ஆதலினால் நோயாளி இருக்கும் அறையிலும் அதற்குச் சமீபத்திலும் எவ்வகைப்பட்ட சத்தமும் நிகழாவண்ணம் இயன்றமட்டுங் காத்தல்வேண்டும். நோயாளியினிடத்தில் உரக்கவாயினும் நெடுநேரமாயினும் வார்த்தை சொல்லலாகாது. நோயாளிக்குச் சமீபத்தில் ஒருவர் இருவரேயன்றி பலர் இருக்கலாகாது. நோயாளிக்கு நித்திரை வருமானால், அதற்கு இடையூறு செய்யலாகாது. நோயாளிக்குச் சமீபத்திலே குசு குசுவென்று இரகசியம் பேசலாகாது; அப்படிப்பேசினால், நோயாளி கிலேசப்பட்டு அதைரியம் அடைதல்கூடும். நோயாளியுடைய பந்துக்களுக்குள்ள வியாதியைச் சுட்டியேனும், முன் இறந்தவருடைய மரணத்தைச் சுட்டியேனும், அந்த நோயாளி கேட்கும்படி பேசலாகாது. நோயாளியெதிரே ஒருபோதும் துக்கமுகங் காட்டலாகாது.

நோயாளிக்கு இரைச்சல் காதுவழியாகப் புகுந்து வருத்தத்தைக் கொடுப்பதுபோலவே,



அதிக வெளிச்சமும் கண் வழியாகப் புகுந்து வருத்தத்தைக்கொடுக்கும். ஆதலினால், நோயாளி இருக்கும் அறையிலே வெளிச்சம் மட்டாயிருப்பது உத்தமம்.

---

நோயாளி சுத்தவாயுவையே பூரித்தல் வேண்டும். உடம்பில் ஓடும் இரத்தம் எவ்வளவு சுத்தமாய் இருக்குமோ, அவ்வளவினதாக உடம்பிலே ஆரோக்கியம் உண்டாகும். நோயாளி படுத்திருக்கும் அறையிலே அடைபட்டிருக்கும் நச்சுக்காற்றினாலே வியாதி நீடிய பெரும்பான்மையும் அதிகப்படும்; அதனால் மரணம் சம்பவிக்கும்.

வியாதி உள்ளபொழுதும் சரீரத்தினது தோல் அழுக்கின்றிச் சுத்தமாய் இருத்தல் வேண்டும். ஆதலினால், நோயாளி வெந்நீரிலே ஸ்நானஞ் செய்தல் வேண்டும். அப்படிச் செய்யாதொழிந்தால், தோலிலுள்ள துவாரங்கள் அடைக்கப்பட்டிருக்கும்; அப்படி அடைக்கப்பட்டிருந்தால், தோலின் துவாரங்கள் வழியாகக் கழிந்துபோகவேண்டிய அழுக்கு நீங்காதிருக்கும்; அதனால் உடம்பின் உள்ளுறுப்புக்களின் உள்ள வியாதி அதிகப்படும். ஸ்நானஞ் செய்தற்கு அசத்தனாகிய நோயாளி இளவெந்நீரிலே ஒரு துண்டுவஸ்திரத்தை நனைத்துப் பிழிந்து அதனாலே உடம்பு முழுதும் ஈரம் படும்படி துடைத்து, உடனே, அவ்வீரத்தை உலர்ந்த சுத்த வஸ்திரத்தினாலே துவட்டல் வேண்டும்.

நோயாளி நாடோறும் உடுத்த வஸ்திரத்தைக் களைந்து, உலர்ந்த சுத்த வஸ்திரந் தரித்தல்வேண்டும்; அழுக்கு வஸ்திரந் தரிக்கலாகாது; நோயாளிக்குப் படுக்கையும் விரிப்பு வஸ்திரமும் போர்வை வஸ்திரமும் இவ்விரண்டாக வைத்துக்கொள்ளல் வேண்டும். ஒன்று உபயோகப்பட்டிருக்கும் போது மற்றது காற்றிலே போடப்பட்டிருத்தல்வேண்டும். விரிப்பு வஸ்திரத்தையும் போர்வை வஸ்திரத்தையும் காலந்தோறும் தோய்த்து உலர்த்தல்வேண்டும்.

நோயாளிக்கு மருந்தைப்போலவே பத்தியத்தையும் வைத்தியன் குறித்தநேரத்திலே கொடுத்தல் வேண்டும். நோயாளிக்கு எளிதிலே சீரணமாகத்தக்க பதார்த்தங்களை நன்றாகச் சமைத்துக் கொடுத்தல்வேண்டும். எளிதிலே சீரணமாகாத பதார்த்தம் ஒன்றையும் கொடுக்கலாகாது. நோயாளிக்குப் போசன பானீயங்களை ஒழுங்கில்லாமற் சிறிது சிறிதாக அடுத்தடுத்துக்கொடுக்கலாகாது. நோயாளிக்குப் புசிக்க மனமில்லாதபோது புசிக்கும்படி வலாற்காரம் பண்ணலாகாது.

நோயாளி வியாதி நீங்கி ஆரோக்கியமடையுங்காலங்களிலும், வைத்தியன் சொற்படியே, எளிதிலே, சீரணமாகத் தக்க போசனத்தைப் பக்குவாசயத்திலே முட்டுண்டாகாதபடி இயன்றமட்டும் குறைவாகக் கொடுத்தல்வேண்டும்.

நோயாளி பத்தியம் உண்ணுஞ் சமயத்திலே, துணையாளி அவனுடைய அறையைச் செவ்வையாகப் பெருக்கிப் படுக்கையைத் தட்டி விரித்தல்வேண்டும். நோயாளி பத்தியமுண்டு, கை கால்களைச் சுத்திசெய்தவுடனே, அவைகளில் உள்ள ஈரத்தைச் சீக்கிரந் துடைத்துப் போடல்வேண்டும். பத்தியம் உண்டவுடனே படுக்கலாகாது. நோயாளி எந்நேரமும் படுத்துக் கொள்ளலாகாது. சிறிதுநேரம் இருக்கவும், சிறிதுநேரம் படுக்கவும், சிறிதுநேரஞ் சாரவும், சக்தி உண்டானாற் சிறிதுநேரம் உலாவவும் வேண்டும்.



ஆரோக்கியம் உள்ள காலத்திற்போல வியாதி உள்ள காலத்திலே மலசலமோசனத்துக்குப்போக வாராதிருந்தாலும், நோயாளி வழக்கப்படி போய் இருந்துகொண்டு, மலசலமோசனஞ் செய்ய முயன்று வரல்வேண்டும். இப்படிச் செய்வதும் வியாதி நீங்குதற்கு ஏதுவாகும்.

நோயாளிகளிடத்தில் அன்பு வைத்தல் வேண்டும். நோயாளிகள் நோயினலாகிய துன்பத்தைப் பொறுக்கமாட்டாமற் கோபித்தாலும், கடுஞ்சொற்களைச் சொன்னாலும், எதிர்த்துப் பேசாது, பொறுத்துக்கொண்டு, குளிர்ந்த முகத்தினாலும் இன்சொல்லினாலும் அவர்களை உற்சாகப்படுத்தல் வேண்டும்.

ஒருதரத்திலே பதினைந்து நாழிகைக்கு மேற்பட நோயாளியினுடைய அறையிலே துணையாளி இருக்கலாகாது. துணையாளி ஒழுங்காகப் போசனம் பண்ணி, ஒழுங்காக நித்திரை

செய்து, நாடோறும் காற்றிலே உலாவிவரல் வேண்டும். நோயாளி நித்திரைசெய்யுஞ் சமயத்திலே, துணையாளி மேற்சொல்லிய காரியங்களைச் செய்தற்கு வெளிப்படல்வேண்டும். அப்போது ஒரு காவலாளி நோயாளியறையில் இருத்தல் வேண்டும்.

நோயாளி, உலகக்கவலைகளிலே மனசைச் செல்லவொட்டாமலும், சிறிதாயினும் அதைரியம் அடையாமலும், உயிர்க்குயிராயுள்ள கடவுளை இடையறாது எந்நேரமும் மெய்யன்போடு தியானித்தல்வேண்டும். வியாதி அதிகப்படுந்தோறும், தனக்கு அன்னியராய் இருக்கும் மனைவி மக்கள் முதலாகிய சுற்றத்தாரிடத்துள்ள பற்றை நீக்கிவிட்டு, தனக்கு அநன்னியராய் இருக்குங் கடவுளிடத்துள்ள பற்றையே வளர்த்தல் வேண்டும். 'நாம் சிற்றறிவுடையேம்; ஆதலினால் நமக்கு நன்மையாவது இது தீமையாவது இது என்று நாம் அறிய மாட்டோம்; கடவுள் எல்லாவறிவோடும் எல்லா வநுக்கிரகமும் உடையவர் ஆதலின், அவர் நமக்கு யாது செய்வாரோ அதுவே நமக்கு நன்மையாகும்' என்று சந்தேகமறத் துணிதல் வேண்டும். எல்லாவறிவும் எல்லாமுதன்மையும் எல்லா வநுக்கிரகமுமுடைய கடவுளை அநியாயமாக நொந்து, அதிபாதகனாகி, எரிவாய் நரகத்துக்கு இரையாகலாகாது.

மரிக்கும்பொழுது, சுற்றத்தாரை நினையாமல் அவரைத் தூரத்தே அகற்றிவிட்டு, கடவுளையே தியானித்து, அவருடைய குணமகிமைகளை அறிவிக்கும் உண்மைநூல்களைக் கேட்டல் வேண்டும். இப்படிச் செய்வானாயின், நரகத்துன்பத்தினும் பிறவித்துன்பத்தினும் நீங்கி, கடவுளுடைய திருவடியை அடைந்து நித்தியமாகிய பேரின்பத்தை அநுபவிப்பன். குடும்பத்தோடு கூடியிருக்குமிடத்தும் உயிர்ச்சார்பிலும் பொருட்சார்பிலும் உள்ளே பற்றற்றுக் கடவுளிடத்தே பற்றுடையவராய் ஒழுகினவருக்கே மரணகாலத்தில் இப்படிச்செய்தல் கூடும். மற்றவருக்கு ஒருபோதுங் கூடாது. ஆதலினால், நிற்கும்போதும், இருக்கும்போதும், கிடக்கும்போதும், நடக்கும்போதும், மரிக்கும்போதும், எப்போதும், கடவுளைச் சிறிதும் மறவாது மெய்யன்போடு சிந்திப்பதே அறிவுடையவர் கடன். இப்படிச் செய்பவரே தமக்கு இனியவர்; இப்படிச் செய்யாதவர் தமக்குத்தாமே வஞ்சகர்.

சோமவாரகற்பம்.

மரிக்கும்போ தன்றும் வடிவினை யாவி
பரிக்கு நினைவு பரித்து.

ஆதலினாற் சுற்றத் தவரை நினையாதமலன்
பாத நினைக பரிந்து.

அப்பொழுது கேட்க வமலன்வே தாகமங்கள்
அப்பா லுறச்சுற்றத் தார்.

அப்பொழுது கேட்க வமலனருள் பெற்றவர்வாக்
கப்பா லுறச் சுற்றத் தார்.

### சங்கற்பநிராகரணம்.

வேர்மாத்தாக் காதாரம் வேர்க்குமா மன்றமலன்
ஆருயிர்க்கா தாரமுயி ரன்று.

என்றறிந்தீ சன்று ளிருக்கினடக் கிங்கிடக்கிற்
பொன்றும் பொழுதினை போற்று.

உயிர்க்குயிரை நோக்கி யுடல்விடுங் காலத்
துயிர்க்குயிராய் மீளா துயிர்.

### இறைவனூற்பயன்.

தமக்கினிமை வஞ்சகரோ தாந்தமுதற் சாரார்
தமக்கினியார் தம்முதற் சார்ந்தார்.

---

## தேவாலயம்.

தேவாலயமாவது எங்கும் வியாபகராய் மறைந்திருக்குங் கடவுள் தம்மை ஆன்மாக்கள் வழிபட்டு உய்யும்பொருட்டுச் சாந்நித்தியராய் எழுந்தருளியிருக்கும் இடமாம்.

தேவாலயத்திலே செயற்பாலனவாகிய பிரதிட்டை பூசை உற்சவமுதலிய கிரியைகளெல்லாவற்றையும் விதிக்கு நூல்கள் ஆகமங்கள். சிவாலயக் கிரியைகள் சைவாகமங்களிலும், விஷ்ணுவாலயக்கிரியைகள் வைஷ்ணவாகமங்களிலும், விதிக்கப்படும். ஆகமங்களை ஓதியுணர்ந்தவர்களே தேவாலயக் கிரியைகளை விதிப்படி



செய்ய வல்லவர்கள். தீக்ஷை பெற்றவர்களே ஆகமங்களை ஓதியுணர்தற்கு யோக்கியர்கள். பாவங்களை வெறுத்துப் புண்ணியங்களைச் செய்பவர்களாய் ஈசுரபத்தியும் குருபத்தியும் அடியார்பத்தியும உடையவர்களாய் உள்ளவர்களே தீக்ஷை பெறுதற்கு யோக்கியர்கள். ஆதலினாலே, நல்லொழுக்கமும் பத்தியும் உடையவர்களாய், தீக்ஷை பெற்றவர்களாய், ஆகமங்களைக் குருமுகமாக ஓதி யுணர்ந்தவர்களாய், ஆகமக்கிரியைகளை மந்திரத்தோடும் பாவனையோடும் விதிப்படி செய்யப் பயின்றவர்களாய் உள்ளவர்களே தேவாலயக்கிரியைகளைச் செய்தற்கு யோக்கியர்கள். தீக்ஷையும் ஆகமவுணர்ச்சியும் உடையவர்களேயாயினும், நல்லொழுக்கமும் பத்தியு மில்லாதவர்களாயின், அவர்களாற் செய்யப்படுங் கிரியைகளினாலே கடவுள் சாந்நித்திய ராகார் என்பது ஆகம நூற்றுணிவு.

தேவாலயக்கிரியைகள் காலந்தோறுந் தவறாமற் சிரத்தையோடு விதிப்படி செய்யப்படுமாயின், உலகத்திலே காலந்தோறும் மழை தவறாமற் பெய்யும். நெல் முதலாகிய வளங்கள் பெருகும். ஆரோக்கியம்உண்டாகும். அரசநீதி நடக்கும். கல்வியறிவொழுக்கமுஞ் சமயபத்தியுந் தழைத்தோங்கும். தேவாலயக்கிரியைகள் சிரத்தையோடு விதிப்படி செய்யப்படா தொழியின், உலகத்திலே மழையின்மையும், பஞ்சமும், மகாரிகை, விஷூசி முதலிய கொடுநோய்களும், கன்னம் களவு கொலை முதலிய தீத்தொழில்களுமே விருத்தியாகும். ஆதலினாலே, கோயி

லதிகாரிகள் தேவாலயங்களைச் சிரத்தையோடு விதிப்படி சாவதானமாக நடத்தல்வேண்டும்.

திருமந்திரம்.

ஆற்றரு நோய்மிகு மவனி மழைகுன்றும்
போற்றரு மன்னரும் போர்வலி குன்றுவர்
கூற்றுதைத் தான்றிருக் கோயில்க ளானவை
சாற்றிய பூசைக டப்பிடிற் றானே.

முன்னவ னார்கோயிற் பூசைகண் முட்டிடின்
மன்னர்க்குத் தீங்குள வாரி வளங்குன்றும்
கன்னங் களவு மிகுத்திடுங் காசினிக்
கென்னரு ணந்தி யெடுத்துரைத் தானே.

தேவாலயந்தோறும் வித்தியாசாலை தாபித்து, அதிலே பிள்ளைகளுக்குக் கருவிநூல்களையும் வேதம் ஆகமம் முதலிய நூல்களையும் கிரமப்படியே கற்பித்தல்வேண்டும். கற்றபிள்ளைகளைப் பரீக்ஷித்து, அவர்களுள்ளே அதிசமர்த்தர்களாயும் நல்லொழுக்கமும் பத்தியும் உடையவர்களாயும் உள்ளவர்களையே தேவாலயத்துக்கு ஆசாரியர் முதலாயினோராக நியோகித்தல் வேண்டும். அவர்களுக்கு அன்னவஸ்திர முதலியவற்றின்பொருட்டு முட்டுப்பாடில்லாமற் பொருளுதவி செய்து, அவர்களைக் கொண்டு தேவாலயக்கிரியைகளைக் காலந்தோறும் தவறாமல் விதிப்படியே செய்வித்துக்கொண்டு வரல் வேண்டும். அவர்கள் தங்களுக்கு உரிய நல்லொழுக்கத்தினும் தேவாலயக்கிரியைகளினும் வழுவினார்களாயின், அவர்களைக் கண்டித்துத்



திருத்தல் வேண்டும்; திருத்தமுறாதவர்களை நீக்கிவிடல்வேண்டும்.

கடவுளுடைய குணமகிமைகளையும், புண்ணிய பாவங்களையும், அப்புண்ணியபாவங்களின் பயனாகிய சுகதுக்கங்களையும், கடவுளை வழிபடும் முறைமையையும், அவ்வழிபாட்டினாலே பெறப்படும் முத்தியின்பத்தையும் அறியும் அறிவு இல்லாதபோது, தேவாலயத்தினாலே சனங்களுக்குச் சிறிதும் பயனில்லை. இவ்வறிவில்லாதவர்கள் தேவாலய சேவை செய்யப் புகினும், குளிக்கப்போய்ச் சேறு பூசிக்கொள்ளுவோர் போலப் பாவத்தையே சம்பாதித்துக்கொள்வர்கள். ஆதலினாலே, நல்லொழுக்கமும் பத்தியும் சமயசாத்திர வுணர்ச்சியு முடைய பெரியோர்களைச் சமயபோதகர்களாக நியோகித்து, தேவாலயத்திலே காலந்தோறுஞ் சனங்களுக்குச் சமயநெறியைப் போதிப்பித்தல்வேண்டும்.

சனங்களுக்குப் பத்தி வளர்ந்தோங்கும் பொருட்டு, தேவாலயமெங்கும் வேதவொலியும் தமிழ்வேத வொலியுமே தழைத்தோங்கும்படி செய்தல்வேண்டும். சைவர்களுக்குத் தமிழ் வேதம் தேவார திருவாசகங்கள். வைஷ்ணவருக்குத் தமிழ்வேதம் நாலாயிரப்பிரபந்தம். சைவமரபிற் பிறந்தவரேயாயினும், தேவார திருவாசகங்களை ஓதாதவர் சைவராகமாட்டார். வைஷ்ணவமரபிற் பிறந்தவரேயாயினும், நாலாயிரப் பிரபந்தத்தை ஓதாதவர் வைஷ்ணவராகமாட்டார். ஈசுரபத்தி வளர்தற்கு ஏதுவாகிய வாக்குக்

களும் செயல்களுமே யன்றி, மற்றை வாக்குக் களும் செயல்களும் தேவாலயத்திலே சிறிதும் நிகழாவண்ணம் சாவதானமாகப் பாதுகாத்தல் வேண்டும்.

நல்லொழுக்கமும் பத்தியும் ஆகமவுணர்ச்சியும் உடைய பெரியோர்கள் கோயிலதிகாரிகளாய் இருப்பார்களாயின், அவர்கள், பழிபாவங்களுக்குப் பயந்து, தேவாலயத்தைச் சிரத்தையோடு விதிப்படி நடாத்திச் சமயபத்தியை வளர்ப்பார்கள். இவ்வியல்பில்லாதவர்கள் கோயிலதிகாரிகளாய் இருப்பார்களாயின், அவர்கள் தேவத் திரவியங்களைப் பெரும்பான்மையும் இடம்பத்தின்பொருட்டும், தங்கள் குடும்பப் பாதுகாப்பின்பொருட்டும், பொதுப்பெண்களின் பொருட்டும், வழக்கின்பொருட்டும், அதிகாரிகளை உபசரித்தற்பொருட்டும், அவர்களுக்குக் கொடுக்கும்பரிதானத்தின் பொருட்டுமே செலவு செய்வார்கள். தேவாலயத்தை ஈசுரபத்தி வளர்தற்குச் சிறிதும் இடமாக்காது, காமங்குரோதம் மதம் மாற்சரியம் சண்டை கொலை முதலியவை வளர்தற்கே இடமாக்கிவிடுவார்கள். அவர்கள் தேவத்திரவியத்தைச் சிறுபான்மை தேவாலயக் கிரியைகளிற் செலவு செய்யினும், அக்கிரியைகள் இவையென்பதும், அவைகளைச் செய்தற்கு யோக்கியராவார் இவர் என்பதும், அவைகளைச் செய்யு முறைமை இது என்பதும், அம்முறைமைப்படி செய்யா தொழியின் விளையுங்கேடு இது என்பதும், அறியும் அறிவு இல்லாமையினாலே அவைகளைக் கிரமப்படி செய்விக்கமாட்டார்கள்.



ஆகையால், அச்செலவினாற் சிறிதும் பயனே இல்லை. ஆதலினாலே தேவாலயங்களை நல்லொழுக்கமும் பத்தியும் ஆகமவுணர்ச்சியுமுடைய பெரியோர்களிடத்தேயே ஒப்பித்தல் வேண்டும்.

கோயிலதிகாரிகள் தங்களுக்கு உரிய கடமையிலே தவறினர்களாயின், அரசன் அவர்களைத் தண்டித்து நீக்கி விடல்வேண்டும். அரசன் அப்படிச் செய்யாவிடத்து, உலகத்தார் பலரும் ஒற்றுமையுடையவர்களாய்த் திரண்டு, அரசனுக்கு விண்ணப்பஞ்செய்து, அவ்வதிகாரிகளை நீக்குவிக்கமுயலல்வேண்டும். இப்படிச் செய்யாதவர்கள் எரிவாய் நரகத்துக்கு இரையாகி, எண்ணில்காலம் வருந்துவர்கள்.

---

## மடம்.

மடமாவது பெரியோர்கள் இருந்து கொண்டு கல்வி யறிவொழுக்கத்தையும் சமயத்தையும் வளர்த்தற்கு உரிய இடமாம். மடத்திலே செபம் பூசை தியானம் முதலியவற்றிற்கும், வேதாகமத் திருமுறைகளை வைத்துப் பூசை செய்தற்கும், வேதாகமங்களைப் படித்தல் படிப்பித்தல்கட்கும், சமையல் போசன முதலியவற்றிற்கும், பரிசாரகர்களும் அதிதிகளும் இருத்தற்கும், வெவ்வேறிடங்கள் விதிப்படி கட்டப்பட்டிருத்தல்வேண்டும்.

மடத்தைக் கட்டுவித்தவரும், மடத்திலே வேதாகமத் திருமுறைகளைச் சம்பாதித்துவைத்துப் பூசை செய்தற் பொருட்டும், வேதாகமங்களைப் படிப்பவருக்கும் படிப்பிப்பவருக்கும் அன்னம் வஸ்திரம் மருந்து முதலியவை கொடுத்தற்பொருட்டும், திரவியங்களையும் பூமிகளையுந் தானஞ்செய்தவரும், சிலமாயுள்ள மடத்தைப் புதுக்குவித்தவரும், கடவுளுடைய உலகத்தை அடைந்து, இன்பம் அனுபவித்து வாழ்வர்.

கருவி நூல்களையும் வேதாகமங்களையும் நன்றாகக் கற்றறிந்தவரும், சிவகருணை பத்தி வைராக்கியம் ஞானம் என்னும் நான்கும் உடையவருமாகிய ஆசாரியரே மடாதிபதிகளாதற்கு யோக்கியர். மடாதிபதிகள் மடத்தில் இருந்து, தம்முடைய நித்தியகரும முதலியனவற்றைத் தவறாமற் செய்துகொண்டு, வேதாகமத்திருமுறைகளைப்பூசைசெய்து, அவ்வேதாகமங்களைத் தாம் படிக்கவும், தம்மை அடைந்த நன்மாணாக்கர்களுக்குப் படிப்பிக்கவும், அம்மாணாக்கர்களுக்கும் பரிசாரகர்களுக்கும் மற்றைச் சனங்களுக்கும் காலந்தோறும் சமயநெறியைப் போதிக்கவும் வேண்டும்.

கன்மயாகம், தபோயாகம், செபயாகம், தியானயாகம், ஞானயாகம் என ஐவகை யாகங்கள் உண்டு. அவைகளுள் கன்மயாகமாவது சந்தியாவந்தனம் கடவுட்பூசை அக்கினி காரியம் முதலியன செய்தல்; தபோயாகமாவது சாந்திராயணம் கிருச்சிரம் மாசோபவாசம் முத



லிய விரதங்களினாலே சரீரத்தை வாட்டுதல்; செபயாகமாவது மந்திரங்களை விதிப்படி உச்சரித்தல்; தியானயாகமாவது மனசை வேறொரு விடயத்திலும் பொருந்தாதவண்ணம் நிறுத்தி இருதய முதலிய தானங்களிலே கடவுளுடைய திருமேனியைத் தியானித்தல்; ஞானயாகமாவது ஞானநூல்களை விதிப்படியே தான் ஓதலும், நன்மாணாக்கரை ஓதுவித்தலும், அவைகளின் பொருளைத் தான் கேட்டலும், நன்மாணாக்கரைக் கேட்பித்தலும், கேட்ட பொருளை நாடோறும் மறவாமற் சிந்தித்தலுமாகிய ஐந்துமாம். இவ்வைவகை யாகங்களும், ஒன்றுக்கொன்று ஏற்றமுடையன. கன்மயாகத்திற் பதின்மடங்கதிகம் தபோயாகம்; தபோயாகத்தில் நூறுமடங்கதிகம் செபயாகம்; செபயாகத்தின் ஆயிரமடங்கதிகம் தியானயாகம்; தியானயாகத்தின் அநந்தமடங்கதிகம் ஞானயாகம். இவ்வைந்தனுள்ளும் கருமயாக முதலிய முன்னைய நான்கு யாகங்களை அநுட்டித்தவர் கடவுளுடைய உலகத்தை அடைந்து, அங்குள்ள திவ்விய போகங்களை அநுபவித்து, காலாந்தத்திலே மீளவும் சனனத்தை அடைவர். ஞானயாகத்தை அநுட்டித்தவர் பிறந்திறவாப் பெருவாழ்வாகிய சாயுச்சியத்தை அடைவர். ஆதலினால் ஞானயாகத்திற் சிறந்தது பிறிதொன்றுமில்லை.

இவ்வைவகை யாகங்களும் ஒன்றற்கொன்றேற்றமுடையனவாதலால், இவ்வைவகை யாகங்களைச் செய்வோருக்குக் கொடுக்கப்பட்ட

அன்னதான முதலிய தானங்களின் பலமும் ஒன்றற்கொன்றேற்றமுடையனவாம். கருமயாகஞ் செய்வோர்க்குக் கொடுத்தது ஒரு பிறப்பளவு நிற்கும்; தபோயாகஞ் செய்வோர்க்குக் கொடுத்தது நூறு பிறப்பளவு நிற்கும்; செபயாகஞ்செய்வோர்க்குக் கொடுத்தது ஆயிரம் பிறப்பளவு நிற்கும்; தியானயாகஞ் செய்வோர்க்குக் கொடுத்தது கற்பமளவு நிற்கும்; ஞானயாகஞ் செய்வோர்க்குக் கொடுத்தது மகா சங்கார காலமளவு நிற்கும். ஆதலினால், ஞான நூல்களைப் படிப்பவருக்கும் படிப்பிப்பவருக்கும் அன்னதான முதலிய தானஞ் செய்தலின் மிக்க தருமம் பிறிதொன்றுமில்லை.

வேதாகமத் திருமுறைகளுக்கு ஆடிப் பூரணையிலும் வைகாசிப்பூரணையிலும் விசேஷ பூசை செய்தல்வேண்டும். திருமுறையேடுகள் நெடுநாட்பயிலப்பட்டு முறிதல் நெரிதல் எழுத்துத்தெரியாமை முதலிய பலகுற்றங்களைப் பொருந்தினால், பிழையறுவித்து எழுதவல்லவர்களாலே எழுதுவித்து, மைக்காப்புச் சாத்தி, அந்தத் திருமுறையைப் பூசித்தல்வேண்டும்; பின்பு பழைய திருமுறையைப் பசுநெய்யிலே தோய்த்துக் கடவுளுக்கு ஓமஞ்செய்தல் வேண்டும்.

மடாதிபதிகள், தம்மிடத்தே கற்கும் மாணாக்கர்களுள்ளே, துறவிகளுக்கும், வறியவர்களுக்கும் அன்னம் வஸ்திரம் முதலியவை கொடுத்துச் சிறிதும் பக்ஷபாதமின்றி அவர்களெல்லாரையுஞ் சமமாகவே பெருங்கருணையோடு நடத்தல்வேண்டும். தமக்கு அவர்கள் யாதாயினும் குற்றஞ் செய்தால், அதனைப் பொறுத்துக்கொண்டு, அவர்களுக்குப் பெற்ற தாயினும் பதின்மடங்கு மிக இனியராய் ஒழுகல் வேண்டும். அவர்களுக்கு வியாதி வந்தால், தமக்கு வந்தாற்போலவே மனந்தபித்து, மருந்து செய்வித்து காலந்தோறும் பத்தியம் தவறாமற் கொடுப்பித்தல்வேண்டும். பழிபாவங்கட்குச் சிறிதாயினும் அஞ்சாது, பந்தியிலே தமக்குந் தம்மைச்சார்ந்தவருக்கும் உயர்வாகிய பதார்த்தங்களைப் படைப்பித்துக் கொள்ளலும், மற்றை ஏழைகளுக்குத் தாழ்வாகிய பதார்த்தங்களைப் படைப்பித்தலும், அவிவேகிகளும் சீச்சீ என்று வெறுக்கத்தக்க மிக இழிந்த செய்கைகளாம்; இப்பந்திவஞ்சனை மிகக் கொடிது கொடிது!

---

மடாதிபதிகள், தம்மிடத்தே கற்கும் மாணாக்கர்களை வருஷந்தோறும் சபையில் பரீக்ஷைசெய்து, அவர்களுள்ளே சமர்த்தர்களுக்குக் கல்வியிலே மேன்மேலும் ஊக்கம் உண்டாகும்பொருட்டுப் பரிசு கொடுத்தல் வேண்டும்.

மடாதிபதிகள், தம்முடைய மாணாக்கர்களுள்ளே கல்வியறிவொழுக்கங்களால் நன்கு மதிக்கப்பட்டவர்களை, ஊர்தோறும் உள்ள தம்முடைய மடங்களுக்கு அனுப்பி, அவர்களைக்கொண்டு அங்கங்குள்ள பிள்ளைகளுக்குக்

கல்வி கற்பிக்கவும் சனங்களுக்குச் சமயநெறியைப் போதிப்பிக்கவும் வேண்டும். அவர்கள் தங்கள் நல்லொழுக்கத்தினும் செய்தொழிலினும் வழுவினால், அவர்களைக் கண்டித்துத் திருத்தல் வேண்டும். திருத்தமுறாதவர்களை நீக்கிவிடல்வேண்டும்.

மடாதிபதிகள் தம்முடைய சீடர்கள் முதலாயினோரைத் தமது உபதேசத்தினால் மாத்திரமன்றித் தமது நல்லொழுக்கத்தினாலுந் திருத்தல்வேண்டும். நித்தியகருமம், வேதாகமபடனம், தேவாலயசேவை, வாய்மை, இரக்கம், பொறை, அடக்கம் முதலிய தருமங்களை ஆசாரியர் செய்வாராயின், அது கண்ட அவர் சீடர் முதலிய பிறருஞ் செய்து உய்வர். தேவத்திரவியம் புசித்தல், நித்தியகருமம் விடுத்தல், கொலை, பிறர்பொருளை இச்சித்தல், பிறன்மனைவியைப் புணர்தல், வேசையைப்புணர்தல், பொய் சொல்லல், பொய் வழக்குப் பேசல் முதலிய பாவங்களை ஆசாரியர் செய்வாராயின், அது கண்ட அவர் சீடர் முதலிய பிறருஞ் செய்து கெடுவர். ஆசாரியர் தமது ஆன்மார்த்த பூசையைத் தாமே செய்யாது பிறரைக்கொண்டு செய்வித்து, அதற்கு உரிய காலத்தைத் தாம் வீணே போக்குவாராயின், அதுகண்ட அவர் சீடர் முதலிய பிறரும் அவ்வாறு செய்து கெடுவர். ஆதலினால், ஆசாரியரிடத்தே நல்லொழுக்கம் இல்லாதபோது அவருடைய உபதேசம் சிறிதாயினும் பயன்படாது.



மடாதிபதிகளும் அவரைச்சேர்ந்த வித்துவான்களும் உலகத்தாருக்கு விவேகம் உதிக்கும் பொருட்டு நல்ல நூல்களையும் உரைகளையுஞ் செய்து வெளிப்படுத்தல் வேண்டும். பழைய நூல்களையும், உரைகளையும் இறந்துபோகா வண்ணம் பல திறத்தாலும் சாவதானமாகப் பாதுகாத்தல்வேண்டும்.

புறச்சமயிகள் வேதாகமங்களால் உணர்த்தப்படுஞ் சற்சமயத்தைத் தூஷித்துத் தங்கள் சமயத்தைச் சாதிக்கப்புகுந்தால், அவர்கள் சமயத்தை நிராகரித்துத் தஞ்சமயத்தைத் தாபித்தல் மடாதிபதிகளுக்குக் கடனாகும். இது செய்ய வன்மையில்லாதவரும் வன்மையிருப்பவும் இது செய்யாதவரும் மடாதிபதிகளாதற்கு யோக்கியராகார். இவர் மடாதிபதிகளெனப் பெயர் வகித்துக்கொண்டு மடத்துக்கு உரிய பொருளை அநுபவித்தல், தம்முடைய அரசனோடு மாறுபட்ட பகைமன்னரை எதிர்த்துப் பொருதற்கு வன்மையில்லாதவரும், வன்மையிருப்பவும் அது செய்யாதவரும், சேனாதிபதிகளெனப் பெயர் வகித்துக்கொண்டு சேனாதிபதித் தொழிலுக்கு உரியபொருளை அநுபவித்தல் போலும். இப்போலிச் சேனாதிபதிகள் தம்மரசனாலே தண்டிக்கப்படுதல் தப்பினும், இப்போலி மடாதிபதிகள் தங்கடவுளாலே தண்டிக்கப்படுதல் தப்பாது தப்பாது.

மடாதிபதிகள், கல்வி விருத்தியும் சமய விருத்தியுமாகிய பொதுநன்மைக்குரிய பொரு

ளெல்லாம், இடம்பத்தின் பொருட்டும், நிருத்தகீதங்களின் பொருட்டும், பாணவேடிக்கையின் பொருட்டும், தம்முடைய பாசத்தாரைப் பாதுகாத்தற்பொருட்டும், அவருக்கு வீடுகட்டுவித்தற் பொருட்டும், அவருக்குக் கிராமம் வாங்கற் பொருட்டும், அவருக்குக் கல்யாணஞ் செய்வித்தற்பொருட்டும், மற்றை மடாதிபதிகளோடு சண்டை செய்தற்பொருட்டும், வழக்காடற் பொருட்டும், அதிகாரிகளுக்குக் கொடுக்கப்படும் பரிதானத்தின்பொருட்டும், தம்மைத் தரிசிக்கும் பிரபுக்களுக்கும், அதிகாரிகளுக்கும், அவர் பெண்டிர் பிள்ளைகள் பரிசாரகர்களுக்கும் ஆபரணம் பீதாம்பரம் வஸ்திரமுதலியன கொடுத்தற் பொருட்டும், அதிகாரிகள் வீட்டிலே கல்யாணம் நடக்கும்போது மணமகனுக்கும் மணமகளுக்கும் உயர்ந்த வஸ்திரம் அனுப்புதற் பொருட்டும் செலவு செய்துகொண்டு தமது காலமெல்லாம் உலக விவகாரங்களிலே போக்குவாராயின் ஓகோ! பொதுநன்மை எப்படி நடத்தப்படும்! ஐயையோ உலகத்தார் எப்படிக் கடைத்தேறுவர்! இவ்வியல்புடையவரைத் துறவறத்தாரென்றும் ஆசாரியரென்றும் கொள்வது எப்படி!

இடத்துக்கும் அன்னவஸ்திரத்துக்கும் முட்டுப்பாடில்லாமல் அறிவு நூல்களைக் கற்றறிந்து கடவுளை வழிபட்டு உய்யலாம் என்று நம்பித் தங்கள் தங்கள் பிதா மாதா முதலாயினோரைத் துறந்துவிட்டு வந்து மடத்திலே சீடர்களாய்ப் புகுந்தவர்களைப் பாது



காவாது கைவிட்டு, அப்பாதுகாப்புக்குரிய பொருளைப்பாவவிருத்தியின்பொருட்டுச் செலவு செய்வது நீதியாகுமா! பாவம் பாவம்! இதனைக் கேட்பார் இல்லையே! ஐயையோ இவ்வநீதியை யார்பால் எடுத்து மொழிவோம்!

சாதியாலும் சமயத்தாலும் சமத்துவமுடைய மடாதிபதிகள் தம்முள்ளே அன்போடு கலந்து, கடவுளுடைய குணமகிமைகளையும் பதிபுண்ணியங்களையும் பாராட்டி, உலகத்தார் கடைத்தேறும் பொருட்டுப் பொது நன்மைகளை நடத்துவதே அழகு. இவ்வாறு செய்யாது, பொறாமையினாலே தம்முள்ளே பகைகொண்டு கலகம் விளைத்துப் பொது நன்மைக்குரிய பொருளெல்லாம் பாழுக்கிறைப்பது அழகன்று.

மடாதிபதிகள், தம்முடைய சீடர்களுள்ளே கல்வியறிவொழுக்கங்களால் மிகச் சிறப்புற்றவரென்று அறிவுடையோர் பலராலும் நன்குமதிக்கப்பட்டவரையே தமக்குப் பின் மடாதிபதிகளாய் இருக்கும்பொருட்டு நியோகித்தல் வேண்டும். சில மடாதிபதிகள் இப்படிச் செய்யாது, தமது பாசத்தாருடைய பிள்ளைகள் கல்வியறிவொழுக்கஞ் சிறிதும் இல்லாதவரேயாயினும், அவரையே தமக்குப் பின் மடாதிபதிகளாய் இருக்கும்பொருட்டு நியோகிக்கின்றனர். அவர் மடத்திலே சீடர்களைச் சேர்க்காமல் முன்னுள்ள சீடர்களையும் ஓட்டிவிட்டுத் தமது பாசத்தாரையும் அவர் குடும்பங்களையும் தம்மோடிருத்திக்கொண்டு, பொது

நன்மைக்குரிய பொருளெல்லாம் அவர்கள் பொருட்டே செலவு செய்கின்றனர். இப்படியாயிற் கல்வியும் சமயமும் எப்படி விருத்தியாகும்.

திருக்கோயிலும் திருமடமும் சமத்துவமுடையவை என்றும், அவைகளிலே புணர்ச்சி முதலிய குற்றங்களைச் செய்தவர் நரகங்களில் வீழ்ந்து சந்திர சூரியர் உள்ளவரையும் அளவில்லாத துன்பங்களை அநுபவிப்பர் என்றும் ஆகமங்களிலே சொல்லப்பட்டிருக்கின்றது. இவ்வுண்மையை அறிந்தும், மடங்களை, வேதாகமங்களைப் படித்தற்கும், படிப்பித்தற்கும், சமயநெறியைப் போதித்தற்கும் இடமாக்காது, வியபிசாரத்துக்கும், சூதாடற்கும், குடும்பத்தோடு வசித்தற்கும், பிரசவத்துக்கும் இடமாக்குவோரும், வாடகத்துக்குக் கொடுப்போரும் ஐயையோ நரகத்துன்பங்களுக்கு எங்ஙனந் தப்புவர்! கல்வி விருத்திக்கும் சமயவிருத்திக்கும் உரிய இடம்பொருளேவல்களெல்லாம் இவ்வியல்புடையவரிடத்தனவே யாமாயின், நம்முடைய தேசத்தார் சற்புத்தியும் சமயபுத்தியும் உடையவராய்க் கடைத்தேறுவது எப்படி!

மடங்களும், அம்மடங்களைச் சேர்ந்த திரவியங்களும், பூமிகளும், பலகாலத்திலும் பலராலும், கல்வி விருத்தியும் சமயவிருத்தியுமாகிய பொது நன்மையின் பொருட்டுக் கொடுக்கப்பட்டன. 'இல்லறத்தாரை மடாதிபதிகளாக்கின், அவர் பற்றுடையவராதலால் பொது



நன்மையை ஒழுங்காக நடத்தாது அம்மடத்துக்கு உரிய பொருளைத் தம்முடைய மனைவி மக்கண் முதலிய சுற்றத்தார்பொருட்டே செலவு செய்வர்; துறவறத்தாரை மடாதிபதிகளாக்கின், அவர் பற்றில்லாதவராதலால் அம்மடத்துக்கு உரிய பொருளிலே சிறிதாயினும் அபகரியாது, முழுதையும் பொது நன்மையின் பொருட்டே செலவு செய்வர்' என்னும் இக்கருத்துப் பற்றியே துறவிகளை மடாதிபதிகளாக்கும் வழக்கம் முன்னோரால் உண்டாயிற்று. இவ்வுண்மையை அறிந்து, கல்வியையும் சமயத்தையும் வளர்த்து, முன்னோருடைய கருத்தை வழுவாவண்ணம் நிறைவேற்றுவதே மடாதிபதிகளுக்குப் புகழும் புண்ணியமுமாகும்.

---

## சத்திரம்.

சத்திரமாவது ஞானிகள் துறவிகள் முதலிய பெரியோர்களுக்கும், தொழில் செய்து சீவனஞ்செய்யச் சத்தி யில்லாதவர்களாகிய குருடர் முடவர் வியாதியாளர் வயோதிகர் சிறுபிள்ளைகள் என்பவர்களுக்கும், அன்னதானம் நடத்தற்கும், வழிப்போக்கர்கள் தங்குதற்கும் உரிய இடமாம்.

கல்வியறிவும் நற்குண நற்செய்கைகளும் ஈசுரபத்தி அடியார் பத்திகளும் உடையவர்களைச் சத்திரத்துக்கு அதிகாரிகளாக நியோ

இத்தால், சத்திரம் நன்றாக நடக்கும். பேராசையும் வன்கண்மையும் பொறாமையும் துரபிமானமும் உடையவர்களைச் சத்திரத்துக்கு அதிகாரிகளாக நியோகித்தால், சத்திரம் நன்றாக நடவாது. ஆதலினாலே, சத்திரங் கட்டுவித்தவர் சத்திரத்துக்கு யோக்கியர்களையே அதிகாரிகளாக நியோகித்து, சத்திரதருமங்களைச் சிரத்தையோடு விதிப்படி நடத்துவிக்கவும், காலந்தோறும் தாம் பிறிது வேடந்தரித்துக்கொண்டு சென்று அச்சத்திரதருமங்களை ஆராய்ச்சி செய்யவும் வேண்டும்.

பசிதாகங்கள் எல்லாச் சாதியாருக்கும் உள்ளனவேயாகவும், பிராமணருக்கு அன்னதானஞ்செய்வதே தருமமென்றும், மற்றைச் சாதியாருக்கு அன்னதானஞ் செய்வது தருமமன்றென்றும் நம்மவர்கள் பெரும்பான்மையும் எண்ணுகின்றார்கள். இவ்விபரீத சிந்தனத்தினாலன்றோ, நம்மவர்கள் பெரும்பான்மையும் சத்திரத்திலே பிராமணருக்கு மாத்திரமே அன்னதானஞ் செய்கின்றார்கள்.

வறியவருக்குக் கொடுப்பதே தருமம்; செல்வருக்குக் கொடுப்பது தருமமன்று; "வறியார்க்கொன் றீவதேயீகை" என்றார் தெய்வப்புலமைத் திருவள்ளுவநாயனார். வறியவருள்ளும், நல்லொழுக்கமுடையவருக்குந் தொழில் செய்து சீவனஞ் செய்யச் சத்தியில்லாதவருக்குங் கொடுப்பதே தருமம்; தீயொழுக்கமுடையவருக்குந் தொழில் செய்து சீவனஞ்செய்யச் சத்தி



யுடையவருக்குங் கொடுப்பது தருமமன்று. பிராமணரெல்லாரும் வறியவருமல்லர், மற்றைச் சாதியாரெல்லாருஞ் செல்வருமல்லர்; பிராமணரெல்லாரும் நல்லொழுக்க முடையவருமல்லர்; மற்றைச்சாதியாரெல்லாருந் தீயொழுக்க முடையவருமல்லர்; பிராமணரெல்லாருந் தொழில் செய்து சீவனஞ்செய்யச் சத்தியில்லாதவருமல்லர், மற்றைச் சாதியாரெல்லாருந் தொழில் செய்து சீவனஞ்செய்யச் சத்தியுடையவருமல்லர்; வறுமை செல்வங்களும், நல்லொழுக்கந் தீயொழுக்கங்களும், தொழில்செய்யுஞ் சத்தியினது இன்மை உண்மைகளும் எல்லாச்சாதியாரிடத்தும் உண்டு. இப்படியிருக்க, பிராமணருக்கு மாத்திரங்கொடுப்பது தருமமென்றும் மற்றைச்சாதியாருக்குக் கொடுப்பது தருமமன்றென்றுங் கொள்வது பேதைமையே.

பிராமணர்கள் விளைநிலந் தோட்ட முதலியவை உடையவர்களேயாயினும், வட்டிக்குப் பணம் கொடுத்திருப்பவர்களேயாயினும், வேளாண்மை வாணிகம் இராசசேவை முதலிய தொழில்கள் செய்பவர்களேயாயினும், சத்திரங்களில் நம்மவர்கள் அவர்களுக்கே மிக்க உபசாரத்தோடு அன்னங் கொடுக்கின்றார்கள். மற்றைச்சாதியார்களோ வறியவர்களாயும் தொழில் செய்து சீவனஞ்செய்யச் சத்தியில்லாதவர்களாயும் இருப்பினும், அவர்கள் பசியினாலே மிக வருந்திச் சத்திரத்து வாயிலிலே வந்தபோது, நம்மவர்கள் அவர்களுக்குக் கஞ்சியாயினுங் கொடாது, அவர்களை வன்கண்மையோடுந் துர்

வார்த்தைகளினாலே வைதும், பிடர்பிடித்துத் தள்ளியும் ஓட்டிவிடுகின்றார்கள்.

ஈசுரத்துரோகம், சந்தியாவந்தனஞ் செய்யாமை, கொலை, களவு, மதுபானம், மாமிசபக்ஷணம், வியபிசாரம், பொய்ச்சான்று சொல்லல், பொய்வழக்குப் பேசல், சூதாடல் முதலிய பாவங்களையே செய்பவர்களாயினும், பிராமணவருணத்தார்களேயாயின், சத்திரங்களில், அவர்களுக்கு நெய் தயிர் பாயசம் வடை முதலியவற்றோடு விலாப்புடைக்க அன்னங் கிடைக்கின்றது. இப்பாவங்கள் இல்லாதவர்களாய் அறிவொழுக்கங்களினாற் சிறப்புற்றவர்களேயாயினும், பிராமணரல்லாத மற்றைச்சாதியார்களாயின், அவர்களுக்குச் சத்திரத்திலே ரசமுஞ் சாதமுமாயினும் கிடைப்பது அரிதரிது.

சிவதருமோத்தரம்.

புலையரேயெனினுமீசன்பொலங்கழலடியிற்புந்தி
நிலையரேலவர்க்குப்பூசைநிகழ்த்துதனெறியேயென்றுந்
தலையரேயெனினுமீசன்றாமரைத்தாளினேச
மிலரெனினியற்றும்பூசைப்பலந்தருவாரேயாரே.

குரவன்றனக்குநிதிமுதலுங்கொடுக்கக்குன்றாக்குணமொழுக்க
விரதமுடையவேதியர்க்கும்விழைவாற்பதமுமிசைவிக்க [ம்
பரமனடியாரவர்தமக்கும்பங்குகாலர்பாலருடல்
விரவுநோயர்விழியிழந்தார்விருத்தர்தமக்கும்விருப்புறவே.

பிராமணர் தம்முடைய வீட்டிலே பிராமணரேயன்றி க்ஷத்திரியர் வைசியர் சூத்திரர் அதிதிகளாய் வந்தாலும் அவர்களுக்கு அன்ன



பானீயங்கொடுத்தல்வேண்டும் என்று தருமசாத்திரத்தில் விதிக்கப்பட்டிருக்கின்றது. சாதியினால் உயர்ந்தவர் ஒத்தவர் தாழ்ந்தவர் என்னும் மூத்திறத்தாருள்ளும் பசிதாகங்களினால் வருத்தமுற்று வந்தவர் யாவரேயாயினும் அவருக்கு அன்னபானீயம் கொடுத்தல் வேண்டும் என்பதே உண்மைநூற்றுணிவு; இதுவே யுத்தி அநுபவங்களுக்குப் ஒத்தது. இங்ஙனமாகவும், பிராமணர் கட்டுவித்த சத்திரங்களிலே பிராமணருக்கு மாத்திரம் அன்னம் கிடைக்கின்றது; மற்றைச் சாதியார்கள் கட்டுவித்த சத்திரங்களினும், அந்தப் பிராமணருக்கு மாத்திரமே அன்னம் கிடைக்கின்றது. பிராமணப் பிரபுக்கள் தங்கள் சாதியாருக்கு மாத்திரம் உதவி செய்ய, மற்றைச்சாதிப்பிரபுக்களும் அந்தப்பிராமணருக்த மாத்திரமே உதவிசெய்து, தங்கள் தங்கள் சாதியார்களையும் மற்றைச் சாதியார்களையும் கைவிடுவார்களாயின், பசியினால் வருந்தும் மற்றைச் சாதியார்களுக்குப் புகலிடமாவார் யாவரோ! அறியேம்! அறியேம்! இஃதென்னை கொடுமை! கொடுமை!

சத்திரந்தோறும் போசனஞ் செய்துகொண்டு சோம்பேறிகளாய்த் திரியும் பிராமணர்கள் தங்களுக்காயினும் பிறருக்காயினும் யாது நன்மையைச் செய்கின்றார்கள்! அவர்கள், தங்களுக்கு அன்னம் எளிதிலே கிடைத்தலினாலன்றோ, வியபிசாரம் பொய் சூது முதலிய பாவங்களிலே தங்கள் காலமெல்லாம் போக்குகின்றார்கள். அவர்கள் செய்யும் பாவங்க

ளெல்லாவற்றிற்கும் சத்திரபதிகளே காரணராய் இருக்கின்றார்கள். வேதாகமங்களையும் அவற்றின் வழிநூல் சார்பு நூல்களையும் படிப்பவருக்கும், படிப்பிப்பவருக்கும், சனங்களுக்குச் சமய நெறியைப் போதிப்பவருக்கும், தேவாலயங்களிலே திருவலகிடல், திருமெழுக்கிடல், திருநந்தனவனம் வைத்தல், திருமாலை கட்டிக் கொடுத்தல், திருவீதியிற் புல்லுச்செதுக்குதல், திருக்கோபுரத்திலும் திருமதிலிலும் முளைக்கும் மரங்களையும் செடிகளையும் வேரோடு களைதல் முதலிய திருத்தொண்டுகளைச் செய்பவருக்குமே அன்னங் கொடுக்கப்படும் என்றும், சோம்பேறிகளுக்கு அன்னங் கொடுப்பதில்லை என்றும், நியமஞ்செய்தால், நம்முடைய தேசங்களில் சற்புத்தியும் சமயபத்தியும் விருத்தியாகுமே. நம்மவர்கள் இவ்வுண்மையைச் சிந்தியாததென்னை?

தொழில்செய்து சீவனஞ்செய்யச் சத்தியில்லாதவர்களாகிய குருடர் முடவர் வயோதிகர் முதலானவர்களுக்குச் சரீர சுகத்தின்பொருட்டு அன்னங் கொடுப்பதுமாத்திரம் போதாது; அவர்களுக்கு ஆன்மசுகத்தின் பொருட்டு அறிவுடையோரைக் கொண்டு கடவுளுடைய குணமகிமைகளைப் போதிப்பிக்கவும்வேண்டும்.

வறியவர் செல்வர் என்றும் நல்லொழுக்கமுடையவர் தீயொழுக்கமுடையவர் என்றும் அறியப்படாதவர்களாய் உள்ள வழிப்போக்கர்கள் பசித்து வந்தால், அவர்களை ஆராயாமல்



அவர்களுக்கு ஒருபொழுது இருபொழுது அன்னங் கொடுத்தல்வேண்டும். அதுமட்டோ, அவர்கள் வியாதியினால் வருந்தினார்களாயின், அவர்களுக்கு இரக்கத்தோடு மருந்தும் பத்தியமுங் கொடுத்து, அவர்களைப் பாதுகாத்தல் வேண்டும்.

சத்திரத்திலே வழிப்போக்கர்களுக்கு அவரவர் சாதியாசாரத்துக்கும் சமயாசாரத்துக்கும் ஏற்பப் பூசை போசனங்களின் பொருட்டு வெவ்வேறிடங்கள் அமைக்கப் பட்டிருத்தல் வேண்டும். பூசையுடையவர்கள் பொருட்டுப் பூசை வேதிகைகள் கட்டப்பட்டிருத்தல் வேண்டும். பூசைக்கு உபயோகமாகும் பத்திர புஷ்பங்களின் பொருட்டுச் சத்திரத்துக்குச் சமீபத்திலே திருநந்தனவனம்வைத்துப் பாதுகாக்கப் படுதல் வேண்டும்.

பிராமணருள்ளே மெய்யறிவும் நல்லொழுக்கமும் உடையவர் சிலரொழிய, மற்றவர்கள் அறியாமையினாலும், பொறாமையினாலும், துரபிமானத்தினாலும், பிராமணரல்லாத மற்றைச் சாதியாரெல்லாரும் சமசாதியாரென்றும், கல்வியறிவொழுக்கஞ் சிறிதும் இல்லாதவர்களாயினும் தாங்களே உயர்ந்தவர்களென்றும், கல்வியறிவொழுக்க முடையவர்களேயாயினும் மற்றைச்சாதியாரெல்லாருந்தாழ்ந்தவர்களென்றும், பேசுவது எல்லாருக்குந் தெரியுமே. அவ்வியல்புடையவர்களைச் சத்திரத்துக்கு அதிகாரிக

னாக்கினால், அவர்கள் சத்திர தருமங்களை ஒழுங்காக எப்படி நடத்துவார்கள்.

சத்திரத்துப் பிராமணர்கள், சத்திரத்துக்குத் தங்கள் சாதியார்கள் வந்தால், அவர்களுக்கு மாத்திரந் தகுந்த இடங் கொடுக்கின்றார்கள். மற்றைச்சாதியார்களுக்குள்ளே மாமிசபக்ஷணம் இல்லாதவர்களாய்ச் சமயாசாரமுடையவர்களாய் உள்ள உயர்ந்த சாதியார்களுக்குப், அவர்களல்லாத பல திறத்துத் தாழ்ந்த சாதியார்களுக்கும், ஓரிடமே காட்டுகின்றார்கள். மாமிசபக்ஷணமுடையவர்கள் சமையல் செய்யப் பெற்றதும் சுத்திசெய்யப் படாததும் எச்சிலிலை முதலியன நிறைந்ததுமாகிய இடத்தையே சமயாசாரமுடையவர்களுக்குக் காட்டிவிட்டால் அவர்கள் யாது செய்வார்கள்? அவர்களுள்ளே சிலர் அருவருத்து, அங்கே சமையல்செய்யாது, எங்கேனுந் தோப்புண்டோ என்று தேடிச்சென்று, அங்கே சமையல் முதலியன செய்கின்றார்கள். அவர்கள் மழைக்காலத்தில் யாதுசெய்வார்கள்? சமையல் செய்யும்பொழுதேனும், பூசைசெய்யும் பொழுதேனும், போசனஞ்செய்யும் பொழுதேனும், மழைபெய்தால் யாதுசெய்வார்கள்? சிலர் அவ்வசுத்தமாகிய இடத்தைச் சுத்திபண்ணி ஸ்நானஞ் செய்துகொண்டு சமையல் முதலியன செய்யும்பொழுது, சத்திரத்துப் பிராமணர்கள் அதனுள்ளே தாழ்ந்த சாதியாரையுங் கொண்டு போய் விடுகின்றார்கள். அதனாலே பெருங்கலகம் விளைகின்றது. சில ஏழைகள் பயந்து, பாதிச்



சமையலிலே எல்லாவற்றையும் எடுத்துக்கொண்டு வெளியே போய் விடுகின்றார்கள்.

சமயாசாரமுடையவர்களுக்குப் பூசை செய்தற்பொருட்டும் இராத்திரிகாலத்திலே பூசையை வைத்துக்கொண்டு சயனித்தற்பொருட்டும் சத்திரத்தில் இடங்கொடாத பிராமணர்கள் சிலர். இராசசேவை செய்யும் அதிகாரிகள் வந்து விட்டால, அவர்கள் அன்னிய சாதியார்களேயாயினும், அன்னிய சமயத்தார்களேயாயினும் அவர்களுக்குச் சமையல் முதலியவற்றின் பொருட்டுத் தங்கள் கட்டிலே இடங்கொடுக்கின்றார்கள்.

இராத்திரிகாலத்திலே பூசையை வைத்துக்கொண்டு சயனித்தற்குச் சத்திரத்தினுள்ளே இடம் பெறாதவர்கள் தெருத் திண்ணையிலே வைத்துக்கொண்டு சயனிக்கின்றார்கள். அவர்களுள்ளே சிலர் பூசையைத் திருடரால் இழந்து வருந்துகின்றார்கள். திருடர் முதலாயினோராலே பூசையை இழந்தவர்கள் அந்தப்பூசை வருமோவென்று நாற்பதுநாள் உபவாசஞ்செய்து பின்பு பிராயச்சித்தம் பண்ணிப் பூசையெழுந்தருளப் பண்ணிக் கொள்ளல்வேண்டும் என்று ஆகமம் விதிக்கின்றது. ஐயையோ இதற்கு அவர்கள் யாதுசெய்வார்கள்! இந்தப் பாவமெல்லாம் யாரைச்சாரும்!

தீர்த்தக்கரைகளிலே வேளாளர் முதலாயினோர் பூசை பண்ணும்பொழுது அப்பூசையிலே சலந்தெறிக்கும்படி வேட்டி தோய்ப்பவர்

களும், அவர்கள் 'ஐயா பூசையிலே சலந் தெறிக்கின்றதே' என்றால் 'ஓகோ! பிராமணருடைய வாசோதகம் சூத்திரருடைய பூசையிலே தெறிக்கலாகாதா! சூத்திரருக்குப் பூசை ஏது' என்று சொல்லித் துர்வார்த்தைகளினாலே வைபவர்களுமாகிய பார்ப்பார்கள், தங்கள் அதிகாரத்துட்பட்ட சத்திரங்களினுள்ளே அவ்வேளாளர் முதலாயினோர் பூசை செய்தற்கும், பூசையை வைத்துக்கொண்டு சயனித்தற்கும் புகுவார்களாயின், யாதுதான் பேசார்கள்! யாதுதான் செய்யார்கள்.

பெரும்பான்மையும் சத்திரங்கட்டுவிப்பவர்கள் வேளாளர் முதலிய சாதியார்களே. கறையான் புற்றெடுக்கப் பாம்பு குடிபுகுந்தாற்போல அவர்கள் சத்திரத்திலே குடிபுகுந்த பார்ப்பார்கள், அவர்களுடைய அன்னவஸ்திர முதலியனவெல்லாம் அநுபவித்துக்கொண்டு, தங்கள் சாதியாரைமாத்திரம் நன்குமதித்து, அவர்கள் சாதியார்களை அவர்களிற் றாழ்ந்த சாதியார்களோடு சமப்படுத்தி அவமதித்து, அவர்களுக்குப் பலவாற்றானுந் துன்பமே செய்கின்றார்கள். இதனைக் கண்டும் கண்டும், அப்பார்ப்பார்களையே சத்திரங்களுக்கு அதிகாரிகளாக்குதற்கும், தாங்கள் வருந்தித் தேடிய பொருளெல்லாவற்றையும் அவர்களுக்கே பாழுக்கிறைத்தற்கும் காரணம் யாதோ! அறியேம்.

இராசசேவை செய்யும் அதிகாரிகள் சிலர், சிலவூர்களிலே வீடுகளில் வசிக்கப்புகுந்தால்



வாடகங் கொடுத்தல்வேண்டுமே என்று, உலோபத்தினாற் சத்திரங்களிற்றானே நெடுங்காலம் வசிக்கின்றார்கள். வழிப்போக்கர்கள் அச்சத்திரங்களிலே இடம் பெறலாம் என்று நம்பி, வெய்யிலிலும் மழையிலும் நெடுந்தூரம் நடந்து களைத்து வந்து அச்சத்திரங்களிலே பிரவேசிக்கும்போது, அவ்வதிகாரிகளுக்கு வாயிற்காவலாளர்களாயுள்ள சேவகர்கள் அவர்களைத் துர்வார்த்தைகளினாலே வைதும், பிடர் பிடித்துத் தள்ளியும், ஓட்டிவிடுகின்றார்கள். அவ்வழிப்போக்கர்கள் மானமிழந்து 'ஐயையோ! இவ்விராத்திரியிலே எங்கே போவோம்! எங்கே சயனிப்போம்! அடுத்த சத்திரமோ நெடுந்தூரம், இடையிலே வீடுகளோ இல்லை; நேரமோ சென்றுவிட்டது; திருடர் பயமோ மிகுதியாம், என்று மனங்கலங்கி வருந்துகின்றார்கள்.

நம்மவர்கள் தாங்கள் வருந்தித்தேடிய பெரும்பொருள் கொண்டு தொடங்கிய சத்திர தருமங்களை நன்றாக நடத்துவியாது பராமுகர்களாய் இருப்பது தகுதியன்று. வழிப்போக்கர்களுக்கு முகமலர்ச்சிகாட்டி இனிய வார்த்தைகளைச் சொல்லி அவரவர் தகுதிக்கேற்ற இடங்கொடுத்து உபசரிக்க வல்ல யோக்கியர்களையே தங்கள் சத்திரங்களுக்கு அதிகாரிகளாக்கிச் சத்திர தருமங்களை நன்றாக நடத்துவிப்பார்களாயின், அவர்களுக்குப் புகழும் புண்ணியமும் உண்டாகும்.

---

# தேவாலயதரிசனம்.

யாவரும் நாடோறும் திருக்கோயிலிற் சென்று, சிரத்தையோடு விதிப்படி தரிசனஞ் செய்தல்வேண்டும். தேவாலயதரிசனம் நாடோறுஞ் செய்தற்கு இயலாதாயின், புண்ணியகாலங்களிலேனும் தவறுமற் செய்தல்வேண்டும்.

ஆலயதரிசனஞ் செய்ய விரும்புவோர் ஆலயத்துக்குச் சமீபத்தில் உள்ள புண்ணிய தீர்த்தத்திலே ஸ்நானஞ்செய்து தோய்த் துலர்ந்த வஸ்திரந்தரித்து, அநுட்டானம் முடித்துக் கொண்டு, ஆலயத்துக்குப் போதல் வேண்டும்.

ஆலயத்துக்குப் போம்பொழுது, ஒரு பாத்திரத்திலே தேங்காய் பழம் பாக்கு வெற்றிலை முதலியவை வைத்து, அரைக்குக் கீழ்ப்படாது மேலே உயர்த்தப்பட்ட கையில்ஏந்திக்கொண்டு, போதல்வேண்டும். இவைகளுக்குப் பொருளில்லாதவர் பத்திரபுஷ்பங்களேனுங் கொண்டு போய்க் கொடுத்து வணங்கல்வேண்டும். அதுவுங் கூடாதவர் சந்நிதியிலுள்ள செத்தை முதலியவற்றைப் போக்கியேனும் வணங்கல் வேண்டும்.

திருக்கோயிலுக்குச் சமீபித்தவுடனே, திருக்கோபுரத்தை வணங்கி, இரண்டு கைகளையுஞ் சிரசிலே குவித்துக்கொண்டு உள்ளே பிரவே



சித்து, பலிபீடத்துக்கு இப்பால் நமஸ்காரம் பண்ணல்வேண்டும்.

ஆடவர் அட்டாங்க நமஸ்காரமும், பெண்கள் பஞ்சாங்க நமஸ்காரமும், பண்ணல்வேண்டும். திரியாங்க நமஸ்காரம் இவ்விருவருக்கும் பொது.

அட்டாங்க நமஸ்காரமாவது தலை, கையிரண்டு, செவியிரண்டு, மோவாய், புயங்களிரண்டு என்னும் எட்டுறுப்பும் நிலத்திலே தோயும்படி வணங்குதல். பஞ்சாங்க நமஸ்காரமாவது தலை, கையிரண்டு, முழந்தாளிரண்டு என்னும் ஐந்துறுப்பும் நிலத்திலே தோயும்படி வணங்குதல். திரியாங்க நமஸ்காரமாவது சிரசிலே இரண்டு கைகளையும் குவித்தல்.

நமஸ்காரம் மூன்றுதரமாயினும், ஐந்து தரமாயினும், ஏழுதரமாயினும், ஒன்பதுதரமாயினும், பன்னிரண்டுதரமாயினும் பண்ணல் வேண்டும். ஒருதரம் இருதரம் பண்ணுதல் குற்றம்.

நமஸ்காரம் பண்ணுமிடத்து, மேற்கேயாயினும் தெற்கேயாயினும் கால் நீட்டல் வேண்டும். கிழக்கேயாயினும் வடக்கேயாயினும் கால் நீட்டலாகாது.

கிழக்கேயாயினும் வடக்கேயாயினும் சிரசை வைத்து, மார்பு பூமியிலே படும்படி வலக்கையை முன்னும் இடக்கையைப் பின்னும் நேரே நீட்டிப் பின் அம்முறையே மடக்கி,

வலப்புயமும் இடப்புயமும் மண்ணிலே பொருந்தும்படி கைகளை அரையை நோக்க நீட்டி, வலக்காதை முன்னும் இடக்காதைப் பின்னும் மண்ணிலே பொருந்தச் செய்து, நமஸ்காரம் பண்ணல்வேண்டும்.

நமஸ்கரித்து எழுந்து கும்பிட்டு, கடவுளை மறவாத சிந்தையோடு இரண்டுகைகளையும் இருதயத்திலே குவித்துக்கொண்டு, கால்களை மெல்லவைத்துப் பிரதக்ஷிணம் பண்ணல் வேண்டும்.

சிவபெருமானை மூன்றுதரமாயினும், ஐந்துதரமாயினும், ஏழுதரமாயினும், ஒன்பதுதரமாயினும், பதினைந்துதரமாயினும், இருபத்தொருதரமாயினும் பிரதக்ஷிணம் பண்ணல் வேண்டும்.

விநாயகரை ஒருதரமும், சூரியனை இரண்டுதரமும், பார்வதிதேவியாரையும் விட்டுணுவையும் நந்நான்குதரமும், பிரதக்ஷிணம் பண்ணல் வேண்டும்.

பிரதக்ஷிணம் பண்ணும் ஆவரணத்திலே தூபி நிழலேனும் துசத்தம்ப நிழலேனும் இருந்தால், அந்த நிழலில் மூன்று கூறு நீக்கி எஞ்சிய இரண்டு கூற்றினுள்ளே செல்லல் வேண்டும். கடவுள் உற்சவங் கொண்டருளும் பொழுது அந்த நிழல் இருப்பினும், நீக்காது செல்லலாம்.



அபிஷேககாலத்தில் உட்பிராகாரத்திலே பிரதக்ஷிணம் நமஸ்கார முதலானவை பண்ணலாகாது.

பிரதக்ஷிணம் பண்ணிச் சந்நிதானத்திலே நமஸ்காரஞ் செய்து, எழுந்து கும்பிட்டுக் கொண்டு உள்ளேபோய், கடவுளைத் தரிசித்து மனசிலே தியானித்து, சிரசிலும் இருதயத்திலும் அஞ்சலி செய்து, மனங்கசிந்துருக, உரோமஞ் சிலிர்ப்ப, ஆனந்தவருவி சொரிய இராகத்துடனே தோத்திரங்களைச் சொல்லல் வேண்டும்.

அருச்சகரைக்கொண்டு கடவுளுக்கு அருச்சனை செய்வித்து, தேங்காய் பழமுதலியவற்றை நிவேதிப்பித்து, கர்ப்பூராராத்திரிகம் பணிமாறப் பண்ணுவித்து, அருச்சகருக்கு இயன்ற தக்ஷிணை கொடுத்தல்வேண்டும்.

கடவுளைத் தரிசனஞ் செய்துகொண்டு, அவருக்குப் புறங்காட்டாது பலிபீடத்துக்கு இப்பால் வந்து மூன்றுதரம் நமஸ்கரித்து, எழுந்து வடக்குநோக்கி இருந்து, கடவுளைத் தியானித்துக்கொண்டு, அவருடைய மந்திரத்தில் இயன்ற உருச்செபித்து, எழுந்து, வீட்டுக்குப் போதல் வேண்டும்.

திருக்கோயிலிலே செய்யலாகாத குற்றங்களாவன: ஆசாரமில்லாது போதல், கால் கழுவாது போதல், சனனசௌச மரணசௌசத்தோடு போதல், எச்சிலுமிழ்தல், மல

சலங்கழித்தல், மூக்குநீர் சிந்துதல், அபான வாயுவிடுதல், பாக்குவெற்றிலையுண்டல், தம்பல முமிழ்தல், போசனபானம் பண்ணுதல், நித்திரைசெய்தல், மயிரைக்கோதி முடித்தல், சூதாடல், சிரசிலே வேட்டி கட்டிக்கொள்ளுதல், தோளிலே உத்தரீயமிட்டுக்கொள்ளுதல், போர்த்துக்கொள்ளுதல், சட்டையிட்டுக்கொள்ளுதல், வாகன மேறிச்செல்லுதல், குடை பிடித்துக்கொள்ளுதல், பாதரக்ஷை யிட்டுக் கொள்ளுதல், உயர்ந்ததானத்திருத்தல், ஆசனத்திருத்தல், தூபி துசத்தம்பம் பலிபீடம் விக்கிரகம் என்னும் இவைகளின் சாயையை மிதித்தல், விக்கிரகத்தையும் நிர்மாலியத்தையும் தீண்டுதல், பெண்களைத் தீண்டல், பெண்களை இச்சித்துப்பார்த்தல், ஒருதாம் இருதாம் நமஸ்கரித்தல், ஒருதாம் இருதாம் வலம் வருதல், ஓடி வலம்வருதல், கடவுளுக்கும் பலி பீடத்துக்கும் குறுக்கேபோதல், அகாலத்திலே தரிசித்தல், வீண்வார்த்தை பேசுதல், சிரித்தல், வீண்கீதம்பாடல், வீண்கீதம் கேட்டல், திருவிளக்கவியக்கண்டும் தூண்டாதொழிதல், திருவிளக்கில்லாதபோது வணங்குதல், உற்சவங் கொண்டருளும்பொழுது அங்கேயன்றி உள்ளே போய் வணங்குதல் முதலானவைகளாம். இக்குற்றங்களுள் ஒன்றை அறியாது செய்தவர் கடவுளுடைய மந்திரத்தைச் செபிக்கின், அக்குற்றம் நீங்கும். இக்குற்றங்களை அறிந்து செய்தவர் நரகத்தில் விழுந்து



வருந்துவர்கள். அவருக்குப் பிராயச்சித்தமில்லை.

திருக்கோயிலினுள்ளே போதற்கு யோக்கியர்களல்லாத சாதியார்கள் திருக்கோயிற் புறத்திலே பிரதக்ஷிணம்பண்ணித் திருக்கோபுரத்தை நமஸ்கரித்துக் கடவுளைத் தோத்திரஞ் செய்யக்கடவர்கள்.

---

## புராணபடனம்.

புராணங்களை நியமமாக விதிப்படி படித்தலும், அவைகளுக்குப் பொருள் சொல்லலும், கேட்டலும் சிறந்த புண்ணியங்களாம்.

புராணம் வாசித்துப் பொருள்சொல்லற்கு உரிய இடங்களாவன. திருக்கோயில், திருமடம், புண்ணிய தீர்த்தக்கரை, சமயாசாரமுடையவருடைய கிருகம் முதலிய சுத்தஸ்தானங்களாம். மற்றையிடங்களிலே புராணம் படிக்கலாகாது.

புராணம் வாசித்துப் பொருள்சொல்லற்கு யோக்கியராவார், நான்கு வருணத்துள்ளும், இலக்கணவிலக்கியங்களிலே வல்லவராய், நீதி நூல்களையும் சமயநூல்களையும் கற்றறிந்தவராய், தமிழ்வேதத்தை அத்தியயனம் பண்ணினவராய், நல்லொழுக்கத்திற் சிறந்தவராய் உள்ள

வர். நல்லொழுக்கம் இல்லாதவரிடத்தே புராணங் கேட்டலாகாது.

ஸ்நானஞ்செய்து தோய்த்துலர்ந்த வஸ்திரந்தரித்து அநுட்டானம் முடித்துக்கொண்டே புராணம் படித்தல் பொருள் சொல்லல் கேட்டல் என்னும் இவைகளைச் செய்தல் வேண்டும். ஸ்நானமுதலிய நியமங்கள் இல்லாமல் இவைகளைச் செய்யலாகாது.

புராணத்திருமுறையைப் பீடத்திலன்றித் தரையிலேனும், ஆசனத்திலேனும், படுக்கையிலேனும், மடியிலேனும் வைக்கலாகாது; திருமுறைக்கயிறு கீழே விழலாகாது. முறையென்பது புத்தகம்.

புராணத்தைச் சுபதினத்திலே தொடங்கிச் சுபதினத்திலே முடித்தல்வேண்டும். தொடங்குந்தினத்திலும் முடிக்குந்தினத்திலும் புராணமண்டபத்தைப் பட்டுமேற்கட்டி, பூமாலை, வாழை, கரும்பு, முதலியவைகளினால் அலங்கரித்தல்வேண்டும்.

நாடோறும் புராணமண்டபத்தைக் கோமயத்தினாலே மெழுகுவித்து, இடம் பண்ணி, அதன் மீது பீடத்தை வைத்து, அதன்மேலே பட்டுப் பரிவட்டம் விரித்து, அதன்மேலே புராணத் திருமுறையை வைத்து, சந்தனம் புஷ்பம் தூபம் தீபம் முதலியவைகளினாலே விதிப்படி பூசைசெய்து, நமஸ்கரித்து, இருந்துகொண்டு, ஒருவர் வாசிக்க ஒருவர் பொருள்சொல்லல்



வேண்டும். குணத்துக்கும் காலத்துக்கும் ஏற்ப வாசிக்கப்படும் இராகத்திற்றானே பொருள் சொல்லல்வேண்டும். வாசிப்பவர் திருமுறையின் பாகத்தை இரண்டு கையினாலும் பிடித்துக்கொண்டே வாசித்தல்வேண்டும். பொருள் சொல்பவர், இலக்கண வழுவில்லாதபடிக்கும், கேட்பவர்கள் எல்லாருக்கும் எளிதில் விளங்கும்படிக்கும், சொல்லல்வேண்டும். படிக்கத் தொடங்கும்போதும், முடிக்கும்போதும் காப்புச் சொல்லல்வேண்டும். அப்பொழுது எல்லாரும் அஞ்சலிசெய்துகொண்டிருத்தல் வேண்டும்.

புராணங்கேட்பவர் புராணத்திருமுறையை நமஸ்கரித்து, புராணம் படித்துப் பொருள் சொல்லுவோருக்கு ஆசனங்கொடுத்து நமஸ்காரஞ்செய்து, தம்முடைய சுற்றத்தாரோடும் நண்பரோடும் இருந்துகொண்டு, சிரத்தையுடன் கேட்டல்வேண்டும்.

---

புராணம் படிக்குஞ் சபையிலே உயர்ந்த ஆசனத்திருத்தல், காலை நீட்டிக்கொண்டிருத்தல், சயனித்தல், நித்திரைசெய்தல், சிரித்தல், பிறவார்த்தைகளைப் பேசுதல், புராணசரித்திரத்தைப் பொய்யென்றல், வெற்றிலைபாக்குண்ணுதல், தலையிலே வேட்டி கட்டிக்கொள்ளுதல், உடம்பு போர்த்துக்கொள்ளுதல், சட்டையிட்டுக்கொள்ளுதல், இடையில் எழுந்து பிறிது கருமத்திலே செல்லுதல், புராணம் வாசித்துப் பொருள் சொல்வோரை நன்கு மதியாது அவமதிசெய்தல் முதலிய பாவங்க

ளைச் செய்தோர் நரகத்திலே நெடுங்காலந் தண்டிக்கப்பட்டு, பின்பு இழிந்த பிறப்பை அடைந்து வருந்துவார்கள்.

புராணங்கேட்பவர் ஆதிதொடங்கி ஈறுவரையும் தவறாமல் நியமத்தோடு கேட்டல் வேண்டும். புராணமுற்றுப்பெற்ற தினத்திலே புராணத்திருமுறைக்கு விசேஷ பூசை செய்வித்து, புராணம் வாசித்தவருக்கும், பொருள் சொன்னவருக்கும், கடவுளுடைய அடியார்களுக்கும், குருடர் முடவர் முதலானவர்களுக்கும், சுற்றத்தார்களுக்கும் அன்னங் கொடுத்து, புராணம் வாசித்தவருக்கும் பொருள் சொன்னவருக்கும் தம்மால் இயன்றபொருள்கள் வைத்து நமஸ்காரம் பண்ணல்வேண்டும்.

எல்லாருங்கேட்டு உய்யும்பொருட்டுத் திருக்கோயில்களிலே யோக்கியர்களைக்கொண்டு புராணங்களை வாசித்துப் பொருள் சொல்லுவித்தல் மிக மேலாகிய புண்ணியம்.

---

## சிராத்தம்.

சிராத்தமுதலிய தானமெல்லாம் சற்பாத்திரப் பிராமணருக்கே கொடுத்தல்வேண்டும். அசற்பாத்திரப் பிராமணருக்குக் கொடுத்தவர் தானபலத்தை இழந்து, நரகத்தில் விழுந்து வருந்துவர். சற்பாத்திரத்தின் இலக்கணமும்



அசற்பாத்திரத்தின் இலக்கணமும் முன்னே சொல்லப்பட்டன.

குருடன், ஒற்றைக்கண்ணன், செவிடன், ஊமை, உறுப்புக் குறைந்தவன், உறுப்புமிகுந்தவன், சொத்தைநகத்தன், சொத்தைப்பல்லன், பித்தரோகி, குட்டரோகி, க்ஷயரோகி, காசரோகி, மேகரோகி, குன்மரோகி, மகோதரரோகி, அலி, கணவன் இருக்கக் கள்ளக்கணவனுக்குப் பிறந்தவனாகிய குண்டகன், கணவன் இறந்தபின் கள்ளக்கணவனுக்கு விதவையிடத்துப் பிறந்தவனாகிய கோளகன், விதவையை விவாகஞ் செய்தவன், பிறனால் விவாகஞ்செய்யப்பட்டவளை விவாகஞ்செய்தவன், வியபிசாரஞ்செய்த மனைவியை விலக்காதவன், வைத்தியப்பிராமணன், வாணிகப்பிராமணன், வேளாண்மைப் பிராமணன், சிற்பப்பிராமணன், இராசசேவைசெய்யும் பிராமணன், வட்டியாற்பிழைக்கும் பிராமணன் என்னும் இவர்களைக்கொண்டு தேவகாரிய பிதிர்காரியங்களைச் செய்வித்தலும், இவர்களைச் சிராத்தத்தில் வரித்துப் பூசித்தலும் ஆகாவாம்.

பிராமணர் முதலிய மூன்று வருணத்தாரும் அன்ன சிராத்தஞ்செய்தல் வேண்டும். ஆபத்துக்காலத்தும், அக்கினியில்லாவிடத்தும், கிரகணகாலத்தும், தீர்த்தயாத்திரை செல்லுமிடத்தும், ஆமசிராத்தஞ்செய்யலாம். சூத்திரர் முதலியோர் என்றும் ஆமசிராத்தமே செய்தல் வேண்டும். ஆமசிராத்தஞ் செய்தற்கு இயலாவிடத்து, இரணிய சிராத்தஞ் செய்யலாம்.

சனனாசௌச மரணாசௌசத்திலே சிராத்த தினம் வந்தால், ஆசௌச நிவர்த்தியாகுந் தினத்திலே சிராத்தஞ் செய்தல்வேண்டும். விதவை தான் வீட்டுக்கு விலக்காய் இருக்கும்போது தன்னாயகனுடைய சிராத்ததினம் வந்தால், ஐந்தா நாள் சிராத்தஞ் செய்யக்கடவள்.

பிராதக்காலமும், சங்கவகாலமும், மத்தியானமும், அபராணமும், சாயான்னமும் எனப் பகற்காலம் ஐந்து கூறாக வகுக்கப்படும். சூரியோதயமுதல் ஆறு நாழிகை யளவினதாகிய காலம் பிராதக்காலம்; அதற்குமேல் பன்னிரண்டு நாழிகைவரையும் உள்ளகாலம் சங்கவகாலம். அதற்குமேற் பதினெட்டு நாழிகைவரையும் உள்ளகாலம் மத்தியானம்; அதற்குமேல் இருபத்துநான்கு நாழிகைவரையும் உள்ள காலம் அபராணம்; அதற்குமேல் முப்பது நாழிகைவரையும் உள்ளகாலம் சாயான்னம்.

சிராத்தம், இராத்திரிகாலத்திலும், இரண்டு சந்தியா காலத்திலும், பிராதக்காலத்திலும் செய்யலாகாது. அன்ன சிராத்தம் அபராணத்திலே செய்தல்வேண்டும். ஆமசிராத்தம் சங்கவகாலத்திற் செய்து, போசனம் அபராணத்திற் செய்தல்வேண்டும். சந்தியாகாலங்கள் இரண்டாவன இராக்காலத்தின் இறுதி முகூர்த்தமும் பகற்காலத்தின் இறுதி முகூர்த்தமுமாம். முகூர்த்தம் இரண்டுநாழிகை.



சிராத்தத்துக்கு ஆகுந் திரவியங்களாவன நெல்லரிசி, கோதுமை, யவம், சிறுபயறு, உழுந்து, எள்ளு, சர்க்கரை, வெல்லம், தேன், நல்லெண்ணெய், பசுப்பால், பசுத்தயிர், பசுநெய், சிறைக்காய், மிளகு, சீரகம், மஞ்சள், கடுகு, லவணம், புளி, வாழையிலை, வாழைத்தண்டு, வாழைக்காய், வாழைப்பழம், மாங்காய், மாம்பழம், பலாக்காய், பலாப்பழம், தேங்காய், இளநீர், பாகற்காய், முள்ளிக்காய், கக்கரிக்காய், வெள்ளரிக்காய், புடலங்காய், அவரைக்காய், நெல்லிக்காய், எலுமிச்சம்பழம், சிறுகிழங்கு, பெருவள்ளிக்கிழங்கு, இஞ்சிக்கிழங்கு, கீரை, கீரைத்தண்டு, முன்னையிலை, முசுட்டையிலை, காரையிலை, பிரண்டை, சேப்பந்தண்டு, சேப்பங்கீரை, சேப்பங்கிழங்கு, கருவேப்பிலை, வெற்றிலை பாக்கு, ஏலம், சுக்கு, கிராம்பு, சாதிக்காய், சாதிபத்திரி என்பவைகளாம்.

சிராத்தத்துக்கு ஆகாத திரவியங்களாவன கடலை, துவரை, வெண்கடுகு, பெரும்பயற்றங்காய், பீர்க்கங்காய், அத்திக்காய், முருங்கைக்காய், பூசனிக்காய், கத்தரிக்காய், சுரைக்காய், வாழைப்பூ, முள்ளங்கி, வெங்காயம், வெள்ளைப்பூண்டு, எருமைப்பால், எருமைத்தயிர், எருமைநெய், ஆட்டுப்பால், ஆட்டுத்தயிர், ஆட்டுநெய் முதலியவைகளாம்.

சிராத்தத்துக்கு ஆகும் பத்திரபுஷ்பங்களாவன வில்வம், துளசி, அறுகு, சம்பகப்பூ, தாமரைப்பூ, புன்னைப்பூ, முல்லைப்பூ, நந்தியா

வர்த்தப்பூ, மருக்கொழுந்து, வெட்டிவேர், எட்டூ முதலியவைகளாம். சிராத்தத்துக்கு ஆகாத புஷ்பங்களாவன மகிழம்பூ, தாழம்பூ, அலரிப்பூ, சிறுசண்பகப்பூ என்பவைகளாம்.

தன்வீட்டிலாயினும், மலையின்மேலாயினும், புண்ணிய தீர்த்தக்கரையிலாயினும், திருக்கோயிலிலாயினும், கோமயத்தினாலே சுத்தி செய்யப்பட்ட தானத்திலே சிராத்தஞ் செய்தல் வேண்டும்.

சிராத்ததினத்தில் வீட்டிலே தயிர்கடைதலும், நெற்குத்துதலும், பிச்சைபோடலும், எண்ணெய் நெல் முதலிய பொருள்களைக் கொடுத்தல் வாங்கல்களும் ஆகாவாம்.

சிராத்ததினத்திலே திருக்கோயிலிலே கடவுளுக்குத் தன்னால் இயன்றமட்டும் அபிஷேகம் பூசை திருவிளக்கேற்றுதல் முதலியவை செய்வித்தல்வேண்டும்; பசுக்களுக்குப் புல்லுப் போடல்வேண்டும்.

சிராத்தத்தின்பொருட்டு முதனாளிலாயினும், அன்றைக்காயினும், சிராத்தயோக்கியராகிய பிராமணரைப்பிரார்த்தித்துவரித்தல்வேண்டும். விசுவதேவர்கள் இருவர் பொருட்டும் இருவரையும், பிதிர்கள் மூவர்பொருட்டும் மூவரையும் வரித்தல்வேண்டும். சிராத்தயோக்கியர் ஐவர் கிடையாதபோது விசுவதேவர்கள் பொருட்டு ஒருவரையும், பிதிர்கள் பொருட்டு ஒருவரையும் வரித்தல்வேண்டும். இருவருங் கிடையாத



போது விசுவதேவர்கள் பொருட்டும் பிதிர்கள் பொருட்டும் ஒருவரையே வரிக்கலாம். ஒருவருங் கிடையாதபோது விசுவதேவர்களையும் பிதிர்களையுங் கூர்ச்சங்களிலே விதிப்படி பூசித்துப் பிண்டம் இட்டு இயன்ற தக்ஷிணையை வேறு தலத்திலுள்ள சிராத்தயோக்கியரைச் சுட்டி உதகத்தோடு தத்தஞ்செய்தல் வேண்டும். அந்தத் தக்ஷிணையைச் சேமித்து வைத்து அதற்குரியவரிடத்தே தப்பாமற் கொண்டு போய்க் கொடுத்தல்வேண்டும். அவர் இறந்தாராயின், அவர் புத்திரருக்குக் கொடுத்தல் வேண்டும். அவரும் இறந்தாராயின், தேவாலயத்துக்குக் கொடுத்தல்வேண்டும்.

சிராத்தகருத்தாவும், சிராத்தத்தின் பொருட்டு வரிக்கப்பட்டவரும், சிராத்ததினத்திலும், முதற்றினத்திலும், மற்றைத்தினத்திலும், க்ஷௌரஞ்செய்து கொள்ளல், மீண்டு புசித்தல், வழிநடத்தல், பாரஞ்சுமத்தல், கோபம், பொய், காமம் இவைகளைத் தவிர்ந்து, விரதநியமமுடையவராய் இருத்தல்வேண்டும். விரதநியமம் தப்பிப் புணர்ச்சி முதலியவற்றைச் செய்தவர் நரகத்தில் விழுந்து வருந்துவர். சிராத்த கருத்தா இம்மூன்று தினத்திலும் எண்ணெய் தேய்த்துக் கொள்ளலும், பரான்னம் புசித்தலும், வெற்றிலைபாக்குண்ணலும், மருந்துண்ணலும் ஆகாவாம்.

ஸ்நானஞ் செய்யாது வந்தவருக்கும், போசனஞ்செய்து கொண்டு வந்தவருக்கும், வேறிடத்

திலே சிராத்தம் வாங்கிக்கொண்டு வந்த வருக்கும், சிராத்தத்தில் வாங்கிய பதார்த்தங் களைத் தாம் அநுபவியாது விக்கிரயமுதலியன செய்வோருக்கும் சிராத்தங் கொடுக்கலாகாது.

ஒருவனுடைய சிராத்தத்தில் வரிக்கப் பட்டவன் அந்தச் சிராத்தத்தை ஏற்றுக்கொள் ளாது விலகுதலும், ஒருவனைச் சிராத்தத்தின் பொருட்டு வரித்தவன் அவனுக்குக் கொடா தொழிதலும் பாவம்.

சிராத்தஞ்செய்விப்பவராகிய புரோகிதரைச் சிராத்தத்தில் வரிக்கலாகாது. அவருக்குச் சிராத்தத்தில் வரிக்கப்பட்டவருக்குக் கொடுத்த படியே குறைவின்றிச் சமமாகத் தக்ஷிணையோடு கொடுத்து, அவரை உபசரித்து அனுப்பல் வேண்டும்.

சிராத்தம் நடக்கும்போது, வேதத்தையும், தமிழ் வேதத்தையும், புராணத்தையும், இதி காசத்தையும், தரும சாத்திரத்தையும், சிராத் தம் வாங்குவோருக்குக் கேட்கும்படி படிப்பித் தல்வேண்டும். இது பிதிர்களுக்கு மிகப் பிரிய மாகும்.

சிராத்தத்திலே கண்ணீர் விடுதலும், கோபித்தலும், பொய்சொல்லலும், துரிதஞ் செய்தலும், சிந்திய அன்னத்தைக் காலாலே மிதித்தலும், இலையில் அன்னத்தைத் தாவிப் பரிமாறலும் ஆகாவாம். சிராத்தமேற்பவர் நன்று தீது என்று பேசாது திருப்தியோடுப் ஏற்றல்வண்டும்.



சிராத்தமுடிந்தபின்பு, சிராத்தமேற்றவர் களை வலமாகப் பின்றொடர்ந்து புறத்தே அநுப்பிவிட்டு, சிராத்தஞ்செய்த இடத்தைச் சுத்திபண்ணித் தன் கால்கைகளைச், சுத்தி செய்து ஆசமனஞ் செய்துகொண்டு, கடவு ளுடைய அடியார்களோடும், அதிதிகளோடும், தன் சுற்றத்தார் முதலியவர்களோடும் இருந்து, போசனஞ் செய்தல்வேண்டும்.

சிராத்தத்துக்குப் பொருளில்லாதவன், காய், கனி, கிழங்கு, எள் இவைகளையேனுஞ் சற் பிராமணருக்குக் கொடுத்து நமஸ்காரஞ்செய்து, திலதர்ப்பணம்பண்ணிக்கொண்டு தான் திருத்தி யாகப் போசனம் பண்ணல்வேண்டும்.

---

# தமிழ்.

சம்ஸ்கிருதம் தமிழ் என்னும் இரண்டு பாஷைக்கும் முதலாசிரியர் சிவபெருமான். சிவ பெருமான் சம்ஸ்கிருதத்துக்கு இலக்கணநூல் பாணினி முனிவருக்கும், தமிழுக்கு இலக்கண நூல் அகத்தியமுனிவருக்கும் அருளிச்செய்தார். அம்முனிவர்கள் இருவரும் முறையே அம்முத னூல்கள் இரண்டின் வழியாகப் பாணினீயம் அகத்தியம் என்னு நூல்களை அருளிச்செய்தார் கள். திராவிடமென்னும் வடமொழி தமிழென் றாயிற்று.

தமிழ் வழங்குநிலம், பரதகண்டத்தில் வடக்கின் கண்ணே திருவேங்கடமும், தெற்கின் கண்ணே கன்னியாகுமரியும், கிழக்கின் கண்ணும் மேற்கின்கண்ணும் கடலும், எல்லையாக உடைய தென்னாடாம். இத்தென்னாடு திராவிடதேசமெனப் பெயர்பெறும். இத்தென்னாட்டில் வழங்குதல் பற்றித் தமிழ்மொழி தென்மொழி எனவும்படும். சம்ஸ்கிருதம் பொதுவாயினும், ஆதியிலே வடதிசையினின்றும் தென்றிசைக்கு வந்தமையால் வடமொழியெனப்படும்.

அகத்தியமுனிவருக்குச் சிவபெருமானேயன்றி முருகக்கடவுளும் தமிழைச் செவியறிவுறுத்தருளினார். அவ்வகத்திய முனிவருக்கு மாணாக்கர் பன்னிருவர்:—தொல்காப்பியர், அதங்கோட்டாசிரியர், துராலிங்கர், செம்பூட்சேய், வையாபிகர், வாய்ப்பியர், பனம்பாரனார், கழாரம்பனார், அவினயனார், காக்கைபாடினியார், நற்றத்தனார், வாமனர். அகத்தியமுனிவர் தாஞ்செய்த அகத்தியத்தை அப்பன்னிரண்டு மாணாக்கர்களுக்கும், கற்பித்தருளினார். அப்பன்னிருவர்களும் அவ்வகத்தியத்தை முதனூலாகக்கொண்டு, தனித்தனியே வழிநூல் செய்தார்கள். அவைகளுள்ளே, சமதக்கினி முனிவருடைய புத்திரரும் திரணதூமாக்கினி யென்னும் பெயரை யுடையவருமாகிய தொல்காப்பியமுனிவர் செய்தநூலே மிகச்சிறந்தது. தொல்காப்பியர் முதலிய பன்னிரு மாணாக்கர்



களுங் கூடிப் புறப்பொருட்பன்னிருபடலம் என்னும் ஒருநூல் செய்தார்கள்.

அகத்தியத்துள்ளே இயற்றமிழ் இசைத்தமிழ் நாடகத்தமிழ் என்னும் மூன்றுதமிழும் விரவிக் கூறப்பட்டன. அவற்றுள், இயற்றமிழை வேறு பிரித்து வழிப்படுத்தார் தொல்காப்பியர் முதலாயினோர்; இசைத்தமிழை வேறு பிரித்து வழிப்படுத்தார் பெருநாரை பெருங்குருகு முதலிய நூலுடையார்; நாடகத்தமிழை வேறுபிரித்து வழிப்படுத்தார் முறுவல், சயந்தம், குணநூல், செயிற்றிய முதலிய நூலுடையார்.

தமிழ்மொழி தலைச்சங்கம், இடைச்சங்கம், கடைச்சங்கம் என்னும் மூன்று சங்கங்களாலும் ஆராயப்பட்டது. இச்சங்கமூன்றையுந் தாபித்தவர்கள் பாண்டிய ராசாக்கள்.

தலைச்சங்கமிருந்து தமிழாராய்ந்தவர்கள் இறையனார், குமரவேள், அகத்தியமுனிவர் முதலாகிய ஐஞ்ஞூற்று நாற்பத்தொன்பதின்மர்கள். அவர்களுக்கு நூல் அகத்தியம்.

இடைச்சங்கமிருந்து தமிழாராய்ந்தவர்கள் அகத்தியர் தொல்காப்பியர் முதலாகிய ஐம்பத்தொன்பதின்மர்கள். அவர்களுக்கு நூல் அகத்தியமும், தொல்காப்பியமும், மாபுராணமும், இசைநுணுக்கமும், பூதபுராணமுமாம்.

கடைச்சங்கமிருந்து தமிழாராய்ந்தவர்கள் நக்கீரர், மருதனிளநாகனார், சிறுமேதாவியர்

முதலாகிய நாற்பத்தொன்பதின்மர்கள். அவர்களுக்கு நூல் அகத்தியமும் தொல்காப்பியமும். அவர்கள் சரசுவதியினுடைய திருவவதாரமாய் உள்ளவர்கள். சதுரமாய் இரண்டு சாணளவினதாகிய சங்கப்பலகை ஒன்று அவர்களுக்குச் சிவபெருமானாலே கொடுத்தருளப்பட்டது. அது மெய்ப்புலவர்களுக்கெல்லாம் முழம் வளர்ந்து இருத்தற்கு இடங்கொடுப்பது. அக் கடைச்சங்கத்துப் புலவர்கள் சுந்தரமூர்த்தி நாயனாராலே திருத்தொண்டத் தொகையிலே பொய்யடிமையில்லாப் புலவர்கள் என்று துதிக்கப்பட்டார்கள்.

கடைச்சங்கத்தார் காலத்திலே இறையனார் பாண்டியன் பொருட்டு "அன்பினைந்திணை" என்பது முதலிய அறுபது சூத்திரங்களினால் ஓரகப்பொருணூல் செய்தருளினார். அது களவியலெனவும், இறையனாரகப்பொருளெனவும் பெயர் பெறும். அதற்குக் கடைச்சங்கத்துப் புலவர் நாற்பத்தொன்பதின்மரும் தனித்தனியே உரைசெய்தார்கள். அவ்வுரைகளுள்ளே நக்கீரர் செய்த உரையே முருகக்கடவுளது திருவவதாரமாய் மதுரை வைசியர் மரபிற் றோன்றிய ஐந்துபிராயத்தையுடைய உருத்திரசன்மராலே மெய்யுரையெனக் கொள்ளப்பட்டது.

பிரமதேவருடைய திருவவதாரமாய் விளங்கிய தெய்வப்புலமைத் திருவள்ளுவநாயனார் திருக்குறளென்னும் உத்தரவேதத்தைச்செய்து,



மேற்கூறிய கடைச்சங்கத்தில் அரங்கேற்றியருளினார். அப்பொழுது அசரீரிவாக்கின்படியே சங்கப்பலகை அத்திருவள்ளுவநாயனாருக்கும் உருத்திரசன்மருக்கும் மாத்திரமே இடங்கொடுத்தது.

சம்ஸ்கிருதமும் தமிழும், சிவபெருமானாலும் இருடிகளாலும் அருளிச்செய்யப்பட்ட இலக்கண நூல்களை உடைமையாலும், ஆன்றோர்களாலே தழுவப்பட்டமையாலும், தம்முள் சமத்துவமுடையனவேயாம்.

## காஞ்சிப்புராணம்.

வடமொழியைப்பாணினிக்குவகுத்தருளியதற்கிணையாத்
தொடர்புடையதென்மொழியையுலகமெலாந்தொழுதேத்து
குடமுனிக்குவலியுறுத்தார்கொல்லேற்றுப்பாகரெனிற் [ம்
கடல்வரைப்பினிதன்பெருமையாவரேகணித்தறிவார்.

இருமொழிக்குங்கண்ணுதலார்முதற்குரவரியல்வாய்ப்ப
விருமொழியும்வழிப்படுத்தார்முனிவேந்தரிசைபரப்பு
மிருமொழியுமான்றவரேதழீஇயினாரென்றாலிவ்
விருமொழியுநிகரென்னுமிதற்கையமுளதேயோ.

## திருவிளையாடற்புராணம்.

கண்ணுதற்பெருங்கடவுளுங்கழகமோடமர்ந்து
பண்ணுறத்தெரிந்தாய்ந்தவிப்பசுந்தமிழேனை
மண்ணிடைச்சிலவிலக்கணவரம்பிலாமொழிபோ
லெண்ணிடைப்படக்கிடந்ததாவெண்ணவும்படுமோ.

தொண்டர்நாதனைத்தூதிடைவிடுத்ததுமுதலை
யுண்டபாலனையழைத்ததுமெலும்புபெண்ணுருவாக்
கண்டதும்மறைக்கதவினைத்திறந்ததுங்கன்னித்
தண்டமிழ்ச்சொலோமறுபுலச்சொற்களோசாற்றீர்.

---

# காலப்பிரமாணம்.

நிமிஷம் பதினைந்து கொண்டது ஒரு காஷ்டை. காஷ்டை முப்பதுகொண்டது ஒரு கலை. கலை முப்பதுகொண்டது ஒரு முகூர்த்தம். முகூர்த்தமென்பது இரண்டு நாழிகை. முகூர்த்தம் முப்பதுகொண்டது பகலும் இரவுங்கூடிய ஒரு நாள். நாள் பதினைந்து கொண்டது ஒரு பக்ஷம். பக்ஷம் இரண்டு கொண்டது ஒருமாசம். மாசம் ஆறுகொண்டது ஒரு அயனம். அயனம் இரண்டு கொண்டது ஒரு வருஷம். இம்மனுஷ வருஷம் ஒன்று தேவர்களுக்கு ஒரு நாளாம். தேவர்களுக்கு உத்தராயணம் பகலும், தக்ஷிணாயனம் இராத்திரியுமாயிருக்கும். மனுஷ வருஷம் முந்நூற்றறுபது கொண்டது தேவர்களுக்கு ஒரு வருஷமாம். தேவவருஷம் பன்னீராயிரங் கொண்டது ஒரு சதுர்யுகமாம்.

| யுகம். | | தேவவருஷம். | மனுஷவருஷம். |
|---|---|---|---|
| கிருதயுகம் | — | ௪௲௮௱ | ௰௭ லக்ஷத்து ௨௮௲ |
| திரேதாயுகம் | — | ௩௲௬௱ | ௰௨ லக்ஷத்து ௯௬௲ |
| துவாபரயுகம் | — | ௨௲௪௱ | ௮ லக்ஷத்து ௬௪௲ |
| கலியுகம் | — | ௲௨௱ | ௪ லக்ஷத்து ௩௨௲ |
| சதுர்யுகம் | — | ௰௨௲ | ௪௩ லக்ஷத்து ௨௰௲ |

இப்படிச் சதுர்யுகம் ஆயிரந் திரும்பினால், பிரமாவுக்கு ஒரு பகலாகும்; பின்னும் ஆயிரந் திரும்பினால், பிரமாவுக்கு ஓரிராத்திரியாகும்; ஆகவே இரண்டாயிரஞ் சதுர்யுகங்கொண்டது



பிரமாவுக்கு ஒருநாளெனப்படும். இந்தநாள் முப்பது கொண்டது ஒருமாசம். இந்தமாசம் பன்னிரண்டு கொண்டது ஒருவருஷம். இந்த வருஷம் நூறானால், பிரமாவுக்கு ஆயுசுமுடியும். இவ்வியல்புடைய பிரமாக்கள் எண்ணில்லாதவர்கள் பிறந்திறந்தார்கள். பிரமாவினுடைய ஆயுசு பரமெனப் பெயர் பெறும். அதிற் பாதியாகிய ஐம்பது வருஷம் பரார்த்தமென்று சொல்லப்படும்.

---

பிரமாவினுடைய பகலாகிய ஆயிரஞ் சதுர்யுகத்திலே பதினான்கு மனுக்கள் அதிகாரம் பண்ணுவார்கள். அவர்கள்பெயர் சுவாயம்புவர், சுவாரோசிஷர், ஔத்தமர், தாமசர், ரைவதர், சாக்ஷுஷர், வைவஸ்வதர், சூரியசாவர்ணி, தக்ஷசாவர்ணி, பிரமசாவர்ணி, தருமசாவர்ணி, ருத்திரசாவர்ணி, ரோச்சியர், பாவியர் என்பவைகளாம். ஒவ்வொரு மனுவந்தரத்துக்கு எழுபத்தொரு சதுர்யுகமாகும். எழுபத்தொரு சதுர்யுகம், தேவமானத்தினாலே எட்டுலக்ஷத்தைம்பத்தீராயிரம் வருஷங்களாம்; மனுஷியமானத்தினாலே முப்பதுகோடியே அறுபத்தேழு லக்ஷத் திருபதினாயிரம் வருஷங்களாம். ஒருமனுவந்தரத்துக்கு எழுபத்தொரு சதுர்யுகமாகப் பதினான்கு மனுவந்தரத்துக்கும் தொளாயிரத்துத் தொண்ணூற்றுநான்கு சதுர்யுகமாகும். பிரமாவின் பகலிலே மிஞ்சியசதுர்யுகம் ஆறு.

இப்படிப் பதினான்கு மனுவந்தரங்களானால், பிரமாவுக்கு ஒருபகலாகும். இதன் முடிவிலே

தினப்பிரளயம் உண்டாகும். அப்பொழுது பிரமா அப்பகலளவினதாகிய இராத்திரியிலே யோகநித்திரை செய்வர். இப்படி ஆயிரஞ்சதுர் யுகவளவையுடைய இராத்திரி கடந்தபின்பு பிரமாத்திரும்பியும் படைத்தற்றொழில்செய்வர். பிரமாவுக்கு ஒருபகல் ஒருகற்பமெனப்படும். கற்பமாவது சிருட்டிமுதற் பிரளயமிறுதியாகிய காலம்; ஒருகற்பத்துக்கு மனுஷவருஷம் நானூற்று முப்பத்திரண்டுகோடி.

பிரமாவினுடைய ஒருபகலிலே பதினான்கிந்திரர்கள் இறப்பர்கள். ஒருமாசத்திலே நானூற்றிருபதிந்திரர்கள் இறப்பர்கள். ஒரு வருஷத்திலே ஐயாயிரத்து நாற்பதிந்திரர்கள் இறப்பர்கள். பிரமாவுடைய ஆயுசுள்ளே ஐந்துலக்ஷத்து நாற்பதினாயிரம் இந்திரர்கள் இறப்பர்கள்.

தற்காலத்தில் இருக்கின்ற பிரமாவுக்கு முதற்பரார்த்தமாகிய ஐம்பதுவயசுஞ்சென்றன. இப்போதுநடப்பது இரண்டாம்பரார்த்தத்தில் முதல்வருஷத்து முதன்மாசத்திலே முதற்றினம். இது சுவேதவராககற்பமெனப்படும். பிரளயசலத்தில் மூழ்கியிருந்த பூமியை விஷ்ணு வெள்ளைப்பன்றி யுருவங்கொண்டு மேலே எடுத்தகற்பமாதலிற் சுவேதவராக கற்பமெனப்பட்டது. இத்தினத்திலே சுவாயம்புவமநு, சுவாரோசிஷமநு, ஔத்தமமநு, தாமசமநு, ரைவதமநு, சாக்ஷுஷமநு என்னும் ஆறுமநுக்கள் இறந்துபோனார்கள். இப்போது



ஏழாமநுவாகிய வைவஸ்வத மநுவினுடைய காலம்நடக்கிறது. இவருடைய காலத்திலே இருபத்தேழு சதுர்யுகங்கள் சென்றன. இப்பொழுது இருபத்தெட்டாஞ் சதுர்யுகத்துக் கலியுகம் நடக்கின்றது.

மாசம் சௌரமாசமும், சாந்திரமாசமுமென இருவகைப்படும். சூரியன் ஒரு ராசியை அநுபவிக்குங்காலம் சௌரமாசம். ஒரு அமாவாசை கழித்த பிரதமைமுதல் மற்றொரு அமாவாசைவரையும் உள்ள முப்பது திதிகொண்டகாலம் சாந்திரமாசம். சூரியன் பன்னிரண்டு ராசிகளையுஞ் சுற்றிவருங்காலம் சௌரமான வருஷம். அது ஏறக்குறைய முந்நூற்றறுபத்தைந்து தினங்கொண்டது. சந்திரனுடைய சஞ்சாரத்தினால் உண்டாகிய பன்னிரண்டு அமாவாசை கொண்டகாலம் சாந்திரமான வருஷம். நான்குவருஷத்துக்கு ஒருதரம் சாந்திரவருஷத்திலே பதின்மூன்று அமாவாசை வரும். அதில் அதிகமாகிய ஒருமாசத்தை அதிகமாசமென்று வழங்குவர். சூரியன் மேடராசியிற் பிரவேசிக்குந் தினமே சௌரவருஷப் பிறப்பு. சூரியன் மீனராசியிற் பிரவேசித்த மாசமாகிய பங்குனிமாசத்துச் சுக்கிலபக்ஷத்துப் பிரதமையே சாந்திர வருஷப்பிறப்பு.

வேதம் ௪.

இருக்கு
யசுர்
சாமம்
அதர்வம்

வேதாங்கம் ௬.

சிக்ஷை சந்தசு சோதிடம்
வியாகரணம் நிருத்தம் கற்பம்

உபாங்கம் ௪.

மீமாஞ்சை புராணம்
நியாயம் மிருதி

மீமாஞ்சை ௨.

பூருவமீமாஞ்சை உத்தரமீமாஞ்சை

நியாயம் ௨.

கௌதமசூத்திரம் கணாதசூத்திரம்

புராணம் ௧௮.

பிரமபுராணம் பிரமகைவர்த்தபுராணம்
பதுமபுராணம் இலிங்கபுராணம்
வைணவபுராணம் வராகபுராணம்
சைவபுராணம் காந்தபுராணம்
பாகவதபுராணம் வாமனபுராணம்
பவிடியபுராணம் கூர்மபுராணம்
நாரதீயபுராணம் மற்சபுராணம்
மார்க்கண்டேயபுராணம் காருடபுராணம்
ஆக்கினேயபுராணம் பிரமாண்டபுராணம்

மிருதி ௧௮.

மனுஸ்மிருதி அங்கிரஸ்மிருதி
பிரகஸ்பதிஸ்மிருதி யாஞ்ஞுவல்கியஸ்மிருதி
தக்ஷஸ்மிருதி பிரசேதஸ்மிருதி
யமஸ்மிருதி சாதாதபஸ்மிருதி
கௌதமஸ்மிருதி பராசரஸ்மிருதி



சம்வர்த்தஸ்மிருதி அத்திரிஸ்மிருதி
உசனஸ்மிருதி விஷ்ணுஸ்மிருதி
சங்கஸ்மிருதி ஆபத்தம்பஸ்மிருதி
லிகிதஸ்மிருதி ஹாரிதஸ்மிருதி

இதிகாசம் ௩.

சிவரகசியம் இராமாயணம் பாரதம்

சைவாகமம் ௨௮.

காமிகம் வீரம்
யோகஜம் ரௌரவம்
சிந்தியம் மகுடம்
காரணம் விமலம்
அசிதம் சந்திரஞானம்
தீப்தம் முகவிம்பம்
சூக்குமம் புரோற்கீதம்
சகச்சிரம் லளிதம்
அஞ்சுமான் சித்தம்
சுப்பிரபேதம் சந்தானம்
விசயம் சர்வோக்தம்
நிச்சுவாசம் பாரமேசுரம்
சுவாயம்புவம் கிரணம்
ஆக்னேயம் வாதுளம்

வைஷ்ணவாகமம் ௨.

பாஞ்சராத்திரம் வைகானசம்

மேலுலகம் ௭.

பூலோகம் சனலோகம்
புவர்லோகம் தபோலோகம்
சுவர்லோகம் சத்தியலோகம்
மகர்லோகம்

கீழுலகம் ௭.

| | |
|---|---|
| அதலம் | ரசாதலம் |
| விதலம் | மகாதலம் |
| சுதலம் | பாதாளம் |
| தலாதலம் | |

துவீபம் ௭.

| | |
|---|---|
| ஜம்பூத்துவீபம் | கிரௌஞ்சத்துவீபம் |
| பிலக்ஷத்துவீபம் | சாகத்துவீபம் |
| சான்மலித்துவீபம் | புஷ்கரத்துவீபம் |
| குசத்துவீபம் | |

சமுத்திரம் ௭.

| | |
|---|---|
| லவணசமுத்திரம் | லவணம் - உப்பு |
| இக்ஷுசமுத்திரம் | இக்ஷு - கருப்பஞ்சாறு |
| சுராசமுத்திரம் | சுரா - கள்ளு |
| சர்ப்பிசமுத்திரம் | சர்ப்பி - நெய் |
| ததிசமுத்திரம் | ததி - தயிர் |
| க்ஷீரசமுத்திரம் | க்ஷீரம் - பால் |
| சுத்தோதகசமுத்திரம் | சுத்தோதகம் - நல்ல நீர் |

வருஷம் ௯.

| | |
|---|---|
| பாரதவருஷம் | இரண்மயவருஷம் |
| கிம்புருஷவருஷம் | குருவருஷம் |
| ஹரிவருஷம் | பத்திராசுவவருஷம் |
| இளாவிருதவருஷம் | கேதுமாலவருஷம் |
| இரமியகவருஷம் | |



முத்திநகரம் ௭.

| | |
|---|---|
| அயோத்தி | காஞ்சி |
| மதுரை | அவந்தி |
| மாயை | துவாரகை |
| காசி | |

பாடைநிலம் ௧௮.

| | |
|---|---|
| திராவிடம் | கொல்லம் |
| சிங்களம் | தெலுங்கம் |
| சோனகம் | கலிங்கம் |
| சாவகம் | வங்கம் |
| சீனம் | கங்கம் |
| துளுவம் | மகதம் |
| குடகம் | கடாரம் |
| கொங்கணம் | கௌடம் |
| கன்னடம் | குசலம் |

குறியீடு.

| | | |
|---|---|---|
| உறுப்பிசைக்குறி | , | வினாவிசைக்குறி |
| தொடரிசைக்குறி | ; | மெய்ப்பாட்டிசைக்குறி |
| விளக்கிசைக்குறி | : | இயைபிலிசைக்குறி |
| முடிப்பிசைக்குறி | . | அநுவாதக்குறி “ |

, இக்குறியுள்ளவிடத்தே ஒருமாத்திரை நிறுத்து.
; இக்குறியுள்ளவிடத்தே இரண்டுமாத்திரை நிறுத்து.
: இக்குறியுள்ளவிடத்தே மூன்றுமாத்திரை நிறுத்து.
. இக்குறியுள்ளவிடத்தே நான்குமாத்திரை நிறுத்து.

---

# * தமிழ்ப்புலமை.

க. தமிழ் கற்கப் புகுஞ் சைவசமயிகள் முன்னர்ப் பாலபாடங்களைப் படித்துக்கொண்டு, இலக்கணச் சுருக்கத்தைக் கற்றறிந்து, இயன்ற அளவு பிழையில்லாமல் எழுதவும் பேசவும் பழகுக.

உ. நிகண்டு கற்று, அதனுள் அடங்கிய சொற்களையும் அவைகளின் பொருள்களையும் அறிந்துகொள்க.

ங. திருவள்ளுவர் குறள், நாலடியார் முதலாகிய நீதிநூல்களைப் பதப்பொருளுடனே கற்றறிந்துகொள்க.

ச. சமயதீக்ஷை பெற்றுக்கொண்டு, சைவர்களுக்கு இன்றியமையாச் சிறப்பினவாகிய, தேவாரம், திருவாசகம், திருவிசைப்பா, திருப்பல்லாண்டு என்னும் அருட்பாக்களைப் பண்ணுடன் ஓதவும், சுத்தாங்கமாக ஓதவும் பழகிக்கொள்க.

ரு. பெரியபுராணம், திருவிளையாடற்புராணம், திருவாதவூரடிகள் புராணம், கந்தபுராணம், உபதேசகாண்டம், கோயிற்புராணம், காசிகாண்டம், கூர்மபுராணம், சேதுபுராணம், காஞ்சிப்புராணம், திருத்தணிகைப்புராணம்,

* இப்பாடம் ஸ்ரீ ஆறுமுகநாவலரவர்கள் பிரபந்தத்திரட்டு முதல் பாகத்திலிருந்து எடுத்து இப்பதிப்பிற் புதிதாகச் சேர்க்கப்பட்டது.



பதினொராந் திருமுறையிற் பிரபந்தங்கள், குமரகுருபரசுவாமிகள் அருளிச்செய்த பிரபந்தங்கள் முதலாகிய இலக்கியங்களை ஆராய்ந்தறிக.

சு. நன்னூல் விருத்தியுரை, அகப்பொருள் விளக்கவுரை, புறப்பொருள் வெண்பாமாலையுரை, காரிகையுரை, வெண்பாப்பாட்டியலுரை, தண்டியலங்காரவுரை என்னுமிலக்கணங்களைக் கற்றறிந்து, தாம் கற்ற இலக்கியங்களில் இவ்விலக்கணவிதிகளை அமைத்துப் பழகுக.

எ. இன்னும், காலம் உளதாயின், தொல்காப்பியம் இளம்பூரணருரை, சேனாவரையருரை, நச்சினார்க்கினியருரை, பிரயோகவிவேகவுரை, இலக்கணக்கொத்துரை, தொல்காப்பியச்சூத்திரவிருத்தி, இறையனாரகப்பொருளுரை என்னுமிலக்கணங்களையுங் கற்றறிக.

அ. பூகோளநூல், ககோளநூல், அங்ககணிதம், வீசகணிதம், க்ஷேத்திரகணிதம் என்னும் நூல்களைக் கற்றறிக.

கூ. தருக்கநூல்களைக் கற்றறிந்து, எடுத்த விடயத்தை நியாயம் வழுவாமல் எழுதவும் பேசவும் பழகுக.

௰. திருவள்ளுவர் குறள் பரிமேலழகருரை, திருச்சிற்றம்பலக்கோவையார் நச்சினார்க்கினியருரை, கல்லாடம் நச்சினார்க்கினியருரை என்பனவற்றைக் கற்று, இடைவிடாது பலகாலும் உளங்கொளப் பயிலுக.

௰க. விசேஷதீக்ஷை பெற்றுக்கொண்டு, சைவசமயநெறியுரை, சிவதருமோத்தரவுரை,

பரமத திமிரபானு, சதுர்வேத தாற்பரிய சங்கிரகம் முதலாகிய சமயநூல்களைக் கற்றறிக.

௰௨. கல்விக்குப் பயன் அறிவும், அறிவுக்குப் பயன் ஒழுக்கமுமாம். ஆதலால் தம் வாழ்நாள் முழுவதும் சிவநிந்தை, குரு நிந்தை, சிவனடியார் நிந்தை, வேதாகம நிந்தை, சிவத்திரவியங்கவர்தல், கொலை, களவு, புலாலுணல், கள்ளருந்தல், பிறர்மனை விழைதல், வரைவின் மகளிர்விழைதல், பொய், அழுக்காறு, புறங்கூறல், செய்ந்நன்றி மறத்தல் முதலாகிய பாவங்களை ஒழித்து, சிவத்தியானம், சந்தியாவந்தனம், பஞ்சாக்ஷரசெபம், சிவபூசை, தமிழ்வேத பாராயணம், சிவாலயசேவை, மாகேசுரபூசை, தீக்ஷாகுரு வித்தியாகுரு தந்தை தாய் தமையன் முதலிய பெரியோர்களை வழிபடுதல், இரக்கம், பொறை அடக்கம் முதலாகிய புண்ணியங்களையுடையராய் ஒழுகுக.

௰௩. இருமையின்பத்துக்கும் துணைக்காரணமாகிய பொருளை, பிறவுயிர்களுக்குச் சிறிதாயினுங் கேடு பயவாத நல்வழியாலே, ஈட்டுக.

௰௪. நித்திய கருமத்துக்கும் பொருளீட்டுதலுக்கும் உரிய காலம் அல்லாத மற்றக்காலமெல்லாம், சிறிதும் வீண்படாமல், புண்ணிய நூல்களை ஆராய்தலினும், நன்மாணாக்கர்களுக்குக் கல்வி கற்பித்தலினும், பலருக்குப் பயன்படும் நூல்களையேனும் உரைகளையேனும் செய்தலினும் போக்குக.

௰௫. இவ்வாறே கல்வியறிவொழுக்கங்களிற் சிறந்து விளங்கும் பரிபக்குவர்கள், சற்குருவை



அடைந்து, நிருவாண தீக்ஷை பெற்றுக்கொண்டு ஞானசாத்திரங்களாகிய (௧) திருவுந்தியார், (௨) திருக்களிற்றுப்படியார், (௩) சிவஞானபோதம், (௪) சிவஞானசித்தியார், (௫) இருபாவிருபது, (௬) உண்மைவிளக்கம், (௭) சிவப்பிரகாசம், (௮) திருவருட்பயன், (௯) வினாவெண்பா, (௰) போற்றிப்பஃறொடை, (௰௧) கொடிக்கவி, (௰௨) நெஞ்சுவிடுதூது, (௰௩) உண்மைநெறிவிளக்கம், (௰௪) சங்கற்பநிராகரணம் என்னும் சைவசித்தாந்த நூல்களை உரையுடனே விதிப்படி சிரத்தையோடுங்கற்றறிந்துகொண்டு, இச்சாத்திரங்களின் அநுபவப் பயனும் உள்ள தோத்திரவடிவமாகிய மேற் கூறப்பட்ட தேவாரம் திருவாசகம், திருக்கோவையார், திருவிசைப்பா, திருப்பல்லாண்டு என்னும் அருட்பாக்களின் உண்மைப் பொருளைச் சிவனது திருவருள் காட்டக்கண்டு, நின்றாலும், இருந்தாலும், கிடந்தாலும், நடந்தாலும், நெஞ்சநெக்குருக, கண்ணீர்வார மெய்ம்மயிர் சிலிர்ப்ப, சிறிதும் மறவாது அச்சிவனது திருவடிக்கீழ்த் தூங்கும் உண்மைநிலையைப் பெற்று வாழ்க.

"கற்க கசடறக் கற்பவை கற்றபின்
நிற்க வதற்குத் தக"

"கற்றதனா லாய பயனென்கொல் வாலறிவன்
நற்றா டொழாஅ ரெனின்"

"நின்று மிருந்துங் கிடந்து நடந்துநினை
என்றுஞ் சிவன்றா ளிணை"

ஸ்ரீ வைஷ்ணவசமயிகள் மேற்கூறப்பட்ட வற்றுள் சமயநூல்களொழித்து ஒழிந்தனவற்றையும் தங்கள் சமயசித்தாந்தங்களையும் கற்றறிந்து அவைகளின் விதிப்படி ஒழுகுக.

தமிழ் கற்றவர்களை நடுவுநிலைமையின் வழுவாது பரீக்ஷைசெய்து, அதில் வல்லவர்களென நன்கு மதிக்கப்பட்டவர்களுக்கு அவரவர் தகுதிக்கேற்ற பெயரும் சின்னமும் கொடுக்கும் சபையார் இக்காலத்தில் இல்லாமையால், தமிழ்க்கல்வியில் வல்லவர்களும் வல்லவர்களல்லாதவர்களும் ஒப்ப மதிக்கப்படுகிறார்கள். அதனால், நமது தேசத்தாருக்குத் தமிழ்க்கல்வியில் விருப்பமும் முயற்சியும் சிறிதாயினும் இலவாயின. பண்டுதொட்டுக் கல்வியிற் சிறப்புற்று விளங்கும் மகிமை பொருந்திய மடாதிபதிகள் பெருங்கருணை கூர்ந்து, காலந்தோறும் தமிழ்கற்றவர்களுள் தங்கள் சந்நிதானத்துக்கு விண்ணப்பஞ் செய்துகொண்டவர்களைப் பரீக்ஷைசெய்து, வல்லவர்களென நன்குமதிக்கப்பட்டவர்களுக்கு அவரவர் தகுதிக்கேற்ற பெயரும் சின்னமுங் கொடுத்தருளுவார்களாயின், எம்மொழியினும் இனிய நமது தமிழ்மொழி மிக வளர்ந்தோங்குமே. ஏழைசொல் அம்பலத்துக்கேறுமா. ஐயையோ இதற்கு யாது செய்யலாம்!

ரௌத்திரிஞு
ஐப்பசிமீ }

---

# நான்காம் பாலபாடம்.

## குறிப்புரையும் அப்பியாச வினாக்களும்.

### 1. கடவுள்.

#### குறிப்புரை.

(1) சித்து, அசித்து, சடம்: இவை வடசொற்கள்; ஜடம் என்பது சடம் எனத் திரிந்தது. சித்துப் பொருள்கள்: உயிர்கள். அசித்துப் பொருள்கள்: தனு கரண புவன போகங்கள். தனு - உடல். கரணம் - மனமும் ஐம்பொறிகளும் முதலாயின. புவனம் - ஆதாரமாகிய மண்ணுலகம் முதலாயின. போகம் - அனுபவப் பொருள்கள். முதலாம் பந்தியின் இறுதி வாக்கியங்களின் கருத்து: 'கடவுள் ஒருவர் இருக்கின்றார் என்பது கண் முதலிய புறவிந்திரியங்களால் அறியப்படாவிட்டாலும், அனுமானப் பிரமாணத்தால் நிச்சயிக்கப்படும்' என்றபடி.

(2) இயற்கையறிவு - செயற்கையாலன்றித் தாமாகவே அறியும் அறிவு. தம்வயம் - சுதந்திரம், தம்மிச்சைப்படி நடக்குந்தன்மை. பிறர்வயம் - பரதந்திரம், பிறர் எண்ணப்படி நடக்குந்தன்மை. சகல லோகம் - எல்லா வுலகம். ஆன்மாக்கள் - உயிர்கள்; ஆத்மா என்னும் வடசொல் ஆன்மா எனத் திரிந்தது. கைம்மாறு - பதிலுதவி; கை - செயல்; மாறு - பதில்; பதிலான செயல்.

என்றபடி. திரு + அருள் = திருவருள்: கருணை என்பது பொருள். திருமேனி:—திரு - கடவுளுடைய உருவம் உறுப்பு முதலியவற்றிற்கும் அவரோடு தொடர்புடைய கோயில் குளம் முதலிய பிற பொருள்களுக்கும் உயர்வைக் குறித்து வழங்கும் அடைமொழி; திருவுருவம் (விக்கிரகம்), திருவடி, திருக்கோயில், திருக்குளம் என்பவற்றிற் போல. மேனி - உருவம், சரீரம். இப்பந்தியில் உடன்பாடும் எதிர் மறையுமா யமைந்த இணைவாக்கியங்களுட் பின்னவை முன்னவற்றை இனிது விளக்குதற் பொருட்டு (ஸ்பஷ்டார்த் தம்) வந்தவை என்றறிக.

(3) முதல் + நூல் = முதனூல்; முதலிற் செய்யப்பட்ட நூல், ஒன்றன் வழித்தாகச் செய்யப்படாத நூல். அருளிச் செய்தார் - இயற்றினார், உபதேசித்தார், சொன்னார்; (ஈண்டு உயர்வுபற்றி ஒரு வினையை மற்றொரு வினையின் வாசகத் தாற் கூறிய இலக்கணச் சொல்) விதிக்கப்பட்டவை - செய்யத்தக்கன என்று கூறப்பட்டவை, விலக்கப்பட்டவை - செய்யத் தகாதவை என்று கூறப்பட்டவை. வன்கண்ணர் - இரக்கமில்லாதவர்; (வன்கண்மை: பகுதி) - சத்திரமிட்டு அறுத்தல் - கட்டி முதலிய நோய்களுக்குக் கத்தி முதலிய கருவி கொண்டு கீறி வைத்தியஞ் செய்தல். அண்டவாதம், வலி முதலிய நோய்களுக்கு இருப்புக் கோல் காய்ச்சிச் சூடு போடுவதுண்டு. கண்ணிற் படலம் - கருவிழியின் மேற் படர்ந்திருக்கும் ஒருவகைச் சவ்வு. உரித்தல் - கருவிகளால் வெட்டி நீக்குதல். உய்வித்தல் - நன்மை யடைவித்தல், மேல் நிலையை அடைவித்தல். ஏது - காரணம்; ஹேது என்னும் வட சொல்லின் திரிவு. இப்பந்தியின் இறுதிப் பகுதியில் வந்துள்ள 'உவமையணி' அறிந்து மகிழ்தற் குரியது.



## வினாக்கள்.

(1) கடவுள் ஒருவர் உளர் என்பது எவ்வாறு நிச்சயிக்கப்படும்?

(2) கடவுளின் இயல்புகளைக் கூறுக.

(3) கடவுள் பாவிகளுக்குத் துன்பத்தைக் கொடுத்தலினால், அருளில்லாதவர் என்று கொள்ளற்கு அது ஏதுவாகாதோ? உமது விடையை நியாயத்துடன் கூறுக.

## இலக்கணம்.

(1) இப்பாடத்தில் வந்த வடசொற்களை எழுதுக.

(2) பிரித்தெழுதுக:—கைம்மாறில்லாத, திருவருள், முதனூல்கள், இருப்புக்கோல், பாவஞ்செய்த, ஏதுவாதலினால், இயற்கையறிவு, குறித்ததன்று.

(3) அவர், ஒருவர், இல்லை, ஒன்று, அன்று, கொடுப்பார், சுடுதல், வன்கண்மை:—இவற்றிற்குச் சொல்லிலக்கணங் கூறுக.

---

# 2. ஆன்மா.

## குறிப்புரை.

(1) சேதனம் - அறிவுடைய பொருள். பாசத்தடை - ஆணவம் முதலிய மலங்களாகிய தடை; அவை கடவுளை அறிதற்கும், மோட்ச இன்பத்தை அடைதற்கும் தடையாமென்றறிக. ஒரு தலைவன் என்றது முழுமுதற் கடவுளை.

(2) ஈடாக - இருவினையின் அளவுக்குத் தக்க பயனாக. தோற்றம் - உடல் கொண்டு தோன்றும் (பிறக்கும்) விதம்;

உருக்கொண்டு ஜனிக்கும் விதம். யோனி பேதம் - (உடலின் உருவ அமைப்புத் தோற்றத்தின் பாகுபாடுகளாகிய) பிறவியின் பேதங்கள். நூறாயிரம் - இலக்ஷம். உழலும் - சுழன்று திரியும், மாறிமாறி வரும்.

(3) அண்டசம் முதலியவை அண்டஜம், ஸ்வேதஜம், உத்பித்ஜம், ஸராயுஜம் என்ற வட சொற்களின் திரிவு; அண்டஜம்: அண்டம் - முட்டையிலிருந்து; ஜம் - பிறப்பது. ஸ்வேதஜம்: ஸ்வேதம் - வேர்வையிலிருந்து; ஜம்—, உத்பித்ஜம்: உத் + பித் + ஜம் = (வித்து முதலியவற்றை) மேலிடத்தில் + பிளந்து கொண்டு + பிறப்பது. சராயுஜம்: சராயு - கருப்பையிலிருந்து; ஜம்—; தாவரம் - ஓரேயிடத்தில் நிலையாய் நிற்பவை, சஞ்சரியாதவை; ஸ்தாவரம் என்னும் வட சொல்லின் திரிவு.

(4) கிருமி - அணுப் பரிமாண ரூபமுடைய ஜந்து. கீடம் - புழு. நிலையியற் பொருள் - (இடம் விட்டுப் பெயராது) நிற்றலை இயல்பாகவுடைய பொருள். அசரம் - (அ + சரம்) சஞ்சரியாதது; (அ: இன்மை அல்லது மறுதலைப் பொருளில் வரும் வடமொழி யிடைச்சொல்; சரம் - சஞ்சரிப்பது). இயங்கியற்பொருள் - இயங்குகின்ற இயல்பினையுடைய பொருள்.

(6) இரதம் - சுவை. கந்தம் - மணம், நாற்றம். சித்தத்தாலறியும் அறிவு - அநுமானித்துச் சிந்தனைசக்தியால் உணரும் உணர்வு.

(7) சுவர்க்கம் - தேவருலகம். நரகம் - நரகர் வாழும் உலகம். எஞ்சிநின்ற - மிச்சமாயுள்ள. ஒருநிலைமை - ஓரிடத்தில் நிற்குந்தன்மை, ஓரே நிலையான தன்மை. கொள்ளி வட்டம் - வட்டமாகச் சுழற்றப்படும் நெருப்புக்



கொள்ளி. ஆஞ்ஞை - கட்டளை, உத்தரவு. கருமம் - நல்வினை தீவினைகள்.

(8) அருமை - எளிதல்லாதது. மிலேச்ச தேசம் - மிலேச்சர் வாழும் பிரதேசம் (இடம்); மிலேச்சர் - வேத சிவாகமங்களிலே கூறப்பட்டுள்ள முறைகளுக்கு மாறாக நடப்பவர்; அவர்கள் ஒருங்கு சேர்ந்து வாழும் பிரதேசம் மிலேச்ச தேசம்.

(9) உயிர்க்கு உயிராகிய - சீவான்மாக்களுக்கெல்லாம் உயிர் போன்றவராகிய; சீவான்மாக்களின் அறிவு இச்சை தொழில்களை இயக்குகின்றவர் என்றபடி. வாக்கு - மொழி. காயம் - சரீரம். வழிபட்டு - மனத்தால் தியானித்து, வாக்கால் துதித்து, காயத்தினாற் பூசை நமஸ்காரம் முதலியவற்றைச் செய்து என்றபடி. முத்தியின்பம் - மோக்ஷ இன்பம். பாலாவத்தை - (பால + அவத்தை) பால்யப் பருவம்; இது கௌமாரப் பருவம் எனவும்படும்; தருணாவத்தை - (தருண + அவத்தை) யௌவனப் பருவம். விருத்தாவத்தை - (விருத்த + அவத்தை) முதுமைப் பருவம். உண்மையாமே - உண்மையாகுமே. யாது வருமோ - என்ன நிலைமை சம்பவிக்குமோ, இன்பம் வருமோ துன்பம் வருமோ என்றபடி. நிலையாமை - நிலைத்திராத தன்மை, அழியுந்தன்மை. பெருங்கருணைக் கடல் - கடல்போல் மிகுந்த அருள் நிறைந்தவர்.

## வினாக்கள்.

(1) ஆன்மாக்களின் இலக்கணங்களைச் சுருக்கிக் கூறுக.

(2) நால்வகைத் தோற்றங்கள் எவை? ஒவ்வொன்றையும் பற்றி விளங்க விவரிக்க.

(3) எழுவகைப் பிறப்புக்கள் யாவை?

(4) ஆன்மாக்கள் தம் சரீரத்திற்கு ஏற்ப அறியும் அறிவின் வகையினாலே எத்தனை வகைப்படும்? அவை எவை? அவற்றை விளங்க விவரித்துக் கூறுக.

(5) ஆன்மாக்கள் இருவினைப் பயன்களை எங்கெங்கே பிறந்து அனுபவிக்கும்?

(6) பாலாவத்தை முதலிய மூன்றையும் விளக்குக.

(7) ஏழாம் பந்தியில் வந்த உவமான உவமேயங்களைப் பொதுத் தன்மையோடு எடுத்து இணைத்துக்காட்டி விளக்குக.

(8) இப்பாடத்தை மூன்றிலொரு பங்காகச் சுருக்கி எழுதுக.

## இலக்கணம்.

(1) பிரித்தெழுதுக:—

வெவ்வேறு, சிற்றறிவு, பிறந்திறந்துழலும், ஐம்பொறி, ஓரறிவுயிர், நல்வினை, தீவினை, வேதாகமங்கள், ஐயறிவு, தருணாவத்தை.

(2) பகுபத உறுப்புக்களைப் பிரித்து விளக்குக. பறவை, ஊர்வன, அழிவது, தெரியாது, நிலையாமை, அழிவு.

(3) முதலிரண்டு பந்தியிலும் வந்த இடைச் சொற்களை எடுத்தெழுதி வகையும் பொருளும் தோன்ற விளக்குக.

---



# 3. கடவுள் வழிபாடு.

## குறிப்புரை.

(1) மெய்யடியார் - உண்மையான சிவனடியார். திருவேடம் - விபூதி, உருத்திராக்ஷம் முதலிய சிவசின்னங்களணிந்த வடிவம். அகத்திலே - உடம்பினுள்ளே.

(4) உண்மையை - இயல்பாக உள்ள பெருங்கருணைச் செயல்களை. திவலை - நீர்த்துளி. ஆனந்த அருவி - ஆனந்தக் கண்ணீர். (அருவி உவமை யாகுபெயர்.) கூசாது - வெட்கப் படாமல்.

(5) வாய்மை - உண்மை பேசல். அடக்கம் - மன மொழி மெய்கள் தீயவழியிற் செல்லாது அடங்குதல்.

(6) முற்றறிவு - எல்லாவற்றையும் அறியும் அறிவு. முற்றுத்தொழில் - எல்லாவற்றையும் செய்யும் வல்லமை. திருவருள் வசப்பட்டு ஒழுகல் - அநுக்கிரகத்தின் துணையை வேண்டி (தற்போதமின்றி) நடத்தல். அருள் செய்வார் - இரங்கி நன்மை செய்வார்.

## வினாக்கள்.

(1) கடவுளுக்குச் செய்யும் வழிபாடுகளாவன யாவை?

(2) கடவுளிடத்தே அன்புடைமைக்கு அடையாளங்கள் எவை?

(3) கடவுளால் விரும்பப்படுபவை யாவை? வெறுக்கப் படுபவை யாவை?

(4) ஆன்மாக்கள் கடவுளருளைப் பெறுதற்கு எவ்வாறு ஒழுகுதல் வேண்டும்?

## இலக்கணம்.

(1) புறம், வழிபாடு, நன்றி, கோயில், நா, ஆன்மாக்கள், உடம்பு, பொழுது, கைகள், அன்பு, கொடை, கடவுள்:—இவை அறுவகைப் பெயருள் யாவை என்று கூறுக.

(2) தாய், தந்தை, தான், தாம், எல்லாம், நாம், உடம்பு, உயிர், ஒருவர்:—பொதுப் பெயருள் இவை எவ்வகையைச் சேர்ந்தன எனத் தனித்தனி விளக்கி எழுதுக.

(3) இப்பாடத்தில் வந்த தெரிநிலை வினைமுற்று குறிப்பு வினைமுற்றுக்களை எடுத்துக்காட்டி, அவற்றிற்குத் திணைபாலிடங்காலம் விதிமறைகள் தோன்றச் சொல்லிலக்கணங் கூறுக.

---

## 4. ஈசுரத்துரோகம்.

### குறிப்புரை.

ஈசுரத்துரோகம் - கடவுளுக்குச் செய்யும் குற்றம்.

(1) நிந்தித்தல் - இகழ்தல். அதிபாதகங்கள் - மிகுந்த பாவங்கள். அதி: மிகுதிப்பொருளைக்குறிக்கும் வடமொழி இடைச்சொல். தானம் - இடம். 'ஸ்தானம்' என்னும் வடசொல்லின் திரிபு.

(2) நியமங்கள் - ஒழுங்குகள், நியதிகள். சௌசம் - மலசலங்கழித்தபின் செய்யும் சுத்தி. 'கால்கழுவல்' என இடக்கரடக்கலாக வழங்கப்படுவது. தந்தசுத்தி - பல்விளக்கல். அசுசி - (அ + சுசி) அசுத்தம்; (சுசி - சுத்தம்)



(3) தண்டம் - தண்டனை. பிராயச்சித்தம் - பாவ பரிகாரம்; பாவத்தை நீக்குதற்கு விதித்த விரத நியமம், சாந்தி முதலாயின. இந்தப் பந்தியில் 'உயர்ச்சி வேற்றுமை' என்னும் அணி அமைந்துள்ளமை காண்க.

(4) தாமிரம் - செம்பு. மயிர்க்காறோறும் - (கால் + தோறும்) உடம்பிலுள்ள மயிர்த்துவாரந்தோறும்; (கால் + அடியிடம், வேர்.) இருப்பாப்புக்கள் - இரும்பு முளைகள்; (இரும்பு + ஆப்பு: நிலைமொழி மென்றொடர்க் குற்றியலுகரம் வன்றொடராய்த் திரிந்தது.)

(5) வலி - குடலைப்பற்றியவலி, காக்கைவலி நோய் போல்வன. குட்டம் - தேகத்தில் சொறி, தடிப்பு, கட்டி முதலியவை உண்டாகி இரத்தம், சீழ் முதலிய வடியும் ஒருவகைத் தொற்றுநோய். கயம் - கசம், க்ஷயம்; இது சுவாசப்பையில் இரணமுண்டாகி இருமல், காய்ச்சல் காணப்படும் நோய். நீரிழிவு - சலரோகம்; மிகுதியான சலப்போக்குடன் உடம்பிலுள்ள சர்க்கரைச் சத்தும் கழிந்துபோகும் நோய்; இது நாளடைவில் தேகத்தை மெலிவித்து அபாயத்தை விளைவிப்பது. பெருவியாதி - முதிர்ந்த குட்டநோய் வகையில் ஒன்று; இது கைவிரல் கால்விரல்களில் இரணமுண்டாகி அழுகி விரல்கள் இற்று விழும் தன்மையது; தொழுநோய், குறைநோய் (அவயவத்தைக் குறைக்கும் நோய்) எனவும்படும். மூலவியாதி - மலக்குடலின் அந்தத்திலுள்ள அபானத்தில் முளையுண்டாகி வேதனையைத்தரும் நோய்.

### வினாக்கள்.

(1) ஈசுரத்துரோகமாகிய அதிபாதகச் செயல்கள் எவை?

(2) மடாலயமாவது யாது?

(3) எவ்வெவ்வகையினால் இராசத்துரோகத்துக்கும் ஈசுரத்துரோகத்துக்கும் ஒப்புமை காட்டப்பட்டது? எவ்வகையில் வேற்றுமை காட்டப்பட்டது?

## இலக்கணம்.

(1) 3-ம் பந்தியில் வந்த செயப்பாட்டு வினைவாக்கியங்களைச் செய்வினை வாக்கியங்களாக மாற்றி அமைக்க.

(2) பிரித்துக் காட்டுக:—தேவாலயம், மடாலயம், மயிர்க்காறேறும், இருப்பாப்புக்கள், செப்புக்கடாரம், அவயவங்கடோறும், சந்திரசூரியர், அச்சி.

(3) பின்வரும் தன்வினைப்பதங்களைப் பிறவினைப் பதங்களாக மாற்றுக:—உணர்தல், ஓதல், புகுதல், தப்புதல், அறைந்து, வருந்துவார்கள், கொடுத்தல்.

(4) பின்வரும் பிறவினைப் பதங்களைத் தன்வினையாக மாற்றுக:—கழித்தல், உருக்கிய, காய்ச்சிய, விழுத்தி, அழுத்துவார்கள்.

---

# 5. அருள்.

## குறிப்புரை.

(1) நோக்காது - கருதாமல், (நோக்குதல் - ஈண்டு மனத்தால் நோக்குதல்.) பழி - நிந்தைமொழி. பாவம் - மறுமைத்துன்பத்தை விளைவிக்கும் தீவினை. தகழி - அகல் போல்வன. தவம் - பிறவுயிர்க்குத் துன்பஞ்செய்யாதிருத்தலும், மனம் பொறி வழி போகாது நிற்றற்பொருட்டு உணவைச்சுருக்கலும், தியானம், செபம், பூசை முதலியவற்றாற் கடவுளை வழிபடுதலும் முதலான விரத நியமங்கள்.



அஞ்ஞானம் - அறியாமை, (வடசொல்.) ஓட்டெடுப்ப - ஓட்டமெடுக்க, ஓட; ('ஓட்டம்' என்பது 'ஓட்டு' எனக் கடைக்குறை விகாரம் பெற்றது.) பதி - கடவுள். மெய்ப்பொருள் - சத்துப்பொருள், உள்பொருள். மரணபரியந்தம் - சாகும்வரையில். இதம் - நன்மை; (ஹிதம் என்னும் வடசொல்லின் திரிவு.) 'வாய்மையாகிய..............வெளிப்படும்' என்னுந் தொடரில் உருவக அணி அமைந்துள்ளது.

(2) நாடகமாத்திரையே-நடிப்பு மாத்திரமே, போலிச்செய்கை என்றபடி. தெள்ளிதின் - தெளிவாக. துணியப்படும் - நிச்சயிக்கப்படும். உறுதி - உறத்தக்க (பெறத்தக்க) நன்மைகள். வஞ்சகர் - வஞ்சனை செய்பவர், கபடர்.

## வினாக்கள்.

(1) அருளுக்கும் அன்புக்கும் உள்ள பேதத்தை விளக்குக.

(2) அருளின் சிறப்பையும் பயனையும் எடுத்துக் கூறுக.

(3) 'கடவுளிடத்து மெய்யன்புடையவர் எல்லாவுயிர்களிடத்தும் மெய்யன்புடையவராய் ஒழுகுதல் வேண்டும்' ஏன்? என்பதை விளக்குக.

(4) இப்பாடத்திற் போலிச்செயல் என்று கூறப்பட்டது யாது? விளக்கிக்கூறுக.

## இலக்கணம்.

(1) 1-ம் பந்தியிற் கூறிய உருவக அணிவாக்கியத்தை உவமை யணிவாக்கியமாக மாற்றியமைக்க.

(2) எதிர்ப்பதங்கள் தருக:—இதம், பாதுகாப்பவன், அருள், வாய்மை, பழி, பாவம், இருள், காரணம், மரணம்.

(3) புணர்த்திக்கூறுக:—மெய் + அன்பு; உலகம் + இன்பம்; எல்லாம் + உயிர்கள்; தொடர்பு + உடையவை; இதம் + செய்பவன்; அன்பு + இல்லாத; தம் + உயிர்; எ + நாள்.

---

## 6. கொலை.

### குறிப்புரை.

(1) அகிதம் - நன்மையல்லாதன, இன்பகரமல்லாத கருமங்கள்; (அஹிதம் என்னும் வடசொல்லின் திரிவு; அ + ஹிதம்.) தலை - தலைமையானது, முதன்மையானது.

(2) கொலையில்லாத - கொலையோடு தொடர்பில்லாத, கொலையால் வருதலில்லாத. இப்பந்தியின் முதல் நான்கு சிறுதொடர்களிற் பயனிலையாக உள்ள 'ஞானம்' முதலிய வற்றிற்குச் 'சிறந்த ஞானம்' என்பதுபோலப் பொருள் கொள்க. சோர்வு - மறதி, அவதானக் குறைவு. சாவதான மாக - அவதானத்துடன் கூட; (ஸ + அவதானம்=ஸாவ தானம் என்னும் வட சொல்லது திரிவு.)

(3) காசம் - சுவாச நரம்பில் வீக்கம் முதலியவற்றோடு சுவாச முட்டும் இளைப்பும் தொய்வும் காணப்படும் நோய். சூளை - காசத்துக்குச் சொல்லப்பட்ட குணங்குறிகளுடன், தொனியோடு சுவாச இழுப்புக் கண்டு விரைவில் தேக மெலிவை உண்டாக்கும் நோய். நெருப்புச்சுரம் - நெருப்புக் காய்ச்சல்; இது குடலை அவியச்செய்யுங் காரணத்தால், தமிழ் வைத்தியர் இதனை அவியற்சுரமென்பர். கைப்பிளவை - உள்ளங்கையில் உண்டாகும் பெருங்கட்டிகள். உழல்வார் கள் - உலைந்து திரிவார்கள்.



(4) பீடை - துன்பம். வலிய விட்டவர் - கயிற்றி னாற் கழுத்திற் சுருக்கிட்டுத் தூங்குதல், கிணறு முதலிய வற்றுள் வீழ்தல் போன்ற வலாற்காரமான செயலால் தம்முயிரைத் தாமே மாய்த்துக்கொண்டவர். கும்பிபாகம் - ஒருவகை நரகம். சக்கரவாளகிரி - சக்கரவாளமலை.

### வினாக்கள்.

(1) 'பாவங்கள் எல்லாவற்றுள்ளுங் கொலை தலைமை யானது' ஏன்? கொல்லாமை புண்ணியங்களெல்லாவற்றுள் ளும் தலைமையானது ஏன்? விளங்கக் கூறுக.

(2) கொலைப்பாவம் எய்தற்குரியார் யார் யார்?

(3) 'தற்கொலை பிறவுயிர்க்கு அகிதம் செய்வதன்று ஆதலின் அது பாவமாகாது' இது சரியோ? பிழையோ? நியாயத்துடன் விளக்கிக் கூறுக.

### இலக்கணம்.

(1) இப்பாடத்தில் வந்த வட சொற்களை எடுத்து எழுதுக.

(2) 1-ம் பந்தியில் 2-ம் வாக்கிய முதலாக உள்ள மூன்று தொடர்வாக்கியங்களையும் ஆறு தனிவாக்கியங்க ளாகப் பிரித்து எழுதுக.

(3) பின்வருவன என்ன தொகை நிலைத் தொடர்? தனித்தனி அவற்றை விரித்துங் காட்டுக:—இதஞ்செய்தல், கொலைப்பாவம், நரகத்துன்பம், கொடும்பாவம், கைப் பிளவை, நெருப்புச்சுரம், பழிபாவங்கள், செய்ந்நன்றி, இருட்பூமி.

(4) விதிகாட்டிப் புணர்த்தி எழுதுக:—(i) இதம் + செய்தல். (ii) ச + அவதானம் (iii) கொலை + இல்லாத.

(iv) இராசா + உடைய. (v) எண் + இல்லாத. (vi) எ + வகைப்பட்ட.

---

## 7. புலாலுண்ணல்.

### குறிப்புரை.

(1) வாயிலாக - வழியாக. தொடர்பு - சம்பந்தம். நடிப்பு - வெளிப்பகட்டுச் செயல்.

(2) பானீயம் - பருகத்தக்க நீர் முதலியன. கோழை - சளி.

(3) குடாரி - கோடரி, (கோடாலி.)

(4) கண்டமாலை - கழுத்தைச் சூழ மாலை வடிவாக இரண முண்டாகும் ஒருவகை நோய்.

(6) அதிதிகள் - விருந்தினர்; அஃதாவது வேற்றூரினின்றும் வழிப் போக்கராய் அன்னம் முதலிய உதவி பெறும்பொருட்டு வருபவர். அலகிடல் - துடைப்பத்தாற் பெருக்குதல்.

### வினாக்கள்.

(1) புலாலுண்ணல் ஏன் பாவச் செயலாகும்? விளங்கக் கூறுக.

(2) புலாலுண்ணல் யுக்திக்கும் நன்றாகாத இழிந்த செயலாம் என்பதைச் சுருக்கி விளக்குக.

(3) தாவரங்களைக் கொன்று புசித்தல் பாவமாகாதோ? பாவமாயின் அப்பாவம் சாராமைக்கு ஏற்ற உபாயம் யாது?



### இலக்கணம்.

(1) 2-ம் பந்தியிலுள்ள வாக்கியங்களெல்லாவற்றையும் "நேர்க்கூற்று" (Direct Speech) வாக்கியங்களாக மாற்றி எழுதுக.

(2) 3-ம் பந்தியின் இறுதியிலுள்ள 'புலாலுண்ணுமையினாலே............கடவர்கள்" என்னுங் கலப்பு வாக்கியத்தைப் (Complex Sentence) பிரித்து எழுவாய் பயனிலை செயப்படுபொருள் அடைமொழிகளிவை எனக் குறிக்க.

(3) "அப்பாவிகளை..............வார்ப்பார்கள்" என்ற மூன்று செய்வினை வாக்கியங்களையும் செயப்பாட்டுவினை வாக்கியங்களாக மாற்றி எழுதுக.

(4) இப்பாடத்தை அரைப்பங்காகச் சுருக்கி எழுதுக.

---

## 8. கள்ளுண்ணல்.

### குறிப்புரை.

(1) களிப்பு - வெறி.

(3) சேதித்து - வெட்டி.

(4) வாம மதம் - 'சடமும் சித்துமாகிய எல்லாம் சத்தியின் பரிணமமே. வாமநூலில் விதித்த முறையே ஒழுகிச் சத்தியில் இலயித்தலே முத்தி' என்ற கொள்கையுடைய சமயம்; அசுத்த சாக்த மதம். பிசாசபதம் - பேயாகப் பிறந்து பசியால் துன்பமுறும் பதவி.

### வினாக்கள்.

(1) கள் முதலியவற்றை உண்ணல் ஏன் பாவச் செயலாகும்? விளங்கவுரைக்க.

(2) 'கள்ளுண்பவர் கற்றோராயினும் அறிவீனர்' ஏன்? என்பதை விளக்குக.

(3) கள்ளுண்பவரோடு ஒத்த பாவிகள் யார் யார்?

### இலக்கணம்.

(1) மயக்கும், இழந்து, தொடர்ந்த, அழிய, அஞ்சி, பொறுக்கும், பொருத, செய்யினும்:—இவை எவ்வகையான எச்ச வினை என்று ஒவ்வொன்றையும் பற்றிக் காலம் முதலியன தோன்ற உரைக்க.

(2) செய்து கொள்வது, அழியும், வசப்படாமை, உண்டவர், உண்ணாதவர், அறியார், அடைவர், அநேகர், களிக்கின்றார்கள், பொறுக்கமாட்டாள். இவை எவ்வகையைச் சேர்ந்த சொற்கள் என்று சிறப்பு வகையால் எடுத்துரைக்க.

(3) 2-ம் பந்தியில் வரும் உம்மை யிடைச் சொற்களின் பொருள்களை விளக்கிக் கூறுக.

---

## 9. களவு.

### குறிப்புரை.

(3) கடிதல் - நீக்குதல். துன்பக்கடல் - கடல்போன்ற மிகுந்த துன்பம். அற்பக் களவு - சிறிய களவு.

### வினாக்கள்.

(1) களவினால் வரும் பொருள் என்ன செய்யும்?

(2) களவு செய்பவர் எதனையுடையவராவர்? எப்படி? விளக்குக.

(3) களவு செய்தலால் அடையும் பயன்களை விவரிக்க.



### இலக்கணம்.

(1) 2-ம் பந்தியிலுள்ள செய்வினை வாக்கியத்தைச் செயப்பாட்டு வினை வாக்கியமாகவும், செயப்பாட்டு வினை வாக்கியத்தைச் செய்வினை வாக்கியமாகவும் மாற்றி அமைக்க.

(2) இப்பாடத்தில் வந்த அடுக்குத் தொடர்களைக் கூறுக. அவைபோல் வேறு இரண்டு அடுக்குத்தொடர் எடுத்துக் கூறி அவற்றை வாக்கியத்தமைக்க.

(3) 1-ம் பந்தியில் வந்த ஏகார ஓகார உம்மை இடைச் சொற்களைத் தனித்தனி எடுத்துக்கூறி அவற்றின் பொருளையும் விளக்குக.

---

## 10. வியபிசாரம்.

### குறிப்புரை.

(1) கன்னியர் - விவாகஞ்செய்யாத பெண்கள். பொதுப் பெண்கள் - வேசையர், தாசிப் பெண்கள்.

(2) ஆண்மை - வீரம். பரதாரசகோதரன் - பிறருடைய மனைவியரைத் தன் சகோதரமாக நினைத்து நடப்பவன்; (வடசொல்; பர - அந்நிய; தாரம் - மனைவி.)

(3) தூர்த்தர் - காமுகர். பிரதிமை - மண், கல், உலோகம் முதலியவற்றாற் செய்யப்பட்ட ஆண்பெண் வடிவங்கள். தீச்சிந்தை - தீய எண்ணம்.

(4) சந்ததி நாசம் - புத்திரோற்பத்தியின்மை, கருத்தரியாமை. இப்பந்தி முழுதும் சொற்பொருட் பின்வருநிலை என்னும் அணி அமைந்து உரைச் செய்யுளாகத் திகழ்

இன்றமை காண்க. வியபிசாரம் ஈண்டுக்கூறிய தீமைகளுள் ஒவ்வொன்றையேனும் சிலவற்றையேனும் பலவற்றையேனும் தன்னையுடையார்க்கு விளைத்தலின் இவ்வாறு பிரித்துக் கூறினர்.

(5) பிரமேகம் - மர்மஸ்தானத்துள்ளே இரணமுண்டாகி ஒருவகை வெண்ணீரொழுகும் நோய். கிரந்தி - தேகத்தில் துர்நீர் கட்டுப்பட்டு நின்று புடைத்தெழுந்து புண்ணுண்டாகும் நோய். பகந்தரம் - உயிர்நிலைகளாகிய மர்மஸ்தானங்களில் பெருங்கட்டிகள் உண்டாகி உடைந்து புண்ணாகும் நோய். கல்லடைப்பு - மூத்திரத்திலுள்ள உப்பு இறுகிக் கல்லின் தன்மையடைந்து சலங்கழியாமல் தடைப்படுவதால் வரும் வேதனை நோய். நேத்திர ரோகம் - கண்ணில் உண்டாகும் (பலவகை) நோய்.

### வினாக்கள்.

(1) பிறன் மனையாளை விரும்புவோரை அடைவன யாவை? அடையாதன யாவை?

(2) பிறன்மனையாளை விரும்பாமையினாலும் விரும்புதலாலும் முறையே உண்டாகும் நன்மை தீமைகளைத் தனித்தனி விவரித்துரைக்க.

(3) பிறன்மனையாளை விரும்புதலாகிய குற்றம் தன்னிடத்து உண்டாகாமல் தடுத்தற்குரிய உபாயம் யாது?

(4) வியபிசாரத்துக்கு ஏதுக்களாயுள்ளவை யாவை?

(5) வியபிசாரம் எவ்வெவற்றிற்குக் காரணமானது?

### இலக்கணம்.

(1) 4-ம் பந்தியிலுள்ள தனிவாக்கியம் பலவற்றையும் ஓரே பயனிலை கொண்ட வாக்கியமாக மாற்றி அமைக்க.



(2) 3-ம் பந்தியில் 'உயிர்க்கு உறுதி பயக்கும் நூல்களை' என்பது தொடக்கமுள்ள பல வாக்கியங்களையும் கருத்துச் சிதையாமல் ஏற்ற வழியால் ஓரே முற்றுவினை கொண்ட வாக்கியமாக மாற்றி அமைக்க.

(3) பிரித்துக்காட்டுக:—மற்றைப்பெண்கள், பேராண்மை, தாமாத்திரம், தங்கீழ், சிற்றின்பம், தருமவழி, இருட்கிணறு, கல்லடைப்பு, ஏதுவாகும், களவுகளுக்கெல்லாம்.

---

## 11. பொய்.

### குறிப்புரை.

(2) அறிந்திலர் என்று பொய் சொல்லாதிருக்க - அறியவில்லையே என்று கருதிப் பொய் சொல்லுதலைச் செய்யாதிருக்க; 'என்று' என்ற வினையெச்சம் 'சொல்லாதிருக்க' என்னும் எதிர்மறை வினையுட் சொல்லுதல் என்னும் பகுதியோடு முடிந்தது. சுடும் - வருத்தும்.

(3) இகத்திலே - இவ்வுலகத்திலே.

(4) பொய்ச்சான்று - பொய்ச்சாக்ஷி. வழுவி - தவறி. பிரமவதை - பிராமணரைக் கொல்லுங்கொலை. சிசுவதை - குழந்தையைக் கொல்லுதல். (வதை - கொலை.)

### வினாக்கள்.

(1) 'சத்தியத்தின் மிக்க தருமமும், அசத்தியத்தின் மிக்க பாவமுமில்லை':—ஏன்? எவ்வாறு? என்று விளக்கிக் கூறுக.

(2) மெய் சொல்லுவதனால் வரும் இம்மைப்பயன்கள் எவையெவை?

(3) 'பொய்யன் அடாப்பழியையும் அதனால் வருங் கேட்டையும் அடைவன்' என்பர். எவ்வாறு என்று விவரமாக விளக்குக. அடாப்பழி யெய்தும் விஷயத்தில் இதுபோன்ற வேறு பாவம் யாது? விளக்குக.

### இலக்கணம்.

(1) முதற் பந்தியில் எத்தனை வாக்கியங்கள் உள்ளன? உபவாக்கியம் யாது? எல்லாவற்றிற்கும் எழுவாய் பயனிலை செயப்படுபொருளைக் கூறுக.

(2) எதிர்ப்பதங்கள் தருக:—இகம், தருமம், மறுமை, கேடு, நன்குமதிப்பு, நடுவுநிலைமை, பகைவர், தவம்.

(3) மேற்காட்டிய பதங்களுள் முதலைந்து பதங்களும், அவற்றின் எதிர்ப்பதமும் ஒருங்கே அமைய ஒவ்வொன்றிற்கும் ஒவ்வொரு வாக்கியம் இயற்றுக.

---

## 12. அழுக்காறு.

### குறிப்புரை.

அழுக்காறு: 'அழுக்கறு' என்னும் பகுதியடியாகப் பிறந்த சொல்; அழுக்கறு - பொறாமைப்படு.

(1) பதர் - அரிசியாகிய உள்ளீடு அற்ற நெல்; சப்பட்டை எனவும் வழங்கும்.

(2) அமைவு - நிறைவு, திருப்தி, அமைதி, மன ஆறுதல். தூர்க்குணம் - தீயகுணம். கருவி - ஆயுதம். ஸ்ரீதேவி - இலக்குமி; செல்வம் என்பது தாற்பரியப் பொருள்.



### வினாக்கள்.

(1) 'பொறாமையுடையவன் தன்னுடைய துன்பத்துக்குத் தானே காரணனாகின்றான்':—இது எப்படி என்பதை விளக்குக.

(2) பொறாமையுடையவனுக்கு எப்போதும் எவை இல்லையாகும்?

(3) பொறாமையாற் கேடுற்றவர் யாரேனும் ஒருவருடைய வரலாற்றைச் சுருக்கி எழுதுக.

### இலக்கணம்.

(1) 'வேண்டும்': இதற்குச் சொல்லிலக்கணங் கூறுக?

(2) இதுபோன்ற வேறு சொற்கள் யாவை? அவை அமைந்த ஒவ்வொரு வாக்கியம் எழுதுக.

(3) 'புகுவள்':—இது எவ்வகையான வினைமுற்றென்று கூறுக. இதன் பகுதியிலிருந்து தோன்றும் ஏனைக் கால வினை முற்றுக்களைக் கூறுக.

---

## 13. கோபம்.

### குறிப்புரை.

(2) யாவனொருவன் - எவனாவது ஒருவன். 'அதனைக் கடிப்பவர் இல்லை' என்பதன்பின் 'அது போல' என்று உவமானபதம் வருவித்துரைக்க. குடாரம் - கோடரி (கோடாலி)

(4) இருமை - இருபிறவி; என்றது இப்பிறவியும், மறுபிறவியுமாகிய இரண்டினை.

### வினாக்கள்.

(1) கோபங் காரணமாக நிகழுங்காரியபரம்பரையை விவரிக்க.

(2) ஒருவன் நம்மை இழிவாகச் சொல்லிய பொழுது நாம் எவ்வாறு சிந்தித்துப் பொறுத்தல் வேண்டும்?

(3) வலியார், மெலியார் ஒப்பார் ஆகிய மூவர்மேலும் தனக்கு உண்டாகும் கோபத்தை அடக்குதல், அடக்காமைகளால் வரும் நன்மை தீமைகளைத் தனித்தனியே விரித்து விளக்குக.

### இலக்கணம்.

(1) 'கெடும்':—இது என்ன வினைமுற்று என்பதை விரிவாக விளக்குக.

(2) 'இல்லை':—இது எவ்வகையான வினைமுற்று? விரிவாக இதனிலக்கணத்தைக்கூறி உதாரண வாக்கியங்களால் விளக்குக.

(3) 'உள்ளதே':—உள்ளது - இது என்ன சொல்? இதன் பகுதி யாது? இப்பகுதியிலிருந்து படர்க்கையிடத்து வினைப் பால்களிலும், வினையிடங்களிலும் பிறக்கும் இது போன்ற பகுபதங்களைத் தனித்தனி விவரமாகக் காட்டுக.

---

## 14. சூது.

### குறிப்புரை.

(1) கவறு - சூதாடுகருவி. (சொக்கட்டான், தாயம், முதலியன ஆடும் காய்கள்.) தளையாகி - கயிறு முதலியவற்றுற் கட்டப்பட்ட தடைபோன்று, மனத்தைக் கவர்ந்து பிணிப்பதாகி என்றபடி.



(2) ஒளி - தேக காந்தி, தேஜஸ், வசீகரமான தோற்றம். 'தூது, சகோதரம்' முதலியனவற்றுக்குத் 'தூதுபோன்றது, சகோதரம்போன்றது' என்றிங்ஙனம் கருத்தாகும்.

### வினாக்கள்.

(1) சூதினால் வென்று பெறும் பொருள் எப்படிப்பட்டது.

(2) 'சூதினை மூதேவி என்பர்';—ஏன்? எவ்வாறு? என விளக்குக.

(3) சூதாடுவோரை எவை அடையா?

(4) சூது எவ்வாறு இருமையினும் துன்பத்தை அடைவிப்பதாகும்?

### இலக்கணம்.

(1) பெற்று:—இது என்ன வகையான சொல் என்பதைப் பொதுவாக அன்றிச் சிறப்பு வகையால் விவரித்துரைக்க.

(2) இதனது பகுதியிலிருந்து தோன்றும் வினைக் காலச் சொற்களையும், எதிர்மறையில் முக்கால ரூபங்களையும் எடுத்துரைக்க.

(3) இட்ட:—இது என்ன வகையான சொல்? என்பதை விவரமாக எழுதி, வினைக்காலரூபங்களையும், எதிர்மறையில் வரும் ரூபத்தையும் எடுத்துரைக்க.

---

## 15. செய்ந்நன்றியறிதல்.

### குறிப்புரை.

(1) காலத்தினுற் செய்த உதவி - மரண ஆபத்து நேர்ந்த பொழுது செய்த உதவி (ஆல் உருபு 7ம் வேற்றுமைப் பொருட்கண் வந்த வேற்றுமை மயக்கம்.) பயன் தூக்காது - பயனை ஆராயாமல் (எதிர்பாராமல்.) இறுதி - மரணம், ஈண்டு மரணத்தை விளைவிக்கும் ஆபத்தை யுணர்த்தும்.

(3) வைரம் - விரோதம், நீடித்தபகை.

(4) மகாபாதகங்கள் - பெரிய பாவங்கள். உய்வு - பாவஞ் சூழாதபடி தப்பிக் கொள்ளல். மசூரிகை - வைசூரி. (அம்மைநோய்.)

### வினுக்கள்.

(1) காரணமின்றிச் செய்த உதவி முதலிய மூன்றையும் கூறி விளக்கி, அவற்றின் மேன்மையையுங் கூறுக.

(2) மேற்கூறிய மூன்றின் வேறுன உதவிக்கு வரும் பயனளவு யாது?

(3) எது மிக மேலாகிய தருமம்?

(4) நன்றி செய்தவர் விஷயத்தில் மேலோர் எவ்வாறு நடப்பர்? கீழோர் எவ்விதம் நடப்பர்?

(5) செய்ந்நன்றி மறத்தலாகிய பாவத்தை ஏனைய மகா பாதகங்களோடு ஒப்பிட்டுச் சீர்தூக்கி வன்மை, மென்மைகளை நியாயத்துடன் எழுதுக.

### இலக்கணம்.

(1) 'செய்த உதவி':—இதில் வந்த வினைச்சொல் எவ்வகையானது என்பதைக் குறிப்பிட்டு விளக்குக.



(2) இதன் பகுதியிலிருந்து ஏனைய காலங்களினும், எதிர்மறையினும் வரும் வினைருபங்களையும் எழுதிப் பெயர் குறிப்பிடுக.

(3) செய்ந்நன்றி, கைம்மாறு, ஒருவன்றனே, செய்யாமற்செய்த, அந்நன்றி:—பிரித்துக்காட்டி இவற்றில் வந்த புணர்ச்சி விகாரங்களை விதி கூறி விளக்குக.

---

## 16. பெரியோரைப்பேணல்.

### குறிப்புரை.

பேணல் - பாதுகாத்தல், வழிபடல், விரும்பி (அன்பு செய்து) நடத்தல்.

(1) பாட்டன்:—பிதாவின் தகப்பனும், மாதாவின் தகப்பனும். பாட்டி:—தகப்பனுடைய தாயும், தாயினுடைய தாயும். பாராட்டாது:—பொருட்படுத்தாமல்.

(2) கூச்சம் - கூசுதல், வெட்கம். பொருளாக:—மதிப்புடையவராக. வஞ்சித்து - வஞ்சனை செய்து; இதனை 'உணவுப் பந்தியில் வஞ்சனை செய்து படைத்தல்' என்புழிப் போலக் கொள்க.

(3) அருட்பாக்கள் - கடவுளின் திருவருளைப் பெற்றவர் அத்திருவருள் ஞானத்தாற் பாடிய பாடல்கள். அவை தேவாரம், திருவாசகம், திருவிசைப்பா, திருப்பல்லாண்டு, பெரியபுராணம் போன்ற நூற்பாடல்கள். உத்தரக்கிரியை - ஒருவரது மரணத்தின்பின் அவரைக் குறித்துச் செய்யுங் கருமங்கள்; அவை பிரேத தகனம், அந்தியேட்டி, சிராத்தம் போல்வன. உலோபம் இன்றி - குறையில்லாமல்; அர்த்தலோபம், மந்திரலோபம், கிரியாலோபம் முதலிய குறைகள்

உண்டாகாதபடி என்றவாறு. சிரத்தை - அன்பு. இறந்த திதி: பிரதமை, துவிதியை முதலிய பதினைந்தனுள் இறந்த தினத்துக்குரிய திதி. வருடந்தோறும் இறந்த திதியிற் செய்வது 'வருஷசிராத்தம்' எனவும், புரட்டாசி மாசத்துக் கிருஷ்ண பக்ஷத்திற் செய்வது 'மகாளய சிராத்தம்' எனவும் சொல்லப்படும். சீவந்தர்களாய் - சீவிப்பவர்களாய், உயிருடன் வாழ்பவராய். பேணாது - பாதுகாவாது. ஆவசியகம் - அவசியத்தன்மை வாய்ந்தது, கட்டாயஞ் செய்ய வேண்டியது. அவசியத்தோடு கூடியது. ஆவசியகம்: வடசொல்.)

(4) உறுக்கிய - அதட்டின. காரநீர் - கந்தகத்திராவகம், கறியுப்புத் திராவகம்போன்ற காரமுள்ள நீர்ப் பதார்த்தம்; இவை பட்டதேகம் வெந்து புண்கொள்ளும். உருக்கிய தாமிரநீர் - செம்பு என்ற உலோகத்தைக் கம்மியரின் உலைக்களத் தீயில் உருக்கித் திரவமாக்கிய நிலையுடையது. குடாரி - கோடரி எனவும், கோடாலி எனவும் வழங்கும் ஆயுதம். ஏறிட்டுப் பார்த்தவர் - மாறுபட்டு உற்றுப்பார்த்தவர்.

(5) வேதனம் - சம்பளம். காணிக்கை - தட்சிணை.

(6) சனனம் - பிறப்பு. சண்டாளர் - நீசர், புலையர், இழிதொழில் வாழ்க்கையர்.

(7) பந்துக்கள் - உறவினர். (பந்து: வடசொல்.) பரலோகம் - மேலுலகபதவி, புண்ணியலோகபதவி; பரம் - மேன்மை, லோகம் - உலகம்; உலக இன்பம்.

### வினாக்கள்.

(1) பிதா, மாதா முதலாயினோரை அவர்களின் சீவிய காலத்திற் பேணல் எப்படி? எஞ்சாமற் கூறுக.

(2) அவரது மரண காலத்தில் அவர்களைப் பேணும் முறையை விளங்கவுரைக்க.



(3) யார், யார், தரித்திரராய்ப் பசியால் வருந்தி இரந்து திரிவர்?

(4) பிதா, மாதாக்கள் இறந்த பின்பு செய்யவேண்டும் கடன்களை விவரிக்க.

(5) எவ்வெவ்வகையான தானங்கள் தருமமல்ல?

### இலக்கணம்.

(1) அன்னவஸ்திரம், பிதாமாதாக்கள், தந்தைதாய், தந்தை தாயர் இவை என்ன தொடர்? இவற்றினுடைய இறுதியின் வேறுபாடுகளைப்பற்றி என்ன அறிகிறீர்?

(2) அவர்கள், ஞானிகள், அருட்பாக்கள்:—இம் மூன்று பதங்களிலும் வந்த 'கள்' விகுதியின் தன்மைகளைக் கூறுக.

(3) ஆட்கொல்லி, மாமி, பாவி, பெண்டிர், உண்ணாதிர், உண்டனிர், ஒருவர், ஒருபாத்தியாயர், புதல்வர்:—இப்பதங்களில் வந்த விகுதிகளை எடுத்துக்காட்டி அவை என்ன என்ன பொருளில் வந்தன என்று விளக்குக.

---

## 17. பசுக்காத்தல்.

### குறிப்புரை.

(1) கபிலநிறம் - கருஞ்சிவப்புநிறம். சாலை - உறைவிடம்: ஈண்டுக் கொட்டகை (கொட்டில்) முதலாயின. தூபம் - புகை: வேப்பம்வித்து கடுகு முதலியவற்றை இட்டுப்புகைக்கும் புகை; இது நோய்க் கிருமிகள் அணுகாமல் அவற்றை அகற்றுந் தன்மையுடையது.

(2) இயக்குமிடத்து - செலுத்தும்போது. பலாசங்கோல் - பலாசமரத்தின் தடி. (பலாசு - புரசமரம்) சுவத்தி - ஸ்வஸ்தி என்னும் வடசொல்லின் திரிவு; 'மங்களம்' என்பது பொருள். தூபம் - புகை. இங்கே தசாங்கப்புகை, சாம்பிராணிப்புகை போன்ற நறுமணப்புகையைக் கொள்க. வனம் - காடு. இடர் - துன்பம். உருவண்ணம் - அடையாதபடி.

(3) ஆவுரிஞ்சுகல் - பசுக்கள் உடம்பை உரோஞ்சித் தினவு தீர்த்துக் கொள்ளுதற் பொருட்டு நடப்படும் கல். இடபம் - தன் வம்ச விருத்தியைச் செய்தற்குத் தகுதியுடைய இளங்காளை. எருது:—அங்ஙனமன்றி உழுதல், வண்டியிழுத்தல் முதலாகிய வேலைகளுக்குரியது. சகடம் - வண்டி.

(4) கோசலம் - பசுவின் மூத்திரம். கோமயம் - பசுச்சாணம். பஞ்சகவ்வியம்:—பசுவினிடத்துக் கிடைப்பனவாகிய ஐந்து பதார்த்தங்கள் என்பது இதன் வியுற்பத்திப் பொருள்.

### வினாக்கள்.

(1) பசுக்களை மேய்த்து வளர்க்கும் முறையை விவரிக்க.

(2) எவை பெரும் புண்ணியங்களாகும்?

(3) பஞ்சகவ்வியம் என்பது என்ன? அதன் உபயோகங்களை விளக்குக.

(4) பசுக்களின் வகையைக் கூறி விளக்குக.

(5) பசுவிடத்தே நாம் பால் கொள்ளவேண்டும் முறையை விளக்குக.



### இலக்கணம்.

(1) 'போ, போ, என்று இயக்கல் வேண்டும்', 'பதை பதைத்து மருந்து செய்வித்தல் வேண்டும்.' கீறிட்ட மொழிகளுக்கு இலக்கணக் குறிப்புக்களையும், இரண்டுக்கும் உள்ள பேதத்தையும் விளக்குக.

(3) ஆவுரிஞ்சுகல், மழைக்காலம், மலைச்சாரல், கடும்பசி, மலட்டுப்பசு, பெரும் புண்ணியம், தூபதீபம், புகைநிறம், வெவ்வேறாக, அந்தத்தானம்:—இவை என்ன தொடர்? இவற்றுள் தொகைநிலைத் தொடர்களை விரித்துக் காட்டுக.

---

## 18. தானம்.

### குறிப்புரை.

(1) சற்பாத்திரம் - நல்லறிவொழுக்கங்களுடையவர்.

(2) பதிசாத்திரம்-கடவுளால் அருளிச்செய்யப்பட்ட நூல்; அவை வேத சிவாகமங்கள். இனி கடவுளை அறிந்து உய்தற் கேதுவாகிய நூல்களாகிய சித்தாந்த சாத்திரங்கள் போல்வனவுங் கொள்ளலாம். தானபாத்திரம்:—தானப் பொருளைப் பெறுதற்குத் தகுதியுடையவர்.

(3) வேசை - பொதுமகளிர், பரத்தையர். தாசி - அடியவள். கன்னியர் - விவாகஞ் செய்யாத பெண்கள். இருதுமதி - பூப்படைந்த பெண், தூரஸ்திரி, மாதவிலக்கான பெண். பொய்ச்சான்று - பொய்ச்சாட்சி. மித்திரத்துரோகி - நண்பருக்குப் பாதகஞ் செய்தவன். புறங்கூறுவோன் - கண்டவிடத்தே இனியனாகப்பேசி, காணாத புற இடங்களிலே தூற்றித் திரிபவன். ஒப்பிப்போன் - பிறர்

ஒப்புக்கொள்ளும்படி (ஏற்றுக் கொள்ளத்தக்கதாக) செய்வோன். தேவபூசையை விற்றுத் திரவியந் தேடுதல் - தினமுஞ் செய்யும் ஆன்மார்த்த பூசைப் பலனைப் பிறருக்குத் தத்தம் பண்ணிப் பணஞ் சம்பாதித்தல். கற்றோணி - (கல் + தோணி) கல்லாலே செய்யப்பட்ட தோணி.

(4) ஓடிச்செல்லல் - (எதிர்கொண்டழைத்தற்கு) விரைந்து செல்லுதல். தேவரீர்:—தெய்வத்தன்மை யுள்ளவராகிய நீவிர் எனப் பொருள் தரும் சொல்; இது உயர்த்திப் பேசும்போது பெரியோரைக் குறித்து வழங்கும் முன்னிலைப் பெயர். எழுந்தருள - (என்னிடத்துக்கு) வந்தருள; [உயர்த்தற் பொருளில் வந்த இலக்கணை மொழி.] இன்றன்றோ - (இன்று + அன்றோ) — இன்றையதினமல்லவா; [அன்றோ: பலரறிந்த தேற்றப் பொருளில் வரும் இடைச் சொல்.] கிருகம் - வீடு.

(5) பரம - மேலாகிய. பிரார்த்தித்து - வேண்டுதல் செய்து, பணிவுடன் இரந்து நின்று. தாதா - கொடுப்பவன். பரகதி - புண்ணியலோக பதவி; (பர - மேலாகிய, கதி - பதவி, பிறப்பு); மோட்ச இன்பமுமாம். போசனார்த்தத்தை - (போசன + அர்த்தம்) உணவாகிய பிரயோசனத்தை.

(6) ஊதியம் - இலாபம். செட்டாம் - வியாபாரமாகும்.

(7) உறவு - அன்பு, ஆதரவு. கிருபை - அருள், இரக்கம். அதாதா (அ + தாதா) - தாதா அல்லாதவன், தாதாவுக்குரிய இலக்கண மில்லாதவன்.

(8) பானீயம்-பருகத்தக்க நீர் முதலானவை; [பானஞ் செய்தற்குத் தகுதியானது என்னுங் கருத்தமைந்த வடசொல்.] திருமந்திரச் செய்யுட் பொழிப்புரை:—கடவுளுக்கு ஒரு பத்திரம் இட்டு வழிபடல். (வறியவருட்பட்ட) எல்லாருக்குமியலும்; பசுவுக்கு ஒரு கவளம் புல் முதலிய உணவு ஈதல் எல்லாருக்கும் இயலும்; தாம் உண்ணும்போது (இரப்போர் அதிதி முதலான) பிறருக்கு ஒரு கைப்பிடி உணவு ஈதல் எல்லாருக்கும் இயல்வதாகும்; பிறருக்கு இன்சொற் சொல்லுதல் எல்லாருக்கும் இயல்வ தொன்றாகும். [தான், ஏ: அசை.]

[பசுமை + இலை = பச்சிலை = பத்திரம். ஒருவாயுறை - ஒரு கவள உணவு. ஒரு வாயுணவு. 'ஆகும்' என்னும் செய்யுமென்னும் வாய்பாட்டு வினைமுற்று இடையேயுள்ள உயிர் மெய் கெட்டு 'ஆம்' என நின்றது.] எ - று.

(9) அதிதி - விருந்தினன்; ஊருக்குப் புதியவனாகையால் 'விருந்தினன்' எனவும், ஒரு திதிக்கு (நாளுக்கு) மேலே ஓரூரில் தங்காதவன் ஆகையால் அதிதி (அ + திதி) எனவும் பெயர் பெற்றான்; இனி இக்காலத்தில் தம் வீட்டுக்கு வந்த உறவினரை 'விருந்தினர்' விருந்தாளிகள் என வழங்கும் வழக்கு முற்கால வழக்குக்கு மாறுபட்டது என வுணர்க. திருவள்ளுவரும் "தென்புலத்தார் தெய்வம் விருந்து ஒக்கல் தானென்றாங், கைம்புலத்தா றோம்பல் தலை" என்னுங் குறளில் சுற்றத்தாரை 'ஒக்கல்' எனவும், அதிதியை 'விருந்து' எனவும் வேறாகக் கூறியவாற்றானும் இவ்வுண்மை தெளிக. பரிமாறல்-உண்கலத்திற் படைத்தல். தாகதீர்த்தம் - தாகந்தீரப் பருகும் நீர். கைப்பிடித்த - விவாகஞ் செய்த.

(10) நிமித்தம் - காரணம். வழிப்போக்கன் - யாத்திரை செய்பவன், பிரயாணி.

## வினாக்கள்.

(1) தானமாவது யாது? ஈகையாவது யாது?

(2) சற்பாத்திரமாவார் யாவர்? அன்னதான முதலிய வற்றிற்குப் பாத்திரமாகக் கொள்ளத்தக்கார் யாவர்?

(3) யார், யார், அசற்பாத்திர மாவர்?

(4) தானஞ் செய்வோர் செயல்கள் ஏழையும் எழுதுக.

(5) பரம சற்பாத்திரம் யாவர்? அவருக்குத் தானஞ் செய்யும் முறையை விவரிக்க.

(6) தாதாவின் இலக்கணம் யாது?

(7) அதிதியாவான் யாவன்? எவரை அதிதி என்று கொள்ளலாகாது?

## இலக்கணம்.

(1) விருப்பமில்லான், வீட்டிலில்லான்:—கீறிட்ட பதங்களின் எதிர்ப்பதங்களைக் கூறுக. இவையிரண்டும் செயப்படுபொருள் குன்றிய வினை, குன்றாத வினையாகிய இரண்டனுள் எவ்வகையின்பாற்படும் என்பதை விளக்குக.

(2) ஆவர் - இதன் பகுதியாது? இப்பகுதியிலிருந்து பிறந்த மூவிட வினைமுற்றுக்களையும் எல்லாப்பாலினும், காலங்களிலும், எதிர்மறையிலும் வர எழுதுக.

(3) ஓதி:—மூவகை வினைச் சொல்லுள் இதுயாது? இவ்வினைச் சொல்லின் ஏனை வாய்பாட்டு (ஏனைக்கால) ரூபங்களையும், முக்கால எதிர்மறை ரூபங்களையும் எழுதி வசனத்திலமைக்க.

---



# 19. கல்வி.

## குறிப்புரை.

(1) தேடற்பாலன - சம்பாதிக்கப்படும் தன்மையன. உறுதிப்பொருள்கள் - அடையத்தக்க பொருள்கள்; புருஷார்த்தங்கள் எனவும்படும்; உறுதி: உறப்படுவது; உறுதல் - அடைதல், பெறுதல். வீடு - (பாசபந்தத்தின்) விடுகை, நீங்குகை; முக்தி, மோட்சம் என்பனவும் இப்பொருளே தரும் வடசொற்கள்.

(2) பங்காளிகள் - முதுசொமாயுள்ள தாயப் பொருளிற் பங்கு பெறும் உரிமையாளர்; அவர் சகோதரராய்த் 'தாயாதிகள்' எனவும், 'தாயத்தார்' எனவும்படுவர். சொற்சுவை, பொருட்சுவை:—மோனைத்தொடை, எதுகைத்தொடை, வழியெதுகை என்னும் பிராசம், மடக்கணி ஆகிய இவை மிகுந்து வருதலும், வழுவின்மை, செவிக்கினிமையாதல், பிரசித்தி முதலிய குணமமைந்த நன்மொழிகள் தொடுத்தலும், சொற்சுவைக்குக் காரணமாம்; உவமை, உருவகம், சிலேடை முதலிய பொருளணிகள் அமைந்த விசித்திரப் பேச்சுக்களும், உவகை, வீரம், நகை முதலிய மெய்ப்பாடுகளும், குறிப்புப் பொருள்களும் முதலாயின விரவி வருதல் பொருட்சுவைக்குக் காரணமாம். பூசை - உபசாரம், நன்குமதிப்பு, மரியாதை.

(3) உயர்குலம் - உயர்ந்தசாதி. முருக்கம்பூ உருவத்தால் அழகுடையதாய் இருப்பினும், நறுமணமில்லாதபடியால் மனிதரணிவதற்கும், கடவுட் பூசைக்கும் பயன்படாமற் சிறப்படையாதவாறுபோல, கல்வியில்லாதவரும் தமக்கும் பிறர்க்கும் பயன்படாரென்பது உவமையின்

கருத்து. அவமதியாது - அலட்சியம் பண்ணாமல், பொருட் படுத்தி (மேலானதாக நன்கு மதித்து) என்றபடி.

(4) சிறுபிராயம் - இளம்பருவம், சிறுவயசு. சமுசாரம் - குடும்பம்.

(5) நல்லாசிரியர்: "குலனருள் தெய்வங் கொள்கை மேன்மை" என்னும் நன்னூற் பாயிரச் சூத்திரத்திற் கூறப் பட்ட இலக்கணம் அமைந்த ஆசிரியர். துணிவு - நிச்சய உணர்வு. உற்றவிடத்து - துன்பம் எய்திய விடத்து.

(6) தேர்ச்சி - சித்தி, திறமை. சத்தி - வல்லமை, ஆற்றல். பயில்தல் - பயிற்சி செய்தல், அப்பியசித்தல். சோர்வு - தளர்ச்சி. கிரமமாக - ஒழுங்காக, தவறாமல். அதிசமர்த்தர் - மிக்க சாமர்த்தியமுடையவர். (அதி - மிகுதிப் பொருள்தரும் வடமொழி இடைச்சொல்) அதி பாதகன், அதிதீர்க்கம், அதிவிருஷ்டி முதலியவற்றிற் போல.) அமையாது - போதுமென்று விட்டுவிடாமல்.

(7) போற்றல் - மறவாமற் பாதுகாத்தல், மனனம் பண்ணல், நெட்டுருச் செய்தல். ஒருசாலைமாணாக்கர் - தன்னோடு கூடக்கற்கும் மாணவர். ஐயுற்ற - சந்தேகப்பட்ட. (ஐயுறு - பகுதி) உத்தரங் கொடுத்தல் - விடை கூறல்.

(8) விவேகிகள் - இயற்கையாகவே நுண்ணறிவுள்ளவர்கள். ஒன்றுந் தெரியாது - சிறிதும் விளங்காது. அமைவுடனே - ஆறுதலாக. கருதாது - கருகுதல் இல்லாமல்; (கருகுதல் - பொருள் வெளிப்படாமை, பொருள் மறைதல்.)

(9) கருத்து இறங்கும் - மனம்பதியும், மனஞ்செல்லும். சிந்தாமல் - சிதறாமல், ஒருமுகப்பட. நிமித்தம் - காரணம். மயங்கினால் - குழம்பினால், கலங்கினால்.



(10) உறுதியைப் போதித்தல் - பெறத்தக்க நன்மைகளை உபதேசித்தல். கடனாக - அவசியம் செய்யுங் கருமமாக.

(11) வித்தியாதானம் - கல்வியைக்கொடுக்கும் கொடை, கல்வி போதித்தல் என்றபடி. அப்பிறப்பினன்றி - கற்ற அந்தப் பிறப்பில் மாத்திரமல்லாமல். (நஞ்சு + மாமரம்) = நச்சுமாமரம் - விஷத்தன்மையுடைய மாமரம்.

## வினாக்கள்.

(1) கற்றற்குரிய நூல்கள் யாவை?

(2) கல்விச் செல்வத்தையும், பொருட் செல்வத்தையும் ஒப்பிட்டு அவற்றின் உயர்வு தாழ்வுகளைப் புலப்படுத்துக.

(3) கல்வியின் சிறப்பையும், அஃதில்லாமையின் இழிவையும் விவரிக்க.

(4) கல்விகற்கும் முறையை விளங்க உரைக்க.

(5) மாணாக்கருக்குரிய கடன்கள் எவை?

(6) கல்வியின் பயன்கள் யாவை?

(7) அன்னதானமோ வித்தியாதானமோ சிறந்தது? காரணத்துடன் விளங்கக் கூறுக.

## இலக்கணம்.

(1) சொற்சுவை, பொருட்சுவை, முருக்கம்பூ, உயர் குலம், கல்விப்பொருள், செல்வப்பொருள், தேசத்தின் மாத்திரம்:—பிரித்துக்காட்டிப் புணர்ச்சி விதி கூறுக.

(2) விவேகிகள், மந்தர்:—இப்பொருள்படும் பிற பதங்களையெல்லாம் தருக.

(3) செல்வப்பொருளினும், கல்விப்பொருளே சிறந்தது:—இத்தொடரில் வந்த வேற்றுமை யுருபு யாது? என்ன பொருளில் வந்தது? அது என்ன வேற்றுமை? அவ்வேற்றுமையின் ஏனை யுருபுகளையும் எழுதுக. அவ்வேற்றுமையின் ஏனைப்பொருள்களுக்கு உதாரண வசனங்காட்டி விளக்குக.

(4) இப்பாடத்தின் சாராம்சம் விடுபடாமல் நாலிலொரு பங்காகச் சுருக்கி எழுதுக.

---

## 20. செல்வம்.

### குறிப்புரை.

(1) இரத்தினம்:—முத்து, பவளம், வைரம், மாணிக்கம் முதலாயின. துணைக்காரணம் - உதவியானகருவி. 'முனிவரும்...........முடியும்'—துறந்தார் கருதுவதாகிய மறுமையின்பமும், அரசர் கருதுவதாகிய இம்மை இன்பமும் ஆகிய இவ்விரண்டும் பொருளொன்றினாலே எவருக்குங் கைகூடும். பொன் மறுமையின்பத்தைத் தருவதுதான் தருமத்துக்குத் துணைக்காரணமாயிருந்து என்றறிக. முன்னுவ - கருதுவன, பெற விரும்புவன. இருமை - இம்மை, மறுமையாகிய இரு பிறவி; அவற்றின் கண் எய்தும் இன்பங்கட்கு ஆகுபெயர். இங்கே குறிப்பிட்ட இருசெய்யுளும் 332—333-ம் கவிகளாகும்.

(2) கண்ணோட்டம் - தாட்சிணியம்.

(4) எல்லாநன்மையும் - கல்வி, அறிவு, ஒழுக்கம் முதலாகிய நன்மைகள்.

(5) வென்றி - வெற்றி.



(6) வேளாண்மை - பயிரிடுதல். இராசசேவை - அரசாங்க உத்தியோகம். சிற்பம் - பஞ்சகம்மியரின் தொழில்களாகிய தச்சுவேலை முதலாயின.

(7) பொய்ப்பத்திரம் பிறப்பித்தல்-பொய்யான மரணசாசனம், கிரயசாசனம் போல்வனவற்றை நிருமித்தல், பொய்ப் பத்திரம் (உறுதி) உண்டாக்கல். விசுவாசகாதம் - நம்பிக்கைத்துரோகம். பரிதானம் - கைக்கூலி, கைலஞ்சம். சுங்கம் - துறைமுகத்தீர்வைப் பணம் (ஏற்றுமதி, இறக்குமதிப் பொருள்வரி), ஆயப்பணம் போல்வன. வசை - நிந்தை. பிறவித்துன்பம் - தன்னைப்பற்றி வருவனவும், பிறவுயிரைப்பற்றி வருவனவும், தெய்வத்தை (ஊழ்வினையை)ப் பற்றி வருவனவுமாகிய மூவகைத் துன்பங்கள்; இவை ஆத்யான்மிகம், ஆதிபௌதிகம், ஆதிதைவிகம் எனவும் படும்.

(8) ஆஸ்தி - சேமிப்பு நிதி. திறமை - வல்லமை, சாமர்த்தியம்.

(10) சான்று - சாட்சிகள். பத்திரம் - எடெழுதிய சாசனமாகிய பத்திரம்; ஈட்டுறுதி, அடைவுச்சீட்டுப் போல்வன. அசைக்கப்படு பொருளாகிய ஈடுநகைகள், பாத்திரங்கள்போன்ற அடைவுப் பொருள்கள். அநியாய வட்டி - அதிகவட்டி, கடுமையான வட்டி.

(11) தாயம் - முதுசொம், முதியோர் சொத்து [ஸ்வம் என்னும் வடசொல் 'சொம்' எனத்திரிந்தது] வாணிகம் - வியாபாரம். சேவை - அரசாங்க உத்தியோகம், கடை முதலியவற்றில் கணக்குவேலை, எழுத்தாளர் வேலை முதலியன. யாசனம் - யாசித்தல். உடைமை - தேட்டம் எனவும்படும்.

(12) விக்கிரயஞ் செய்தல் - விற்றல். ஆண்மை - வீரம். மானம் - பெருமை. சுவதேசம் - தன்னுடைய தேசம். பலிக்காவிடில் - பயன்தராவிட்டால். இதர தேசங்கள் - பிற (அந்நிய) தேசங்கள். நாட்டுவேடர் - (பிறர்பொருளை வஞ்சித்துக் கவர்தலால்) வேடர்க்குச் சமானராய் நாட்டில் வசிப்போர்.

### வினாக்கள்.

(1) கல்விச் செல்வத்துக்கும், பொருட் செல்வம் கருவியாயுதவுவது என்பதை விவரித்து விளக்குக.

(2) கற்ற கல்வி விளக்கமுற்றுச் சிறப்புறுதற்கும் செல்வம் வேண்டுமென்பதை நிரூபிக்க.

(3) செல்வர்க்கு அச்செல்வத்தால் உண்டாகத்தக்கன யாவை?

(4) ஈட்டப்படுஞ் செல்வத்தைப் பகுத்துச் செலவிடும் முறையை விவரிக்க.

(5) தாயம், உடைமை, சீதனம்:—இவற்றை விளக்கி, இவை விஷயத்தில் ஒருவன் எவ்வாறு நடந்து கொள்ளல் முறையாகுமென்பதை யுரைக்க.

(6) எப்படிப்பட்ட சீவியம் அறிவு, ஆண்மை, மானங்களுக்கு ஒத்ததாகும்? அவற்றிற்கு ஒவ்வாத சீவியம் எது?

### இலக்கணம்.

(1) செல், முனி, நோக்கு, செல்வம், கொள், அடை, உழை:—இவையொவ்வொன்றும் பெயராகவும், வினையாகவு மமையத் தனித்தனி வாக்கிய மமைக்க.

(2) 4-ம் பந்தியிலுள்ள செய்வினை வாக்கியங்களைச் செயப்பாட்டு வினை வாக்கியங்களாக மாற்றி அமைக்க.



(3) முன்னுவ, அறியார், கற்றார், அவமதிப்பர், செய்கின்றார்கள், எய்தினார், கண்டார், கற்பித்தவர்:—இப்பகுபதங்களிற் காலங்காட்டும் இடைநிலைகளை எடுத்துக்காட்டி, அவை இன்னகாலங் காட்டின எனத் தனித்தனி குறிப்பிடுக.

(4) இப்பாடத்தின் சாராம்சம் விடுபடாமல் நாலி லொருபங்காகச் சுருக்கி எழுதுக.

---

## 21. தருமம்.

### குறிப்புரை.

(1) நாயகன் - எஜமானன். சேமித்து வைத்துக் கொள்ளல் - பாதுகாத்து வைத்துக்கொள்ளல். மீளா + அடிமைகள் - மீட்டுக்கொள்ள முடியாத அடியவர்கள். பிழைக்கும் பொருட்டு - உய்யும்படி, மேற்கதியடையும்படி. அருளிச்செய்த - ஈண்டுக் 'கொடுத்த' என்பது பொருள். உலோபம் - ஆசை.

(4) புத்திரபாக்கியம் - புத்திரப்பேறு, புதல்வராகிய செல்வம்.

(5) பெண்டிர் - மனைவியர். எஞ்சிய - மிச்சமான.

(6) பொதுப்பெண்கள் - பரத்தையர், விலைமாதர்.

(12) அன்னப்பால் - சோறுவடித்த கஞ்சி. வன்கண்ணர் - இரக்கமில்லாதவர். பூரி - ஒருவகைத் தட்சிணை: சற்பாத்திரமோ என்றும், அசற்பாத்திரமோ என்றும் பாராமல் எல்லாருக்கும் சம அளவாகக் கிடைக்கும்படி பொருளை ஈதல். இதிற் செலவாகும் பொருளின் மொத்தத் தொகை அதிகமாயிருத்தல்பற்றி இது இப்பெயர் பெற்றது.

யாமம் - சாமம், ஏழரை நாழிகை கொண்டகாலம் (3 - மணி நேரம்.) துர்வார்த்தைகள் - வைவு மொழிகள், ஏசுகின்ற சொற்கள்.

(13) ஒருபணம் - ஓர் அணு; இலங்கை நாணகம் ஆறு சதம். ஆழாக்கு - அரைக்காற்படி.

(14) புராதனுலயங்கள் - (புராதன + ஆலயங்கள்) பழையனவாகிய கோயில்கள். இலமாய் - அழிந்ததாய், சிதைந்ததாய். நூதனுலயம் - (நூதன + ஆலயம்) புதியதாகிய கோயில். நேர்ந்தபடி - இஷ்டப்படி.

(16) சரீரபுஷ்டி - சரீரபெலம். பணம் - தக்ஷிணயாகக் கொடுக்கும் காசு.

(17) அரையாப்பு - (அரை + ஆப்பு) இடுப்பின் முன் பாகத்தில் ஆப்பு இறுக்கின தன்மைபோலக் கட்டி உண்டாகி வேதனை செய்யும் நோய்.

(18) நியோகித்தல் - நியமித்தல், ஏற்படுத்தல். அதி பாதகிகள் - அதிகப் பாவங்களைச் செய்பவர்; (அதி - அதிகம், மிகுதி.) மகாபாதகிகள் - கொலைமுதலிய பெரும் பாவங்களைச் செய்பவர்; (மகா - பெரிய.)

(19) மகோற்சவம் - (மகா + உற்சவம்; குணசந்தியாகிய வடமொழிப் புணர்ச்சிபெற்ற தொடர்) பெரியவிழா, துவஜாரோகணம் முதல் தீர்த்தோற்சவம் இறுதியாக நடைபெறும் திருவிழா.

(20) முகில் + முழக்கம் - மேகத்தின் இடியோசை.

(21) சத்திரபதிகள் - சத்திர அதிபதிகள். நிலையிலே - நிற்றற்குரிய இடத்திலே, நிலைக்களத்திலே. புத்தி புத்தி - புத்திவந்தது புத்திவந்தது; (அடுக்குத்தொடர்.)



(22) தற்காலத்திலே - செய்கிற அக்காலத்திலே; ('தத் + காலம்' என்னும் வட மொழித் தொடரின் திரிவு. இத்தொடர் மொழி 'இக் காலத்திலே' என்னும் பொருளிலும் வழங்குகிறது; இப்பொருளுக்கு 'ஏதத்காலம்' என்னும் வட சொல்லின் திரிபு போலும்.)

(24) ௫. போதகர் - சமயபோதகர், சமயஅறிவைப் போதித்துப் பரப்புவோர்.

கூ. கருவிநூல்கள் - அறம் முதலிய நால்வகைப் பொருளைப்பற்றிய நூல்களை அறிதற்குக் கருவியாகிய நூல்கள். அவை:—நிகண்டு, இலக்கணம், தருக்கம், கணிதம் போல்வன. லௌகிகநூல்கள் - பூமிசாஸ்திரம், இயற்கை விளக்க நூல், விஞ்ஞானசாஸ்திரம் முதலாயின. சமய நூல்கள் - வேதம், ஆகமம், அவற்றின்வழிநூல்களாகிய சித்தாந்த சாஸ்திரங்கள் முதலாயின. சமர்த்தர் - வல்லவர், சாமர்த்தியசாலி. பரிசு - பரிசில், வெகுமதிப் பொருள்.

கூ. ஆன்மார்த்தபூசை - தனக்குமாத்திரம் பயன்தரச் செய்வதாகிய சொந்தப்பூசை, விசேஷ தீக்ஷை பெற்றவர் நாடோறும் செய்யும் சிவலிங்கபூசை போல்வன. பரார்த்த பூசை - பிறர் யாவர்க்கும் பயன் அளிக்கும்பொருட்டுச் செய்யப்படுவதாகிய கோயிற்பூசை. திருநந்தனவனம் - தேவபூசைக்கு உபயோகமாகிய பூந்தோட்டம்.

க0. தூர் - சேறு. இருதுவுடைய - பூப்புடைய, வீட்டுக்கு விலக்காயின. அசுசி - அசுத்தம். (சுசி - சுத்தம். அ - எதிரானது.)

கஉ. அநாதப்பிள்ளைகள் - தாய், தந்தை முதலான பாதுகாப்பாளரில்லாத பிள்ளைகள், தாய்தந்தையரை இழந்த பிள்ளைகள் (அ + நாதர் = அநாதர்: எவருக்கு நாதன்

இல்லையோ, அவர் அநாதர்) திக்கு அற்ற - கதியற்ற, புகலிடமில்லாத. விதவை - கைம்பெண். அநாதப்பிணம் - அகதியாய் வந்து இறந்தவரின் பிணம்.

(25) நருக்குவர் - நசுக்குவர். பின்னமின்றி - வேறுபாடு இல்லாமல், பேதமில்லாமல். உத்திரம் - வளைமரம். அதிபாரம் அதிகக்கனம். ரௌரவம், மகாரௌரவம்:—ஒவ்வொருவகை நரகம்.

(26) கடுத்து + ஒய - வளைந்து சோர, நொந்துதளர. நீசர்-இழிந்த பிறப்பினர். பிக்ஷைப் பிசாசு-பிக்ஷை கேட்டுத் திரியும் பேய்; பிசாசுபோல மிகுந்த பசியால் வருந்துபவரைப் ‘பிசாசு’ என்றது உவமையாகுபெயர்.

(27) பொய்வேடம் - பாசாங்கான பேச்சும் செயலும் போல்வன. அணுவளவு - அணுப்போன்ற சிறிய அளவு. அபகரிப்பவள் - கவருபவர்; தம் பொருட்டு எடுத்துக் கொள்பவர்.

(28) சந்ததி விருத்தி - வம்ச விருத்தி, புதல்வர் பேரப்பிள்ளைகள் முதலாயினோர் பெருகுதல். பரகதி - புண்ணியலோகத்திற் பிறந்து அநுபவிக்கும் இன்பம், மோட்ச இன்பமுமாம்.

(29) நல்லறிவுச் சுடர் கொளுத்தி - நல்ல புத்தியாகிய தீபத்தைப் பிரகாசிக்கச் செய்து.

(30) தனதானியங்கள் - பொன் முதலாகிய திரவியமும், நெல் முதலாகிய தானியமும். அன்னியம் - சொந்தமல்லாதவை, தொடர்பில்லாதவை.

(31) குறளின்பொருள்:—(i) அன்று - (யாம் இப்பொழுது இளையோம் ஆதலின்) அந்த இறக்கின்ற முதுமைக்



காலத்தில், அறிவாம் - செய்வோம், என்னாது - என்று கருதாது, அறம் - தருமத்தை, செய்க - (நாள்தோறும்) அது - அவ்வாறு செய்த தருமம், பொன்றுங்கால் - இவ்வுடம்பினின்றும் உயிர்போங்காலத்து, பொன்றாத்துணை - (அவ்வுயிர்க்கு) அழியாத துணையாகும். [மற்று: அசைநிலை. பொன்றாத - அழியாத; ஈறு கெட்ட பெயரெச்சம். பொன்றாமையாவது:—தருமத்தைச் செய்த உடம்பு அழியவும், தான் அழியாது உயிரோடு பொருந்தி ஏனையுடம்பினும் சென்று இன்பமாகிய பயனைத்தருதல்]

(ii) நா செற்று-(பேச முடியாதபடி) நாவை அடக்கி, விக்குள் (மரணகால) விக்கல், மேல் வாராமுன் - எழுவதற்கு முன்னே, நல்வினை-புண்ணியம், மேற்சென்று - விரைந்து, செய்யப்படும்-செய்யத்தக்கது.

## வினாக்கள்.

(1) ஒருவர் தமக்குக்கிடைத்த செல்வத்தை எவ்வழியிற் செலவு செய்தல் வேண்டும்? ஏன்?

(2) தருமத்தின் பொருட்டுச் செலவழியாத சிற்சிலரது செல்வம் வீணிற் செலவழிகின்ற விதங்களைக் கூறுக.

(3) தேவாலய விஷயங்களில் அறியாமையினால் சிலர் செய்யும் ஆடம்பரச் செலவுகளைப்பற்றிக் கூறுக.

(4) ‘குளிக்கப் போய்ச் சேறுபூசிக் கொள்வார் போல’:—இவ்வுவமானத்தால் விளக்கப்புகுந்த உவமேய விஷயத்தை விவரமாக உரைக்க.

(5) பொருளினாலே அவசியஞ் செயற்பாலனவாகிய உத்தம தருமங்களைப்பற்றி விவரித்துரைக்கும் பகுதிகள்

பன்னிரண்டுக்கும் தனித்தனி ஏற்ற தலையங்கப் பெயர் அமைக்க.

(6) பொருளில்லாதவர் தருமப்பயனை அடைய என்ன செய்தல் வேண்டும்?

## இலக்கணம்.

(1) அவன், அந்நாயகன், இவ்வுண்மை, அவர், அப்படி, இவர்கள், இவை, அவைகள், இத்தன்மை, "அன்றறிவா மென்னாதறஞ் செய்கமற்றது பொன்றுங்கால்........" இவற்றில் வந்த அகச்சுட்டுக்களையும், புறச்சுட்டுக்களையும் அட்டவணைப்படுத்தி எழுதுக.

(2) யாது, யாவர், செய்வார்களோ, எவனுக்கு, உண்டா இல்லையா, அருளுடையார்க்குத் துன்பமேது, அரசன் எவ்வழி குடிகள் அவ்வழி, தொப்பி வியாபாரி யாங்ஙனஞ் செய்தானோ அங்ஙனமே குரங்குகளும் செய்தன:—இவற்றில் வந்த மொழிமுதல் வினாவையும், மொழியிறுதிவினாவையும் அட்டவணைப் படுத்துக.

(3) இவற்றுள் அகவினா எவை? புறவினா எவை?

---

## 22. கடன்படல்.

### குறிப்புரை.

(1) மட்டாக - பொருள் வருவாயினுங் குறைந்த அளவாக, வரவினளவைக் கடவாமல்.

(2) அமைந்து - பொருந்தி. அரிது அரிது - அரிதான செயலுளெல்லாம் இதுவே அரியது, மிகவும் அரியது; அசாத்தியம் - (முடியாதது) என்றபடி.



(4) முட்டு - பொருளில்லாமல் முட்டுப்படுதல், பணமுடை, பொருளின் தட்டுப்பாடு, பணமில்லாமையாலாகிய தடை. தருமசபை - நீதிமன்றம், நியாயஸ்தலம். தாவரப் பொருள் - அசைவில்லாத ஆதனம்:—வீடு, மனை, தோட்டம், வயல் முதலாயின. சங்கமப் பொருள் - அசைவுள்ள பொருள்கள்:—பாத்திர பண்டங்கள், மேசை, நாற்காலி, பெட்டகம் போல்வன. மாய்கின்றான் - இறக்கின்றான்.

(5) (சுப + அசுப + கருமங்கள்) சுபாசுபகருமங்கள் - சுபகருமமும், அசுபகருமமும்; சுபகருமம்:—விவாகம் போல்வன. அசுபகருமம்:—பிரேதக்கிரியை, அந்தியேட்டி போல்வன. கண்ணை மூடிக்கொண்டு - அறிவால் ஆராய்தல் இல்லாமல்; (கண் - அறிவு.) தனிகர் - செல்வர் (தனம் உள்ளவர் என்னுங் காரணம் பற்றிவந்த பெயர், தனம் - செல்வம்.) என்னை - எத்தன்மையது, இகழத்தக்கது அல்லது வருந்தத்தக்கது என்றபடி.

(6) கண்ணோட்டம் - தாக்ஷிணியம்: தன்னோடு பழகினவரைக் கண்டால் அவர் வேண்டுவனவற்றை மறுக்க முடியாத தன்மை; அவர்மேற் கண் ஓடிய (சென்ற) வழி நிகழ்வதாகலின் இக்குணத்துக்கு இப்பெயர் வந்தது.

(7) பண்டி - வண்டி (முற்கால வழக்குச் சொல்.)

(8) பவனி வருவோர் - ஊர்வலம் வருவோர், உலாத்திச்செய்து வருவோர். டாம்பிகர் - புகழை விரும்பி வீணான பெருஞ் செலவு செய்யும் வாழ்க்கை யுடையவர், வீண் ஆடம்பரமான செலவு செய்து வாழும் விருப்பினர். சீவகாருணியம் - ஜீவதயை, பிறவுயிர்மீதுள்ள இரக்கம்; இது ஈண்டு இகழ்ச்சிக்குறிப்பு மொழியாய் மூடத்தனத்தை உணர்த்திற்று. வட்டிவாசிகளை:—வாசிகள் - அளவுகள்,

இனி வாசி என்பது வட்டிக்குமேலதிகமாய்க் கழித்தெடுக்கும் கழிவுப் பணமுமாம்.

(9) தலையெடுக்காது - ஓங்கி வளராது, முதன்மை பெற ஓங்காது.

(14) தெய்வம்-கடவுள்; சொற்றன்மையால் அஃறிணையும், பொருட்பண்மையால் உயர்திணையுமாயுள்ள மொழி, ஆகலின் சொற்றன்மைக்கு இயைய அஃறிணை வினைப் பயனிலை கொண்டது.

(15) கடன்படத்தலைப்பட்டு - கடன்படத்தொடங்கி, கடன்பட முற்பட்டு. பிணை - பொறுப்பாளி.

(16) துதித்தல் - தோத்திரஞ் செய்தல். பொறை - பொறுமை.

(17) உழைப்பான் - வேலை செய்வான்.

(18) இரணியதானம்-பொன்னைக் கொடுக்குந் தானம். அடைக்கலம் புகுதல் - தன்னைப் பாதுகாக்கும்படி வேண்டி ஒருவரிடத்தே சரணம் புகுதல்.

(19) வாக்குத்தத்தம் பண்ணின - 'தருவேன்' என்று வாக்குறுதி செய்த; (வாக்கு - சொல்லால், தத்தம் - கொடுத்தல், ஈதல்.)

## வினாக்கள்.

(1) கடன்படுதலால் உண்டாகும் பயனாகிய தீமைகளை விவரிக்க.

(2) பொருளில்லாத பொழுது கடன்படுதலைவிட்டுக் கையாளத்தக்க நெறிமுறைகள் யாவை?

(3) "கடன்படல் எல்லாப்பாவங்களையும் வலிந்து கைப்பிடித்தழைக்குந் தூது":—எங்ஙனம் என்று விளக்குக.



(4) "ஒருவனுடைய பொருளைத்திருடுதலினும் அவனது பொருளைக் கடனாக வாங்கிக் கொண்டு அதனைத் தீர்க்காமை பெருங் கொடும்பாவம்":—ஏன் என்று விளக்கிக் கூறுக.

(5) கடன்படத் தலைப்படுவோர் கடன்படுமுன்னே எவ்வெவ்வாறு ஆலோசித்துப் புத்தியாக நடந்தால் கடனால் வருந்துன்பத்தினின்றும் தப்பலாம்? விளக்குக.

(6) "நாமொன் றெண்ணத் தெய்வமொன் றெண்ணியது" என்னும் பழமொழிக்கு இலக்ஷியமாகிய செயலை விவரிக்க.

(7) பொருளின்றிச் செய்யப் படுவனவாகிய தருமங்கள் யாவை?

## இலக்கணம்.

(1) பரிதாபம் பரிதாபம், அரிதரிது, பாவம் பாவம், கதறிக் கதறி, கொடிது கொடிது, என்னே யென்னே:— இவ்வடுக்குத் தொடர் ஒவ்வொன்றையும் அமைத்து ஒவ்வொரு வசனம் அமைக்க.

(2) கடன், முட்டு, கைப்பிடி, முதல், கடனடையான், குடிதலைப்பட்டவர்:—இப்பதங்கள் இருபொருள் தருதல் விளங்க வெவ்வேறு வாக்கியங்களில் அமைத்துக்காட்டுக.

(3) பவனி, தனிகர், சுபகருமம், மானம், அவமானம், எதிர்பார்த்தல், பிணை, இடம்பம், சீவனம், வாக்குத்தத்தம்:—இச் சொற்களின் பொருள் விளங்கத் தனித்தனி வாக்கியத்திலமைக்க.

(4) இப்பாடத்தின் சாராம்சம் விடுபடாதபடி, இதனை முழுத்தாளில் இரண்டு பக்கத்தில் அடங்கச் சுருக்கி எழுதுக.

---

## 23. இரசவாதம்.

### குறிப்புரை.

இரசவாதம் - இரசகுளிகை முதலியவற்றால் செம்பைப் பொன்னாக மாற்றுதல்போல்வனவாகிய வித்தை.

(1) கிலேசம் - துன்பம். திருப்தி - மகிழ்ச்சி, நிறைவு. களஞ்சியம் - பொக்கிஷம். பொய்வேடம் - மன எண்ணத்துடன் பொருந்தாத போலிவேஷமாகிய உடை நடை பாவனைகள்.

(2) உகம் - யுகம்; அது கிருதயுகம் முதலாக நான்கு வகைப்படும்; அவை மாறிமாறி வரும்.

(3) தமியன் - தனித்தவன், துணையில்லாதவன். உழந்து - அனுபவித்து. இரசவாதி - இரசவாத வித்தை செய்பவன். முண்டிதமாகிய சிரசு-மயிரில்லாமல் மொட்டையாக்கப்பட்ட தலை. குண்டலம் - ஆடவரின் காதணி. திரிபுண்டரம் - மூன்றுகுறி. முகமன் - உபசார வார்த்தை. பேசுந்தன்மையது - சொல்லுந் தகுதியுடையது. மாசு - குற்றம். காரிரும்பு - கரிய இரும்பு. நாகம் - ஈயம், துத்தநாகம். வங்கம் - ஈயம், வெள்ளி. அளப்பு - அளத்தல், அளவிடுதல். பேடகம் - பெட்டகம். ஓகோ - ஆச்சரியம் முதலிய மனநிலையை உணர்த்தும் இடைச்சொல். இறை - அற்பம், அற்பப்பகுதி. களங்கம் - இரசகுளிகை. சிலைமண் செய்து - சிலையில் மண்பூசி அதனாற் சுற்றிக்கட்டி. நூற்றெட்டுக் குக்குடபுடம் - 108-முறை வைக்கும் குக்குடபுடமாகிய தீ; 'கோழியின் அளவு உயரமுள்ள வராட்டிப்புடம்' என்னுங் காரணத்தாற் 'குக்குடபுடம்' எனப்பட்டது. (குக்குடம் - கோழி;) அது சுமார் 20-வராட்டி கொண்டது; ஒரு வராட்டியினளவு: காலேயரைக்கால் றாத்தல் (பவுண்ட்)



நிறை. மாற்று - பொன்னின் தரம், பொன்னை உரைகல்லில் உரைத்து அறியும் தரம்; 'பத்தரைமாற்றுத்தங்கம்' என்புழிப்போல. ஒருவராகியிலே பழுக்கும் - ஒரு வராகபுடத்திலே பழுக்கும்; (வராகபுடம் - பன்றியினளவு உயரமாக வராட்டி அடுக்கிய புடத்தீ; அது சுமார் நூறு வராட்டி கொண்டு செய்யப்படுவது.) உறையுள்-வீடு, அறை. வராகிமேல் இட்டு - வராகி என்னும் மருந்தை மேலே தூவி. விதித்தபடி - கட்டளையிட்டபடி. பாவயுகம் - கலியுகம்; புண்ணியங் குறைவாகவும், பாவம் மிகுதியாகவும் செய்யப்படும் யுகம் என்றபடி.

(4) இரசவாத மயக்கம் - இரசவாத வித்தையிலுள்ள மோகம் (மயக்க அறிவு)

### வினாக்கள்.

(1) பேராசையால் வருந்தீங்குகளைச் சுருக்கிக் கூறுக.

(2) தருமதத்தனது வரலாற்றினை மூன்றிலொரு பங்காகச் சுருக்கி எழுதுக.

(3) தருமதத்தனது வரலாற்றினால் அறிந்துகொள்ளக்கூடிய நீதியாது?

### இலக்கணம்.

(1) இரசவாதி தான் வந்த காரணத்தைத் தருமதத்தனுக்குக் கூறிய கூற்றாக உள்ள வாக்கியங்களனைத்தையும், தருமதத்தன் தன் நண்பனொருவனுக்குத் தான் கூறுவது போலமையும்படி மாற்றி அமைக்க.

(2) என்னை, இரும், இருக்கக்கடவாய், செய்க, செல்லலும், ஊமை, பொழிய:—இச்சொற்களின் இலக்கண வகைகளைப் பொதுவகையாலன்றிச் சிறப்பு வகையாற் கூறுக.

---

## 24. வருணம்.

### குறிப்புரை.

வருணம் - சாதி.

(1) பிராமணன் முதலிய நாற்பெயரும் வடசொற்கள்.

(2) ஓதல் - கற்றல், பாராயணஞ் செய்தல். ஓதுவித்தல் - கற்பித்தல். யாகஞ் செய்வித்தல் - யாகஞ் செய்பவனாகிய யாக கர்த்தாவுக்குத் தான் ஆசாரியனாக இருந்து செய்வித்தல். ஏற்றல் - வாங்கல்.

(3) பூமியைக்காத்தல்-நாடுகளை ஆளுதல், அரசாளல். யானை குதிரை தேரூர்தல் - யானையும், குதிரையும், தேருமாகிய இவற்றிலேறிச் செலுத்தத் தேர்ச்சி பெறுதல். படைக்கலம் பயிலுதல் - (வில், வாள் முதலிய) ஆயுதங்களினாற் போர் செய்யப் பழகுதல். வாணிகம் - வியாபாரம்.

(5) இதிகாசம்: சிவரகசியம், இராமாயணம், பாரதம் என்பன. புராணங்கள்: பிரமபுராணம் முதலாகிய பதினெட்டு மகாபுராணங்களும், உபபுராணங்களும். முதலியவை என்றதனால் இலக்கணம், கணிதம் முதலிய கருவி நூல்களும், நீதி நூல்களும், காவியம் முதலியனவுங் கொள்ளப்படும். பஞ்சமகாயஞ்ஞம் இன்னவை என்பதை 'ஆச்சிரமம்' என்னும் பாடத்தில் 13-ம் பந்தியால் அறிக. பிதிர்க்கிரியை - பிதிர்தர்ப்பணம் முதலியன. அதிகாரிகள் - யோக்கியர், தகுதியுடையவர். சற்சூத்திரர் - 'ஸத்சூத்ரர்' என்னும் வடமொழியின் திரிபு. (சத் - நல்ல, உயர்ந்த.) அசற்சூத்திரர் - (அ + ஸத்சூத்ரர்) சற்சூத்திரர் அல்லாதவர், சற்சூத்திரரின் வேறானவர்.

(6) தம்வருணத்து + ஆடவர் - தமது சாதியிற் பிறந்த ஆண்மக்கள். வியபிசாரதோஷம் - கூடாவொழுக்கமாகிய குற்றம். தருமபத்தினிகள் - இல்லற நடாத்தற் பொருட்டு விவாகஞ் செய்யப்பட்ட மனைவிமார்; காமக்கிழத்தியர் (வைப்பாட்டிமார்) காதற்பரத்தையல்லாதவர் என்றபடி.



(7) சோரத்தால் - களவினால், பிறரறியாமல்.

(8) சாதகருமம் - (ஜாத கர்மம்: வடசொல்) பிறந்தவுடன் செய்யுங் கிரியை. சிசு - குழந்தை. வெல்லத்தை விட்டுத் தயிரைச் சில நூல் கூறும்.

(9) ஜன்ம நக்ஷத்திரத்திற்கு இசைய - பெயரின் முதலெழுத்து அல்லது தொடரெழுத்தானது பிறந்த நட்சத்திரத்திற்குச் சோதிட நூலில் விதித்த எழுத்தாக அமைய.

(14) பிரமதேசு - வேதாத்தியயனஞ் செய்வதனால் உண்டாகும் முக காந்தி; (பிரமம் - வேதம்; தேசு:— 'தேஜஸ்' என்ற வடசொல்லின் திரிபு; ஒளி என்பது பொருள்.) காயத்திரி மந்திரத்துக்கு - காயத்திரி மந்திரத்தைச் செபித்தற்கு. பிரஷ்டர் - பதிதர், தம் ஒழுக்கத்தினின்றுந் தவறினவர்.

(16) துவிசத்துவம் - (த்விஜத்வம்: வடமொழி) இருபிறப்பாளராந் தன்மை; உபநயனச் சடங்கினால் வேதாத்தியயனஞ் செய்தற்குத் தகுதி பெறுந்தன்மையே இரண்டாவது பிறப்பாகக் கருதப்படும். வைதிக காரியம்-வேதத்தில் விதித்த தேவகருமம், பிதிர்க்கருமம் முதலிய கிரியை. யோக்கியன் - உரிமையுடையவன், தகுதியுடையவன். பண்டிதர் - அறிவாளர். பிரமம் - கடவுள். பலன் - (அறம், பொருள், இன்பம், வீடு என்னும் புருடார்த்தங்களாகிய) பயன்.

(17) ஆகமம் - (காமிகம் முதலாகிய) சிவாகமங்கள். வைதிகக் கிரியை - வேதத்திற் சொல்லப்பட்ட முறைப்படியான சந்தியாவந்தன முதலாகிய நித்திய கருமங்களும், விவாக முதலிய விசேஷ கருமங்களும். ஆகமக்கிரியை - ஆகமத்திற் கூறிய முறைப்படியான சந்தியாவந்தனம், செபம், பூசை முதலாயின. நமோந்தமாயுள்ள - 'நம' என்பதை இறுதியாகவுடைய, 'நம.' என்று முடிவு பெறும்; (நம: + அந்தம் = நமோந்தம்: வடநூற் புணர்ச்சிபெற்ற தொடர்.) தேவ தோத்திரங்கள்-(சிவபெருமான் முதலாகிய) தெய்வங்களைப்பற்றிய தோத்திரச் சுலோகங்கள் அல்லது சுலோக பதங்கள். பிரணவம் - எல்லா மந்திரங்களுக்கும் முதலிற் சேர்த்து உச்சரிக்கப்படுவதாய் அவற்றிற்கு உயிர் போன்றதொரு மந்திரம்; இது ஓங்காரம் எனவும் படும்; முதற்கண் இது சேர்த்துச் சொல்லப்படாத மந்திரம் எதுவும் பூரண பலனைத் தருவதில்லை; ஆயின், சிவமூல மந்திரமாகிய பஞ்சாக்ஷரம் மாத்திரம் பிரணவமில்லாமலும் பலனைத்தரவல்ல மகாமந்திரமாகும் என்பது நூற்றுணிபு.

(18) நாய்த்தோல் + துருத்தி - நாயின் தோலாற் செய்யப்பட்ட பை. கெட்டுப்போகும் - பயனற்றனவாகும், செல்வாக்குப் பெறாதனவாகும், மதிக்கப் படாதனவாகும். பிராமண னெனப்படுவன் - 'சூத்திருள்ளே பிராமணன்' என்று உயர்த்துச் சொல்லப்படுவன், 'சூத்திரரிற் பிராமணன்' என்ற முதலாம் பகுப்பிற் சேர்ந்தவன் எனப்படுவான். சூத்திரனெனப்படுவன் - 'பிராமணரிற் சூத்திரன்' என்ற கடைப்பகுப்பைச் சேர்ந்தவன் எனப்படுவான்; இவ்விரண்டு வாக்கியக் கருத்தை விளக்குதற் பொருட்டு எழுந்த வாக்கியங்களாகும் இதன்பின்வரும் நான்கு வாக்கியங்களும் என அறிக; நால் வருணங்களுள் ஒவ்வொன்றும் தனித்தனி நந்நான்கு உட்பிரிவுகளை உடையவாற்றால் பதினாறாய் விரியுமென்பது அவற்றின் கருத்தாகும். வியாசர் போன்றவர் 'பிராமணருட் பிராமணர்' - துரோணர் போன்றவர் 'பிராமணருள் க்ஷத்திரியர்' என்றிவ்வாறு அவரவர் நடையினாற் பகுக்கப்படுவனவாம் பதினாறு வருணமும் என்றறிக. இவ்விதமான பகுப்பு வட இந்தியாவில் இப்பொழுதும் வழக்கில் உண்டு என்பர்.

(19) அதிகாரம் - தகுதி, பக்குவம். திருநோக்கம் - குருவின் பார்வையாற் செய்யப்படும் ஒரு தீக்ஷை, இது நயன தீக்ஷை எனப்படும்; பெற்றான் சாம்பானுக்கு உமாபதி சிவாசாரியர் ஒருவகையான நயனதீக்ஷை செய்து முத்தி அளித்தனர் என்று சரித்திரம் கூறும். பரகதி - மேலுலக பதவி, முத்தி.



## வினாக்கள்.

(1) க்ஷத்திரியருக்குரிய தொழில்களாவன யாவை?

(2) அநுலோமர் முதலிய சங்கரசாதியாரின் வகையை விவரித்துரைக்க.

(3) அந்தணருள் யார் யாரைப்பார்க்கிலும் யார் யார் உயர்ந்தவர்? விளக்குக.

(4) ஆகமத்தில் விதிக்கப்பட்ட தீக்ஷைக்கு அருகரல்லாத மற்றைச் சாதியார்கள் பரகதி பெற்று உய்யும் நெறி யாது? விவரிக்க.

## இலக்கணம்.

(1) 'உண்டு' என்ற சொல்லின் முதலினும் இறுதியினும் வந்த உகரங்களைப்பற்றி யாது அறிவீர்? விவரமாகக் கூறுக.

(2) வருணம், விதி, அதிகாரி:—இவை இருபொருள் பட வெவ்வேறு வசனந்தமைத்து அப்பொருளையுங் குறிக்க.

(3) 1-ம் பந்தியின் 2-ம் வாக்கியமாகிய ஏகவாக்கியத்தைப் பல சிறு வாக்கியங்களாக மாற்றுக.

---

## 25. ஆச்சிரமம்.

### குறிப்புரை.

ஆச்சிரமம் - நிலை.

#### பிரமசாரி.

பிரமசாரி - வேதமோதுதலாகிய அநுஷ்டானத்தைச் செய்பவன்; பிரமம் - வேதம்.

(2) விரதங்காத்தல் - முஞ்சிப்புல்லை இடையில் தரித்தல், தன் வருணத்துக்கு ஏற்ற தண்டந்தரித்தல், நிலத்திற் சயனித்தல், குருபணிவிடை முதலாகிய நியமங்களை மேற்கொண்டு, பிரசாபதி சோமன் அக்கினி வைசுவதேவர் ஆகிய நால்வரையும் தனித்தனியே குறித்தகாலத்துக்குத் தர்ப்பணம் ஓமம் தோத்திரங்களின் மூலம் வழிபடும் நியமமுடைமையாம். கைகளை (மார்பின்மேல்) கட்டிக்கொண்டிருத்தல் 'பிரமாஞ்சலி' எனப்படும். வேதங்கள்: இருக்கு, யசுர், சாமம், அதர்வம் என்பன; இம்மை மறுமைக்குரிய விஷயங்களை அறிதற்குக் கருவியாகிய நூல் என்ற காரணத்தால் வந்த பெயர். சுக்கிலபக்ஷம் - பூர்வபக்கம், வளர்பிறை நாட்கள்; அது அமாவாசைக்குப்பின் பிரதமை முதல் பௌர்ணிமை ஈறாக வரும் பதினைந்து திதிகளாகிய நாட்கள்; (சுக்கிலம் - [நிலவாலாகும்] வெண்ணிறம்.) கிருஷ்ணபக்ஷம் - அபரபக்கம், தேய்பிறைநாட்கள்: அது பௌர்ணிமைக்குப்



பின் பிரதமை முதல் அமாவாசை யீறாகவுள்ள பதினைந்து திதிகளைக் கொண்ட நாட்கள்; (கிருஷ்ணம் - [இருளாலாகும்] கறுப்பு. பக்ஷம் - பகுதி, பாகம், சாந்திரமான மாசத்தினது இருகூறுகளுள் ஒருபகுதி என்றபடி.) வேதாங்கம் - (வேத + அங்கம்: வடமொழித் தீர்க்க சந்தி பெற்ற தொடர்) வேதங்களுக்கு உறுப்பாயுள்ள நூல்கள்; அவை சிக்ஷை முதலாகிய ஆறு நூல்கள்; சிக்ஷையாவது வேதத்தின் உச்சாரண லக்ஷணத்தை உணர்த்துவது. வியாகரணமாவது வேதத்தின் பதலக்ஷணத்தை விவரிப்பதாம். நிருத்தமாவது வேதத்தின் பதங்களுக்கு விவரணங் கூறுவது. சோதிடமாவது இலக்கினம், திதி, வாரம், நக்ஷத்திரம், யோகம், கரணம் முதலியவற்றால் வைதிக கருமங்களுக்குக் காலம் அறிவிப்பதாம். கற்பமாவது ஆசுவலாயனீயம், போதாயனீயம், ஆபஸ்தம்பம் முதலிய சூத்திர ரூபத்திலிருந்து, வைதிக கருமங்களைப் பிரயோகிக்கும் முறைமையைக் கற்பிப்பதாம். சந்தோ விசிதியாவது வேதத்தில் உக்தை முதலிய சந்தோ பேதங்களுக்கு அக்ஷர சங்கியை கற்பிப்பதாம். இவை ஆறனையும் உணராக்கால் வேதங்களை ஓதுதலும், அவற்றின் பொருளை உணர்தலும், அவைகளில் விதித்தவழி ஒழுகுதலும் ஏலாவாம். ஆதலின் இவை வேதங்கட்கு 'அங்கங்கள்' எனப் பட்டன. அயனம் - உத்தராயணம், தக்ஷிணாயனம் என்ற புண்ணிய காலங்கள்; முறையே தைமாசப்பிறப்பும், ஆடிமாசப் பிறப்புமாம். விஷுவம்-சித்திரைமாசப் பிறப்பு, ஐப்பசிமாசப் பிறப்பாகிய புண்ணிய காலங்கள். சந்தியா காலங்கள் - காலை மாலைகளிற் செய்யும் சந்தியாவந்தனத்துக்குரிய காலங்கள்; பிராதக் காலமாகிய சந்தியாகாலம்: இரவின் இறுதி இரண்டு நாழிகைப் பொழுது. சாயங்காலசந்தி: பகலின் இறுதி

யிரண்டு நாழிகைப் பொழுது; சூரியனும் நக்ஷத்திரங்களும் காணப்படாதனவாய் பகல் இரவு என்னும் இரண்டும் சந்திக்கும் இடைக்கால மெதுவோ அது சந்தியா காலமாம்; அவை சூரியோதயத்தின் முன்னும் சூரியாஸ்தமயனத்தின் பின்னும் உள்ள காலங்கள். அமாவாசை: சூரியனுடன் சந்திரன் கூடி (அணுகி)ச் சஞ்சாரஞ் செய்யும் நாள் என்ற காரணத்தால் ஆகிய பெயர். பௌர்ணிமை: சந்திரன் பதினாறுகலைகளும் பூர்ணமாகி (நிறைந்து) வரும் நாள் என்ற காரணத்தால் ஆகிய பெயர். உரியவை - உரிய வேதமந்திர பாகங்கள். தாம்பூலம் - வெற்றிலைபாக்கு முதலிய கூட்டுப்பொருள். போக்கியப் பொருள்-சிற்றின்பத்துக்கு ஏதுவான பொருள். கீதம் - சங்கீதம்.

(3) விரதம் - பிரமசாரிக்குரிய நியம ஒழுக்கங்கள். நியமித்து - சங்கற்பித்து, திட்டஞ் செய்து. துறவி - சிற்றின்பத்தை விட்டவன் (விரும்பாதவன்.) மரணாந்தம் - (மரண + அந்தம்: வடமொழித்தீர்க்க சந்தி) மரணகாலம் இறுதியாக, சாகும்வரையில்.

(4) அருத்த ஞானம் - பொருளை அறியும் அறிவு, பொருளுணர்ச்சி. தக்ஷிணை - (குருவினது) மனம் மகிழும் படியாக அவர் விரும்பிய பொருளைக் கொடுக்கும் காணிக்கை. அநுமதி - உத்தரவு. சமாவர்த்தனம் - பிரமசரிய விரதத்தை நிறைவேற்றியபின் இல்லறத்திற் பிரவேசிப்பதற்குப் பூர்வாங்கமாக ஆடவருக்குச் செய்யப்படுங் கிரியை; இதில் ஆடவன் தனது அக்கினி வணக்கத்தை முடித்து, பின் சங்கற்பத்துடன் வபனம் ஸ்நானம் ஆகியவைகளைச் செய்து, இரண்டு ஆடையும் கர்ண பூஷணமுந் தரித்து, சந்தனம் பூமாலையணிந்து, ஆசனம் படுக்கைகளுக்குரிய மான்றோலுங்



கமண்டலமுந் தாங்கி, விவாகபரியந்தம் யாத்திரை செய்பவனாய் விளங்குவன் என்றறிக.

(5) இந்திரிய நிக்கிரகம் - மெய் வாய் கண் மூக்கு செவி என்னும் ஐம்பொறிகளையும் மனத்தையும் தீயவழியிற் செல்லாமல் அடக்குதல். இறக்கி - நிறுத்தி. சுகசன்னி - எண்ணெய் தேய்த்து ஸ்நானம் செய்து தயிர் முதலிய மந்த குண பதார்த்தங்களைப் புசித்துக் காம இன்பத்தை நுகர்வதனாற் சாமுண்டாகிப் பிறக்கும் சன்னிரோகம். பரிகாரம் - பிராயச்சித்தம், பாவத்தைப் போக்குங் கிரியை.

கிருகஸ்தன்

கிருகஸ்தன் - வீட்டில் மனைவியுடன் இருந்து செய்ய வேண்டும் அறங்களைச் செய்பவன்.

(6) அவலக்ஷணம் - அழகின்மை.

(7) அங்கஈனன் - உறுப்புக் குறைந்தவன்; குருடன், முடவன் போன்றுருள் ஒருவன்; 'அங்கஹீனன்' என்ற வடசொல்லின் திரிபு. வீரிய மில்லாதவன் - ஆண்மையில்லாதவன், அலி.

(9) வளம் - வருவாய், செல்வம்.

(10) பரதாரம் - பிறன்மனைவி. பரபுருஷன் - கணவனல்லாத வேறு ஆடவன். தேசாந்தரம் - பிறதேசம். இழிவான காரியம் - பிறருக்குத் தொண்டு செய்தல், வியபிசாரம் போன்ற கருமம்.

(11) அசுபக்கிரியை - பிரேதக்கிரியை, அந்தியேட்டி முதலாயின. பரான்னம் - (பர + அன்னம்: தீர்க்கசந்தி பெற்றது) பிறர் வீட்டிற் போசன முண்டல். வபனம் - க்ஷௌரம், மயிர்களைதல்.

(12) விதவை - கைம்பெண், நாயகன் இறக்கப்பெற்றவள். விலக்கப்பட்டநாட்கள்:—சஷ்டி, அஷ்டமி, சதுர்த்தசி, அமாவாசை, பௌர்ணிமை, திருவாதிரை, திருவோணம், பூப்படைந்த தினமுதலாக நான்குநாள், சென்மத்திரயம், விரதநாட்கள் முதலாயின. கிரகணி - குடலின் கபாடத்தில் இரணமுண்டாகிக் கழிச்சல் காணும் நோய். அண்டவாயு - அண்டம் (மர்மஸ்தானத்தின் விதை) வீங்கிக் குத்து வலி முதலிய வேதனைகளைச் செய்யும் நோய். குன்மம் - இரைப்பை முதலிய பாகங்களில் இரணமுண்டாகி வாந்தி, அசிரணம், வயிற்றுக்குத்து, வலி ஆகிய இவற்றை உண்டாக்கும் நோய். சூலை - சிலேட்டும நீரால் வரும் நோய்: வயிறு முதலிய பாகங்களில் சிலேட்டும நீர் அதிகரித்து வேதனையைச் செய்யும் ஒருவகை நோய்; இது பதினெட்டு வகைப்படுமென்பர்; அப்பர் சுவாமிகளுக்கு ஈசனருளால் வந்தது சுரசூலையாகலாம்; (சூல்+ஐ: சூல் - தேகத்துள்ளேயுள்ள துர்நீர்; ஐ - சிலேட்டுமம்.) பிளவை - நீரிழிவுள்ளவருக்கு முதுகு முதலிய இடங்களில் திரண்ட பெருங் கட்டிகள்) உண்டாகி வேதனை செய்யும் நோய். மகா சுவாசம் - சுவாச நரம்புகளில் வீக்கம் முதலியன உண்டாக்கி, முட்டுப்பட்டு ஒலியோடு சுவாசித்தலை அடைவிக்கும் நோய். மகோதரம் - பெருவயிறு: கால் கை முதலிய அவயவங்கள் சூம்பி வயிறு பெருத்து மூச்சு முட்டுப்பாடு முதலிய வேதனைகளை உண்டாக்கும் நோய்; (மகா+உதரம்: மகா-பெரிய, உதரம்-வயிறு.)

(13) பூதயஞ்ஞம் - நாய், பதிதன், சண்டாளன், திராப்பிணி உள்ளவன், காக்கை, கிருமி, இவர்களைக் குறித்துச் சுத்தமான பூமியில் சிறிதளவு அன்னத்தை வைத்துப் பலியிடுதல்; (பூதம் - உயிர்கள்.) [மநுதர்மசாஸ்திரம் - 3-ம் அத்தியாயம் 92-ம் சுலோகம்]



(14) தருமநிலை - தர்மஸ்திதி, அறநிலைமை. உலகநிலை - லௌகிக கருமஸ்திதி, உலகியல்.

(15) கவளம் - ஒருவாயுணவு, ஒருகைப்பிடி. பந்துக்கள் - உறவினர்.

(16) கட்டம் - மலம் (வடசொல்.) முதல் ஐந்து வாக்கியங்களின் கருத்தாவது அவர்கள் உண்ணும் உணவு மலம் இரத்தம் முதலாயினவற்றிற்குச் சமம் என்றபடி. பஞ்சலோகம்: பொன், வெள்ளி, செம்பு, இரும்பு, ஈயம் என்னும் ஐந்து உலோகப் பொருள்கள்; (பஞ்ச - ஐந்து.)

### வானப்பிரஸ்தன்.

வானப்பிரஸ்தநிலையாவது மறுமையிற் சுவர்க்கம் முதலிய புண்ணியலோக பதவியை அடைதற் பொருட்டேனும், பற்றற்றுச் சிவஞானம் (பிரமஞானம்) கைகூடி வீடடைதற் பொருட்டேனும் அருள், வாய்மை, கொல்லாமை, இன்னுசெய்யாமை, தவம் முதலிய விரதங்களை, பாவம் நீங்கி மனம் முதலிய அந்தக்கரணங்கள் தூய்மையடைதற் பொருட்டு மேற்கொண்டு ஒழுகுதல். சந்நியாச நிலையாவது அந்தக்காரணங்கள் தூயனவாயவிடத்து நிலையாமை யுணர்ந்து அகப்பற்றாகிய தன்னுடம்பிற் செய்யும் பற்றையும் புறப்பற்றாகிய மனைவி மக்கள் செல்வம் முதலாகிய ஏனைப் பொருள்களிற் செய்யும் பற்றையும் அறவே விடுத்துக் காமிய வினைகளைச் செய்தலின்றிக் குருவுபதேசப்படி யோகஞான ஒழுக்கங்களாற் கடவுளைத் தியானித்தல் வழிபடுதல்களிற் காலங் கழித்தலாம். ஆகவே சந்நியாச நிலைக்குக் காரணமாய் முன்னிகழ்த்தும் நிலையே வானப்பிரஸ்தம் என்றறிக. வானப்பிரஸ்தன் - தவஞ்செய்தற் பொருட்டு வனத்தைக் குறித்துப் புறப்பட்டவன்; (பிரஸ்தானம் - புறப்படுதல்.)

(20) மனைவியை வீட்டில் விட்டுத் தனியே வனஞ் சென்று தவம் புரிவோன் 'விபத்நீகன்' எனவும், மனைவியுடன் சென்று தவம் புரிவோன் 'ஸபத்நீகன்' எனவும் சொல்லப்படுவர்.

(21) பூதபலி - இருகஸ்தனுக்குச் சொல்லப்பட்ட பூதயஞ்ஞமே இதுவும். உபநிஷத்துக்கள் அதர்வசிகை, சாந்தோக்கியம் முதலாகிய உபநிடதங்கள்; அவை அத்தியான்மக ஞானத்தைச் சொல்லும் பிரபலச் சுருதிகளாம்.

(22) வைராக்கியம் - போக போக்கியப் பொருள்களிற் பற்றற்ற தன்மை; (ராகம் - இச்சை. வி + ராகம் = விராகம்: இச்சையின்மை; அப்படிப்பட்ட இயல்பு 'வைராக்கியம்': இது வடமொழித் தத்திதாந்தமாகிய பெயர்.)

### சந்நியாசி.

சந்நியாசி பிரமமாகிய பரம்பொருளிடத்தே மனத்தை நன்கு பதித்து ஒழுகுபவன்; (சந்நியாசம் - [சம் + நியாசம்] நன்கு பதித்தல். முத்தீயோம்பல் முதலாகிய கர்மானுஷ்டான நியமங்கள் இவனுக்கு இல்லாமற்போம் என்றறிக.)

(23) தண்டம் - தடி, கையிற் கொண்டு திரியும் தடி. கமண்டலம் - ஜலம் வைத்திருத்தற்கு உதவும் ஒருவகைப் பாத்திரம். காஷாயம் - காவிவஸ்திரம்.

(24) பரிபக்குவர் - தகுதி வாய்ந்தவர்.

(25) அநித்தியம்-நிலையாதது, அழிவுடையது. உரோகம் - நோய். ஜந்து - பிராணி.

(26) அரசர் வாயில் - இராச சபை, இராசமாளிகையின் வாசல்.



(27) பிக்ஷா பாத்திரம் - பிச்சை பெற்றுண்ணும் பாத்திரம். விஷயங்கள் - சுவை ஒளி ஊறு ஓசை நாற்றம் என்னும் ஐம்புலன்கள், அநுபவ வஸ்துக்கள் என்றவாறு. இந்திரியங்கள் - மனமும், மெய் வாய் கண் மூக்குச் செவி என்னும் ஐம்பொறிகளும்; அறியும் கருவிகளிவை. ஏகாந்தம் - தனியிடம், சனசஞ்சாரமற்ற இடம். குறிசொல்லல்-ஆருடஞ் சொல்லல் முதலியன. மந்திரவாதம் - நோய் பேய் முதலியவைகளை அகற்றும் மந்திரத்தொழில் போல்வன.

(28) கணபிக்ஷை-அற்ப அளவான தானியம். வாடியாமல் - கெடுக்காமல், வருந்தாமல். விரத்தன் - ஆசையற்றவன்; (விரக்தன்: என்ற வடசொற்றிரிந்தது.) மதுகரம் என்ற பதத்திலிருந்து உண்டாய சொல் மாதுகரி என்பது; மதுகரம் - வண்டு. விரத்தி - (விரக்தி. வடசொல்) ஆசையின்மை. பிராரத்தம் - எடுத்த உடம்பால் அநுபவிக்கப் படும் வினை, பிராரத்த கன்மம், ஊழ்வினைப்பயன். புசிப்பிப்பார்-அநுபவிக்கச் செய்வர். அயாசிதபிக்ஷை:—அயாசிதம்-சென்று யாசிக்காமலே பெறப்பட்ட பொருள்.

(29) பிறன்மனை - பிறனது மனைவியை. நயப்போர் - விரும்புவோர். கன்னிகையை விற்போர் - கன்னிகையைத் தமக்குப் பொருள் வாங்கிக்கொண்டு விவாகஞ் செய்து கொடுப்போர். சித்தசுத்தி - மனத்தூய்மை. வெள்ளாட்டி - வேலைக்காரி, அடிமைப் பெண்.

(30) மண் - விளைநிலம், மனை முதலாயின. பதிதர் - விரதபங்கமுடையவர், ஒழுக்கத்திற்றவறினவர். கற்பகாலம்-பிரமாவிற்குரிய ஒரு பகலாகிய காலம்; அது சிருட்டி முதற் பிரளய மிறுதியாகிய காலம்.

(33) கூடாவொழுக்கம் - காம இன்பநுகர்ச்சி. விறல்- வலிமை.

### வினாக்கள்.

(1) பிரமசாரிக்குரிய விரத ஒழுக்கங்களைச் சாரமாகத் திரட்டிக் கூறுக.

(2) எவ்விதத்தினால் ஒருவருடைய குலம் தழைத்தோங்கும்?

(3) எப்படிப்பட்ட கிருகஸ்தன் பிரமசாரியாகவே மதிக்கப்படுவன்?

(4) கிருகஸ்தன் செய்யவேண்டிய பஞ்சமகாயஞ்ஞங்கள் யாவை?

(5) சந்நியாசியின் கடமையாகிய ஒழுக்கத்தை விவரிக்க.

(6) சந்நியாசியின் பிக்ஷவகைகளைக்கூறி அவற்றை விளக்குக.

(7) சந்நியாசத்திற் பிரவேசிக்கவேண்டிய ஒழுங்கு முறையையும், புறனடை விதியையும் உரைக்க.

### இலக்கணம்.

(1) "வானுயர் தோற்றம்" என்ற குறளுக்கு எழுவாய் பயனிலை செயப்படுபொருள் அடைமொழிகளாகிய வாக்கிய உறுப்புக்களைப் பிரித்துக் காட்டுக.

(2) பிழையுளவேல் திருத்துக:—பிரமச்சாரி, கண்ணுலஞ் செய்தல், வாக்கைப்படுதல், சன்னியாசம், கிரகஸ்தன், அவலச்சனம், பரியாரம், தேசாந்திரம், சந்தோசம், அங்கயீனர்.

---



## 26. நல்லொழுக்கம்.

### குறிப்புரை.

(3) தபித்து - தவித்து, பதைபதைத்து. சகித்துக்கொள்ளல் - பொறுத்துக் கொள்ளல்.

(4) காஞ்சிரங்காய்-எட்டிமரத்தின்காய், அது நஞ்சுத்தன்மையுள்ளது. பக்ஷபாதம் - நடுவுநிலை தவறுதல்.

(6) தாயும் தமக்கையும் தங்கையுமாய்ப் பாவித்தல் வயசு முறைப்படி என்க.

(7) அப்பிரியம் - விருப்பமில்லாதது.

(8) தூர்த்தன் - காமுகன், காமத்தால் தீய ஒழுக்கமுடையவன். புறங்கூறுவோன் - ஒருவரைப்பற்றி அவரில்லாத விடத்தே பிறரிடம் பழித்துக் கூறுவோன்.

(9) சித்திபெறாது - பயன்தராது.

(11) புத்திபண்ணாமல் - பாவனை பண்ணாமல், கருதாமல்.

(12) தன் தரும விரதங்களைப் புகழ்ந்து பேசினால் அவற்றின் பலனாகிய புண்ணியத்தை இழந்தவனாவன் என்றறிக.

(13) குரூபிகள் - விகார வடிவமுள்ளவர், அவலக்ஷணமுள்ளவர், அழகில்லாதவர். (கு + ரூபி: 'கு': இன்மைப் பொருள்தரும் வடமொழி இடைச்சொல்; ரூபம் - அழகு.) ஈனசாதியார் - இழிந்த சாதியார். தோஷம் - குற்றம்; குறை.

(14) சீடன் - மாணாக்கன். நிழலாயும் - நிழல்போன்றும். சரீரமாயும் - சரீரம்போன்றும்; தன் வாழ்வுக்குத் துணையாக இன்றியமையாதவர் என்பது கருத்து.

(68) பாதரக்ஷை - செருப்பு முதலாயின. நுகத்தடி - மாட்டுவண்டி, கலப்பை இவைகளிற் பூட்டப்படும் நுகமாகிய தடி.

### வினாக்கள்.

(1) மன எண்ணத்தைப்பற்றிய நல்லொழுக்க முறைகளைச் சுருக்கிக் கூறுக.

(2) வாக்கைப் பற்றிய நல்லொழுக்க முறைகளைச் சுருக்கி எழுதுக.

(3) திரிகால சந்தியா வந்தனஞ் செய்யும் கால நியம பேதங்களை விவரிக்க.

(4) நோயினாலே ஸ்நானஞ் செய்ய இயலாதபோது சந்தியாவந்தன முதலாயின செய்தற்குக் கைக் கொள்ள வேண்டிய ஆசார முறையை விவரிக்க.

(5) எவற்றின் நிழலை மிதித்தல் தாண்டுதல்கள் ஆகா? பகலில் எவற்றின் நிழலில் இருத்தல் ஆகாது? இரவில் இருக்கலாகாத நிழல்கள் எவை?

(6) யார் யாருக்கு வழிகொடுத்து விலகிப் போதல் வேண்டும்?

### இலக்கணம்.

(1) அல்லது, ஆதலால், எனினும், ஆயின, ஆயினும், அதனால், ஆவது, ஏனெனில்:—இவற்றைப் பொருட் பொருத்தமுற வாக்கியங்களில் அமைத்து எழுதுக.

(2) எதிர்ச் சொற்கள் தருக:—வரன், அநுக்கிரகம், தக்ஷிணாயனம், யோக்கியர், சற்குணம், சுவதேசம், மானம், சுமங்கலி.

---



## 27. கற்பு.

### குறிப்புரை.

(1) சுவாதீனர் - சுதந்திரர். பக்ஷத்தார் - பக்கத்திலுள்ள (சார்பிலுள்ள) உறவினர். வசை - நிந்தை, பழிச்சொல்.

(2) பலங்கள் - பயன்கள். பதிவிரதம் - கணவனைப் பூசித்து அவனுக்குப் பணிவிடை செய்யும் நியம ஒழுக்கம். கொழுநன் - கணவன்.

(3) விளக்கஞ் செய்தல் - சுத்தஞ் செய்தல். வந்தித்தல் - வழிபடல்.

(4) சிதேவி - இலக்குமி; 'ஸ்ரீதேவி' என்ற வடசொல்லின் திரிவு.

(5) பதிவிரதை - கற்புள்ள பெண். ஆணைப்படி - உத்தரவுப்படி, கட்டளைப்படி.

(6) விருத்தர் - கிழவர். மிருதுவாக - மெல்ல.

(7) உச்சிட்டம் - (உண்கலத்தில் மிஞ்சியிருக்கும்) எச்சிலான உணவு. குறிப்பு - மனக்கருத்து.

(8) தலைக்கடை-தெருவாயில், தலைவாயில். பலகணி-சன்னல், பல கண்களை (துவாரங்களை) உடைய காரணத்தால் வந்த பெயர். ஆஞ்ஞை - உத்தரவு, அநுமதி. பொதுப் பெண்கள் - பரத்தையர், வேசைகள். கணைக்கால் - முழங்காலின் கீழ்ப்பாகம். தனம்-'ஸ்தனம்' என்ற வடசொல்லின் திரிவு. புன்னகை - குறுஞ்சிரிப்பு, புன்சிரிப்பு. தூர்த்தை - பலரோடுங் கூடி வாழ்பவள், தீய நடத்தையே இயல்பாக உள்ளவள். மாயக்காரி - வஞ்சனை மிகுந்தவள்.

(9) ஈசுரசங்கற்பம்-கடவுள் விதித்த விதி. பெண்டிர்-மனைவியர்.

(10) தூற்றும் - கணவனுடைய குற்றங்களைப் பலர்க்குஞ் சொல்லும். கூற்று - யமன்.

(11) ஒருமைப்பட்டு - ஒற்றுமைப்பட்டு.

(13) திருப்தி - மகிழ்ச்சி.

(14) இடம்ப நிமித்தம் - வீண் பெருமை காரணமாக, ஆடம்பரங் காரணமாக.

(15) சண்டாளி - புலைச்சி, கொலை முதலான பல பாவங்களையும் கூசாது செய்பவள். பிரமக்கொலை - பிராமணரைக் கொல்லுதல்.

(17) வெள்ளை - சுண்ணும்பு, சாம்பர். விற்கிடை - நான்கு முழ அளவு. திருணம் - புல்; ஈண்டு நாணல், கோரை, வைக்கோற்புரி போல்வன கொள்க. காஷ்டம் - தடி.

(18) பணி - வீட்டுவேலை.

(19) ருது - பூப்பு.

(20) விதவை - கைம்பெண் (வி + தவை = கணவனில்லாதவள், கணவனிறக்கப்பெற்றவள் என்றபடி.; வி - இன்மை; தவன்-கணவன்) உபவாசம் - பட்டினியிருத்தல்.

(21) சிலை - கல். அழுங்குவார் - வருந்துவார்.

(22) பரபுருஷர் - கணவனல்லாத வேறு ஆடவர்.

### வினாக்கள்.

(1] கற்பாவது யாது?

(2) பெண்ணுக்குச் சிறுபிராயத்திலே பிதாமாதாக்கள் கற்பிக்க வேண்டுவன யாவை?

(3) பதிவிரதைக்குரிய செய்கைகள் யாவை?



(4) பெண்ணின் ஒழுக்கங் கெடுதற்கு ஏதுவான செயல்கள் யாவை?

(5) பதிவிரதையானவள் பிதா மாதா முதலிய சுற்றத்தார்களெல்லாரையும் விட்டு நீங்கினும் யாரை விட்டு நீங்காள்? அது எதுபோல? விளக்குக.

(6) கற்பு நிலையின் இன்றியமையாமையையும், அதனைக் காத்தற்கு அநுகூலமான செயல்களையும் விவரிக்க.

(7) விதவைக்குரிய நியம ஒழுக்கங்களை விவரிக்க.

(8) நன்மனையாளுடைய குணஞ் செயல்கள் எவை?

### இலக்கணம்.

(1) யௌவனம், சுவாதீனர், பதிவிரதை, தலைக்கடை, புன்னகை, திருப்தி, ருது, உபவாசம்:—இவற்றின் பொருள் விளங்குதற் கேற்ற வாக்கியங்களில் அமைத்து எழுதுக.

(2) பிரித்துப் புணர்ச்சி விதி கூறுக:—நாலாநாட்டொடங்கி, புன்னகை, தன்னுயகன், விற்கிடை, சூரியோதயம், இருப்புக்குடம்.

---

## 28. வீட்டுவேலை.

### குறிப்புரை.

(2) மடைப்பள்ளி - சமையலறை.

(9) கைதுவட்டி - கையின் ஈரத்தைத் துடைக்குந் துண்டு.

(11) மண்டலம் - வட்டவடிவம். புரோக்ஷித்தல் - தெளித்தல்; (வடசொல்லடியாகப் பிறந்த தொழிற் பெயர்.)

(12) மட்பாண்டம் - மண்பாத்திரம்: பானைசட்டி முதலியன. லவணம் - உப்பு. உச்சிட்டம் - எச்சில், ஈண்டு எச்சிலாகிய உணவு உண்ட இலைபோல்வன.

(19) புண்ணியாகவாசனம் - ஆசௌச நிவர்த்திக் கிரியை.

(20) தைச்சங்கிராந்தி - தைமாதப்பிறப்பு. நவபாண்டம் - புதிய (மண்) பாத்திரம்.

### வினாக்கள்.

(1) தமது பந்திக்கு உரியரல்லாதவருக்கு அன்னங் கறி படைத்தால் கைக்கொண்டு நடக்க வேண்டும் ஆசார முறைகளை விவரிக்க.

(2) பின்பகலிலும் அஸ்தமயன காலத்திலும் செய்ய வேண்டிய வீட்டுப்பணி யாவை?

(3) அன்னங் கறி முதலியன படைக்கும்போது கையாளத்தக்க செய்கை முறைகளைச் சொல்லுக.

(4) ஆசௌச முடிவிற் செய்யவேண்டுங் கருமங்களை எழுதுக.

### இலக்கணம்.

(1) பிறவினைகளாக்குக:—எழுந்து, தெளித்தான், அகன்றார், புரள், நில், தா, போ, பயில்.

(2) பின்வரும் வாக்கியங்களைத் திருத்தி அமைக்க:—

(i) சோத்துப் பானையைத் தண்ணி ஊத்திக் கழுவிச் சுத்தி செய்து கவுத்து விடுக.

(ii) ஆப்பையாற் கறியை அள்ளி எலையிலெ படைச்சிட்டையா?



(iii) சவக்காரம் போட்டுப் பிடவையைத் துவைத்து அழுக்கைப் போக்கு.

(iv) கோயிலுக்குப் போனவங்களான சனங்களின் ஆபறணங்களைத் திருடர் களட்டிக் கொண்டு ஓடிற அப்போ பாத்திங்களா?

---

## 29. வீட்டுக்கொல்லை.

### குறிப்புரை.

(1) துர்க்கந்தம் - தீயநாற்றம். பூரித்தல் - சுவாசத்தால் உள்ளே நிரப்புதல். சடிதியில் - விரைவில்.

(4) செந்துக்கள் - பிராணிகள்.

(7) தூர் - சேறு.

(8) ஆரோக்கியம் - சுகம், நோயில்லாத தன்மை. சுசி - சுத்தம். சௌக்கியம் - சுகத்தோடு கூடியிருக்குந் தன்மை. அவிவேகம் - (அ + விவேகம்) புத்தியின்மை, அறியாமை. விவேகிகள் - அறிவுடையவர்.

### வினாக்கள்.

(1) பலவித நோய்களும் சடிதிமரணமும் எவைகளால் உண்டாகும்? அவை உண்டாகாமல் தடுக்கும் நெறியாது?

(2) கொல்லையும் வீடும் அசுசிபடையாமற் பாதுகாக்கும் முறையை விளக்குக.

(3) ஆரோக்கியத்துக்கு ஏதுவாகிய நல்ல காற்றுக் கொல்லையில் உண்டாதற்கு என்ன செய்தல் வேண்டும்?

(4) கிணற்று நீர் சுத்தமாதற்குச் செய்ய வேண்டுவன எவை?

## இலக்கணம்.

பின்வரும் வாக்கியங்களின் கருத்துச் சிதையாவண்ணம் குறித்தபடி மாற்றி வசனமமைக்க.

(1) அழுகின பதார்த்தங்களும் மலமூத்திரங்களும் துர்க்கந்தத்தை வீசும். (2-ம் வேற்றுமைப் பெயரை எழுவாயாக மாற்றுக.)

(2) இத்தன்மையுடைய சோலைகளிலே உண்டாகும் நல்லகாற்று ஆரோக்கியத்தை விளைவிக்கும். (பிறவினைப் பதத்தைத் தன்வினையாக மாற்றுக.)

(3) கிணற்றினுள்ளே இலைகள் உதிர்ந்து அழுகினாலும் சூரியகிரணம் படாதொழிந்தாலும் ஜலங் கெட்டுப் போம். (பயனிலைச் சொல்லைக் 'கெடுத்துவிடும்' என மாற்றுக.)

(4) இப்படிச் சேர்கின்ற திரளான குப்பை பயிர்களுக்கு நல்ல எருவாகுமே (எதிர்மறை வினைவாக்கியமாக மாற்றுக.)

(5) வீட்டுக்குச் சமீபத்திலே மலமூத்திரங்களை விடுதலும், எச்சிலிலைகளையும் குப்பைகளையும் போடலும், எச்சிலுமிழ்தலும் ஆகாவாம். (வினா வாக்கியமாக மாற்றுக.)

(6) விவேகிகள் இதை அவர்களுக்கு நன்றாகத் தெரியும்படி சொல்லல் வேண்டும். ('சொல்லல்' என்பதைச் 'சொல்லப்படல்' என மாற்றுக.

---



## 30. ஆரோக்கியம்.

### குறிப்புரை.

(3) சிலம்பம் - கழிவீசி விளையாடும் வித்தை, படைக்கலப் பயிற்சி. [படைக்கலம் பயிலுமிடம் 'சிலம்ப கூடம்' எனப்படும்.] வாதமும் கபமும் - வாதமும் சிலேட்டுமமும் அதிகப்படுதல். நீங்கும் - வராதொழியும் என்றபடி.

(4) மலமோசனம் - மலங்கழித்தல். சமாக்கினி - (சம + அக்கினி) [சமனம் - சீரணம்] உண்ட உணவு சமிக்க (செமிக்க, சீரணிக்க)ச் செய்யும் அக்கினி. உதராக்கினி - வயிற்றினுள்ளேயுள்ள தீ. "திண்ணம் இரண்டுள்ளே சிக்க அடக்காமற், பெண்ணின்பாலொன்றைப் பெருக்காமல் - உண்பொழுது, நீர் சுருக்கி மோர் பெருக்கி, நெய்யுருக்கி உண்பவர்தம், பேர் சொல்லப் போமே பிணி" என்னும் வைத்திய நூற் செய்யுளின் முதலாமடிக்கருத்து இங்கே குறிக் கொள்ளத் தக்கது.

(6) பறியும் பொருட்டு - வெளிப்பட்டுக் கழியும் பொருட்டு.

(7) பிராதக்காலம் - சூரியோதய முதல் ஆறுநாழிகை வரையில் உள்ள காலம், விடியல்.

(8) கிரணம் - ஒளி. பானம் - பருகுதல், குடித்தல்.

(12) பக்குவாசயம்-உண்ட உணவைச் சீரணமாக்குங் கருவியாகிய இரைப்பை.

(13) சரீரசுபாவம் - உடலின் இயல்பு; வாததேகம், பித்ததேகம், சிலேட்டுமதேகம் என்னும் மூவகைத் தேகத்துள் தன் தேகம் எவ்வகையதோ அதனுடைய இயல்பு என்றபடி. மாறு கொள்ளாதவை - மாறு ஆகாதவை,

பொருந்துவனவாகிய உணவுகள். கால இயல்பு - கோடை மாரி குளிர் பனிக்காலங்களின் தன்மையும், பகல் இரவு காலை மாலை என்ற கால வகைகளின் தன்மையுமாம்; அஃதாவது அவ்வக்காலத்துச் சீதோஷ்ண நிலைமையின் வேறுபாடு முதலாயின என்றவாறு. வாத தேகத்துக்கு ஒத்துக் கொள்ளாத உணவுப்பதார்த்தங்களை வாததேகி உண்ணலாகாது; இவ்வாறே பித்த தேகத்திற்கு ஒத்துக்கொள்ளாதவற்றைப் பித்ததேகியும், சிலேட்டும தேகத்திற்கு ஒவ்வாத பதார்த்தங்களை சிலேட்டும தேகியும் உண்ணலாகாது; இவ்வாறே அவ்வக்காலங்களின் சீதோஷ்ண நிலை முதலான இயல்புகளுக்கு ஒவ்வாத பதார்த்தங்களையும் உண்ணலாகாது என்பது கருத்து. சுவை வீரியங்களால் தம்முள் மாறு கொள்ளலாவது: தேனும் நெய்யும் தம்முள் அளவொப்பச் சேர்த்துண்டால் அவை நஞ்சாய்க் கேடு செய்தல், பாலுணவோடு புளிச்சுவையுணவையும் அடுத்து ஒருங்குண்டக்கால் அவை ஒன்றுக்கொன்று மாறுய்க் கேடுசெய்தல் போல்வன.

(14) மீட்டும் மீட்டும் - அடிக்கடி.

(18) அருசி - அரோசகம், சுவையுள்ள உணவை உண்டபோதும் அவை சுவைபற்றனவாய்த் தோன்றுதற்கு ஏதுவாய் நாவில் உண்டாகும் ஒருவகை மாற்றம்; 'வாயிலைத்தல்' எனவும்படும்; இதற்குப் பித்தம் மிகுதல் காரணமாகும்.

(19) முள்ளிக்காய்-வட்டுக்கத்தரிக்காய்; இது வட்டுக் காய் எனவும் வழங்கும்.

(20) சேஷித்த - மிஞ்சின, சேஷமான.

(21) மூன்றே முக்கால் நாழிகையுள்-சூரியோதயத்திலிருந்து $3\frac{3}{4}$-நாழிகை - காலை $7\frac{1}{2}$-மணிக்குள். பதினைந்து நாழிகையுள் - பகல் 12-மணிக்குள். ஏழரை நாழிகையுள் - இரவு 9-மணிக்குள்.



(23) அத்தியுஷ்ணம்-எலும்புச்சூடு; 'அஸ்தி' என்னும் வடசொல் திரிந்தது. அதிதாகம் - மிகுந்ததாகம்; மிக்க நாவரட்சி; 'அதி' என்னும் வடமொழி யிடைச்சொல் முதலிற் சேர்ந்து 'அத்யந்தம்' (=மிகுதி) என்ற பொருளில் வந்தது; அதிவேகம், அதிவிருஷ்டி என்பனவற்றிற் போல. இரத்த பித்தநோய் - இரத்தத்துடன் பித்தநீர் கலந்து வாந்தியெடுக்கும் நோய். இரத்தக் கொதிப்பு - இரத்தத்திற் சூடு மிகுதல்; இதனால் வரும் நோய்கள் பாண்டு, காமாலை, சோகை முதலாயின.

(24) இரேசிக்கப்பட்ட-சுவாசிக்குந்தோறும் வெளியே விடப்பட்ட. நச்சுக் காற்று-(நஞ்சு + காற்று) விஷத்தன்மை வாய்ந்த காற்று. பூரிக்கப்படும் - (மூக்கால் உள்ளே யிழுத்துச் சுவாசப்பையில்) நிரப்பப்படும். தற்காலத்தில் - (பூரிக்கப்பட்ட) அக்காலத்தில், பூரித்தவுடனே என்றபடி. விளங்கும் - புலப்பட்டுத் தோன்றும்.

(26) கம்மியர்சாலைகள் - தட்டார் கொல்லர் தச்சர் கன்னர் சிற்பிகள் ஆகிய பஞ்ச கம்மாளரின் தொழிற் சாலைகள்.

(29) சரீரமுயற்சி - உடலுறுப்புகள் யாவும் இயங்கத் தக்கவேலை; அவை: வயல்வேலை தோட்டவேலை போல்வனவும், வீடு பெருக்குதல் மெழுகுதல் நெற்குத்துதல் போல்வனவும், பந்தடித்தல் தேகாப்பியாசம் போல்வனவுமாம்; இவற்றுள் தத்தமக்கு ஏற்றன கொள்ளலாம்.

(34) மிதமாக - அளவாக, அவசியம் வேண்டுவதான அளவின் மிகாமல். இரசதாது - அன்னரசம் இரத்தமாக

மாறுமுன் உள்ளநிலையில் இரசதாது எனப்படும். இரத்த தாது - இரத்தமாகிய தாது; [இருபெயரொட்டுப் பண்புத் தொகை]; உடம்பிற்கு முதற்காரணமாகிய தோல் எலும்பு இறைச்சி முதலான ஏழ்வகைத் தாதுக்களுள் இரத்தமும் ஒன்றாகும்.

(36) வித்து - விதை, மூலகாரணம் என்றபடி.

(40) நசியம் - மூக்கினுள் இடும் மருந்து; அது பெருமருந்துபோன்ற காரமான சில மருந்துப் பொருள்களாலாகிய சூரணம், தைலம் முதலாயின; இது கழுத்துக்கு மேற்பட்ட உறுப்புக்களிலுள்ள தோஷங்களை நீக்குவதாகும். வமனமருந்து - வாந்தியெடுத்தற் பொருட்டு உட்கொள்ளும் மருந்து: இது தொண்டை, இரைப்பை முதலியவற்றைச் சுத்தப்படுத்தும்; சளி பித்த மிவற்றை வெளிப்படுத்தும்.

(41) பருப்பரைப்பு (பருப்பு + அரைப்பு) - பச்சைப் பயற்றினை அரைத்தாக்கிய அரைப்பு.

(42) இரண்டரை நாழிகை கொண்டது ஒருமணி. ஒருநாழிகை = 24-நிமிஷம் கொண்ட காலம்.

### வினாக்கள்.

(1) சூரியோதயத்துக்கு முன்னே விழித்தெழுவதால் எய்தும் நன்மைகள் யாவை?

(2) ஆரோக்கியத்துக்கு ஏதுவாயுள்ளது யாது? எவ்வாறு என்று விளக்குக.

(3) ஸ்நானஞ் செய்வதால் உண்டாகும் நன்மைகளை விவரிக்க.

(4) எவ்வகையான இயல்புடைய போசனத்தைப் புசித்தல் வேண்டும்?



(5) உடம்பினுள்ளே காரிரத்தம் நீங்கிச் செவ்விரத்தம் பெருகுதற் பொருட்டு நாம் செய்ய வேண்டுவனவும் தவிர்வனவும் யாவை?

(6) ஒழுங்காகச் செய்துவர வேண்டுவதாகிய சரீர முயற்சி (தேகாப்பியாசம்)யின் இன்றியமையாத தன்மையையும் பயனையும் விவரிக்க.

(7) நித்திரை எதன் பொருட்டு வேண்டும்? அதன் பயன் யாவை? அஃதின்மையால் வருந்தீங்குகள் யாவை?

### இலக்கணம்.

(1) உவமையணிக்கு ஓருதாரணங் கூறி, அதில் உவமானம், உவமேயம், உவமையுருபு, பொதுத்தன்மை என்னும் நான்குறுப்புக்களையும் எடுத்துக் காட்டி விளக்குக.

(2) 4-ம் பந்தியின் தொடக்கத்தில் 'ஒழுங்காகப் போசனஞ் செய்துகொண்டு வருதல் போலவே............ ஒழுங்காக மோசனஞ் செய்துகொண்டு வருதலும் ஆரோக்கியத்துக்கு ஏதுவாகும்'' என்புழி, வழியெதுகையாகிய ''பிராசம்'' என்னுஞ் சொல்லணி அமைந்துள்ளது. இதுபோல் வழியெதுகை அமைந்துவர எங்கிருந்தாவது வேறு இரண்டு உதாரணங்கள் தருக.

---

## 31. வியாதி தீர்த்தல்.

### குறிப்புரை.

(3) ஔஷதம் - மருந்து; ஓஷதிகளாலாக்கப்பட்டது என்ற காரணத்தால் வந்த தத்திதாந்தப்பெயராகிய வடசொல்; ஓஷதி - மூலிகை.

(4) பத்தியங்கள் - உண்ணத்தக்க உணவுப் பதார்த்தம் நடக்கவேண்டியமுறை முதலாயின. அபத்தியம் - (அ + பத்தியம்) பத்தியத்துக்கு மாறுனவை, தகாத உணவுப் பதார்த்தம் செய்யத் தகாத செய்கை போல்வன. குணுகுணங்கள் - (குண + அகுணம்) நன்மை தீமைகள்; (வடமொழித் தீர்க்க சந்தி பெற்ற உம்மைத்தொகையாகிய தொடர்மொழி.) பூர்வகர்மம்-முற்பிறவியிற் செய்த தீவினை. பதிபுண்ணியம் - கடவுளைக் குறித்துச் செய்யும் தவம் விரதம் பூசை தானம் முதலாயின. நிவர்த்தி செய்து கொள்ளல் - நீக்கிக் கொள்ளல்.

(5) வஸ்துக்கள் - பொருள்கள்.

(7) உத்தமோத்தமம் - (உத்தம + உத்தமம்: வடமொழிக் குண சந்தி) முதன்மையானவற்றிலும் பார்க்க மேலானவை, உத்தமம் என்ற தரத்திலும் மேற்பட்ட தரம்.

(8) கிலேசப்பட்டு - கவலைப்பட்டு. அதைரியம் - (அ + தைரியம்) தைரிய மில்லாத தன்மை; தைரியம் - தீரனுடைய இயல்பு; அது யாதொன்றுக்கும் அஞ்சாத மனத்துணிவு. சுட்டி - குறித்து.

(11) அசத்தன் - சத்தியில்லாதவன், வல்லமையற்றவன்.

(14) பக்குவாசயம் - இரைப்பை முதலிய சீரண உறுப்புக்கள்; உண்ட உணவு பக்குவமாதற்குரிய இடம் என்ற காரணத்தால் வந்த பெயர்; (பக்குவ - பாகமாதற்கு [சீரணமாதற்கு] உரிய, ஆசயம்-இடம்; வடமொழித் தீர்க்க சந்தித் தொடர்.) முட்டு - தடை; பக்குவாசயமானது தன்னிடத்து வந்த ஆகாரத்துடன் சீரணத்திரவத்தைக் கலந்து கம்பியாது உலைத்துருத்திபோலத் தான் விரிந்துஞ்



சுருங்கியும் பாகப்படுத்தும் அச்செயலுக்குத் தடையைச் செய்வதாகும் அதிக போசனமுண்ணல் என்றறிக.

(19) அநன்னியர்:—(அந் + அன்னியர்) அன்னியர் - தொடர்பில்லாதவர், உதவி செய்யமாட்டாதவர்; 'அந்' என்பது தன் பின்னே வரும் பதப்பொருளின் எதிர்மறைப் பொருளையுணர்த்த வந்த இடைச்சொல்; அநன்னியர் - அன்னியரல்லாதவர், 'தொடர்புடையவர், உதவி செய்பவர்' என்றபடி. மனைவி மக்கள் முதலிய சுற்றத்தார் தன் மரணத்தின் பின் தன்னோடு தொடர்பிலாதலும், இம்மையிற்றானும் தான் வறியவனாயக்கால் தனக்கு அன்னியராய் உதவி செய்யாமையும், பிணிமூப்பு மரணாதிகளால் வருந்துமிடத்து அவற்றை நீக்கி உதவவல்லரல்லாமையும் உடையராதலின், அவரை 'அன்னியர்' என்றும் கடவுள் உயிர்க்குயிராய் உடனுறைந்து எல்லாப் பிறவிகளிலும் ஆன்மாக்களுய்யும் பொருட்டு உதவி செய்பவராதலின் அவரை 'அநன்னியர்' என்றும் கூறினர்;

"அத்தமும் வாழ்வும் அகத்துமட் டேவிழி யம்பொழுக
மெத்திய மாதரும் வீதிமட் டேவிம்மி விம்மியிரு
கைத்தலை மேல்வைத் தழுமைந்த ருஞ்சுடு காமெட்டே
.............................."

என்னும் பட்டினத்தடிகள் வாக்காலும்,

"என்னில் யாரும் எனக்கினி யாரில்லை
என்னி லும்மினி யாவெரு வன்னுளன்
என்னு ளேயுயிர்ப் பாய்ப்புறம் போந்துபுக்
கென்னு ளேநிற்கும் இன்னம்ப ரீசனே."

என்னும் அப்பர் சுவாமிகள் தேவாரத்தாலும் அறிக.

(20) உயிர்ச்சார்பிலும் - மனைவி மக்கள் முதலான உயிர்களின் தொடர்பிலும். பொருட்சார்பிலும் - தாவர

சங்கமமாகிய திரவியங்களின் தொடர்பிலும். பற்று - ஆசை. மரிக்கும்போது - சாகுஞ் சமயத்தில். கடன் - அவசியஞ் செய்யவேண்டும் கருமம், கடமை.

### வினாக்கள்.

(1) நோயாளி நோய் நீக்கத்தின் பொருட்டு மருந்துண்ணும் முறையை விவரிக்க.

(2) நோயாளி இருக்கும் அறை எப்படிப்பட்டதாக இருத்தல் வேண்டும்?

(3) நோயாளி தன் உடம்பைச் சுத்தமாகப் பேணும் முறையை விளக்குக.

(4) எப்படிப்பட்டவர் தமக்கு இனியர்? விவரமாக உரைக்க.

### இலக்கணம்.

(1) பின்வரும் சொற்களுக்குப் பகுபத இலக்கணங் கூறுக:—முயற்சி, நுட்பம், மீளாது, உடையேம், போர்வை, வழக்கம்.

(2) பின்வருந் தொடர்களைப் பிரித்துக் காட்டுக:—மனமுயற்சி, குணகுணங்கள், பூர்வகன்மம், துக்கமுகம், சுத்தவாயு, செப்பாகம்.

---

## 32. தேவாலயம்.

### குறிப்புரை.

(1) சாந்நித்தியர்-முன்னிலையில் அணுகியவர், இந்திரியங்களுக்கு விடயமாகியவர், கண்முதலிய இந்திரியங்களால் அறிந்து வழிபடத்தக்கவர் (விளங்கி அருள் செய்பவர்) என்றபடி.



(2) வைஷ்ணவ + ஆகமங்கள் - விஷ்ணுவை முதற் கடவுளாகக் கொண்ட சமயத்துக்குரிய ஆகமநூல்கள். குருமுகமாக - குருவாயிலாக, குருவின் போதனையால். பாவனை - பாவித்தல், கருதுதல்.

(3) நெல் முதலாகிய=நென் முதலாகிய. வளங்கள் - வருவாய்கள். மசூரிகை - அம்மைநோய். விஷூசி - விஷபேதி, வாந்திபேதி; இது வாந்தியையும் கழிச்சலையும் உண்டுபண்ணும் கொள்ளை நோயாகிய தொற்று வியாதி (காலரா.) கன்னம் - கன்னக்கோலாற் சுவரகழ்ந்து திருடும் திருட்டு. களவு - ஏனைய களவுகள், தட்டார் பொன் நகைகளிற் செம்பு முதலிய கலந்து களவு செய்தல், ஸ்திரீ புருஷ சோரவொழுக்கம் போல்வன. சாவதானம் - (ஸ + அவதானம்) அவதானத்தோடு கூடிய தன்மை; 'கவனத்துடன்' என்பது உலக வழக்கு.

(6) நாலாயிரப்பிரபந்தம் - (சடகோபர் முதலிய பன்னிரண்டு ஆழ்வார்கள் பாடிய விஷ்ணுத் தோத்திரமான) நாலாயிரம் செய்யுள் கொண்ட நூல். வாக்குக்கள் - பேச்சுக்கள்.

(7) அதிகாரிகள் - தன் கடமையிலுள்ள குறை குற்றங்களை மேற்பார்வை செய்யும் உத்தியோகத்தர்; அரசாங்கசேவைப் பகுதித்தலைவர் எனினுமாம். குரோதம் - கோபம். மதம் - கர்வம். மாற்சரியம் - பொறாமை.

### வினாக்கள்.

(1) தேவாலயக் கிரியைகளைச் செய்தற்கு யோக்கியர்கள் யார்?

(2) தேவாலயக் கிரியைகள் காலந்தவறாமற் சிரத்தையோடு விதிப்படி செய்யப்படுவதால் உண்டாம் பயன்களை.......................................................விவரிக்க.

(3) எந்த நிலைமையில் தேவாலயங்களாற் சனங்களுக்குச் சிறிதும்..............................பயனுண்டாகாது?

(4) தேவாலயங்களினாற் சனங்கள் பயனடையும்படி செய்ய வேண்டுங் கருமங்கள் எவை?

### இலக்கணம்.

(1) பிரித்துப் புணர்ச்சி விகாரங்களைக் கூறுக:—கூற்றுதைந்தான், பூசைகடப்பிடிற்றுனே, பூசைகண்முட்டிடின், வணங்குன்றும், என்னருணந்தி:

(2) "ஆற்றரு நோய்மிகும்" என்ற பாடலில் அமைந்த பெயர்ச் சொற்களை எடுத்துக்காட்டி, அவை இன்ன வகையான பெயரென்பதைக் குறிக்க.

---

## 33. மடம்.

### குறிப்புரை.

(1) பரிசாரகர் - வேலைக்காரர்.

(4) விடயம் - விஷயம்; காரியம் பொருள் முதலியன. கடவுளுடைய உலகம் - சிவலோகம் முதலாயின. திவ்விய போகம் - தெய்வத்தன்மை பொருந்திய பேரின்பம். காலாந்தம் - (கால + அந்தம்) புண்ணியம் முடிவு பெற்ற காலம், அநுபவமுடிவு. சாயுச்சியம் - சிவத்துடன் இரண்டறக் கலத்தலாகிய முத்தியின்பம், பரமுத்தி.

(5) கற்பம் - உலக சிருட்டிமுதற் பிரளயம் வரையிலுள்ள காலம், இதிற் பிரமா முதலாயினோர் இறத்தலில்லை. மகா சங்காரம் - சிவம் தவிர ஏனைய காரியப் பொருளாயுள்ள எல்லா உலகமும் மாயையில் ஒடுங்குதல்.



(12) புறச் சமயிகள்-வேத சிவாகமங்களைப் பிரமாணமாகக் கொள்ளாத வேறு சமயத்தவர், உலகாயதர் முதலாயினோர். சற்சமயம் - நல்ல சமயம், உண்மைச் சமயம். நிராகரித்தல் - கண்டித்தல், உண்மைச்சமயமன்று என்று மறுத்தல்.

(13) பாசத்தார் - உறவினர்.

(17) வாடகம்: இது வாடகை என வழங்கும்.

### வினாக்கள்.

(1) மடமாவது யாது? அங்கே எவ்வெக் காரியங்களின் பொருட்டு வெவ்வேறிடங்கள் அமைக்கப்பட வேண்டும்?

(2) மடாதிபதிகளாதற்கு யோக்கியர் யார்? அவர் கடமை என்னென்ன?

(3) கன்மயாகம் முதலிய ஐவகை யாகங்கள் எவை? அவற்றைத் தனித்தனி விளக்குக.

(4) எப்படிப்பட்ட மடாதிபதிகள் போலிச் சேனாபதிகளை ஒப்பர்? ஈண்டு உவமான உவமேயங்களின் பொருத்தன்மையை விளக்குக.

(5) துறவிகளை மடாதிபதிகளாக்கின நம்முன்னோர் கருத்து யாது? விவரிக்க.

### இலக்கணம்.

பின்வரும் வாக்கியங்களில் கீறிட்ட சொற்களைக் குறிப்பிட்ட பிரகாரம் மாற்றி வசனக் கருத்துச் சிதையாதவகையால் அமைக்க.

(1) ஆசாரியரிடத்தே நல்லொழுக்கம் இல்லாதபோது அவருடைய உபதேசம் சிறிதாயினும் பயன்படாது. (எதிர்மறை வினைகளை உடன்பாட்டு வினைகளாக மாற்றுக)

(2) மடாதிபதிகள் தமது காலமெல்லாம் வீண் செலவு செய்து உலக விவகாரங்களிலே போக்குவராயின் ஏகோபோது நன்மை எப்படி நடத்தப்படும்! (2-ம் வேற்றுமைப் பெயராக மாற்றுக.)

(3) ஐயையோ அவர்களால் உலகத்தார் எப்படிக் கடைத்தேறுவர்! (எழுவாயாக மாற்றுக)

(4) மடாதிபதிகள் தம்முடைய சீடர்கள் முதலாயினோரைத் தமது உபதேசத்தினால் மாத்திரமன்றித் தமது நல்லொழுக்கத்தினாலுந் திருத்தல் வேண்டும். (சீடர்கள் முதலாயினோருடைய வினையாக மாற்றுக).

---

## 34. சத்திரம்.

### குறிப்புரை.

(2) சத்திரத்துக்கு அதிகாரிகள்-சத்திர கருமங்களை நடத்துந் தலைமை உத்தியோகத்தர். துரபிமானம் - நீதியற்ற (தீய) அபிமானம், வீண் பெருமை. நியோகித்தல் - நியமித்தல், ஏற்படுத்தல்.

(6) சந்தியாவந்தனம் - காலை மாலை உச்சிப் பொழுதுகளிற் செய்யும் தர்ப்பணம் செபம் முதலிய வழிபாடு, அனுட்டானம். மாமிச பக்ஷணம் - புலாலுண்ணல். பொய்ச் சான்று - பொய்ச்சாக்ஷி.

(8) சத்திரபதி - சத்திரத்தைக் கட்டிய முதலாளி, அதற்கு உரிமைக்காரர்.

(11) பூசை வேதிகை ஆன்மார்த்த (சிவ) பூசை செய்தற்குக் கட்டப்படும் மேடை.



(12) சமசாதியார்-தம்முள் சமமாகிய சாதியார், ஒரே சாதியார்.

(13) தோப்பு - மரச்சோலை.

(14) பூசையை-பூசைக்குரிய ஆன்மார்த்த சிவலிங்கம், பூசைப்பாத்திர முதலியவற்றை.

(16) வாசோதகம் - (வாஸ + உதகம்: குணசந்தியாய வடமொழித் தொடர்) வஸ்திரத்தின் நீர். பூசை எது: பூசை இல்லை என்றபடி.

(18) மானம் - பெருமை, மரியாதை. சயனிப்போம் - படுப்போம்.

(19) பராமுகர் - புறக்கணித்து நடப்பவர், கவனியாதவர்.

### வினாக்கள்.

(1) சத்திரமாவது யாது?

(2) சத்திர தருமம் நன்றாக நடை பெறுதற்குச் செய்ய வேண்டுவன யாவை?

(3) யார் யாருக்குக் கொடுப்பது தருமமாகும்?

(4) சத்திரத்திலே என்ன என்ன விதமான சௌகரியங்கள் அமைக்கப்படல் வேண்டும்?

(5) "கறையான் புற்றெடுக்கப் பாம்பு குடிபுகுந்தாற் போல" இப்பழமொழியை உபயோகித்த சந்தர்ப்பத்தை யும், இதனால் அறிவுறுத்தப்பட்ட அறிவுரையையும் கூறி விளக்குக.

### இலக்கணம்.

(1) 8-ம் பந்தியிலுள்ள வாக்கியங்களுக்கு எழுவாய் பயனிலைகளை எழுதுக.

(2) அல்லர், ஒத்தது, வறியவர், மற்றவர்கள், யாது, வந்தவர், ஆராய்ச்சி இவற்றின் பகுதிகள் யாவை?

---

## 35. தேவாலய தரிசனம்.

### குறிப்புரை.

(1) தேவாலயம் - (தேவ + ஆலயம்) தேவர்களுக்கு (தேவபூசை வழிபாடுகட்கு) உரிய ஆலயம்.

(5) அட்டாங்கம் (அட்ட + அங்கம்) எட்டு அவயவங்கள். பஞ்சாங்கம் (பஞ்ச + அங்கம்) ஐந்து அவயவங்கள். திரயாங்கம் (திரய + அங்கம்) மூன்று அவயவங்கள்.

(10) பிரதக்ஷிணம் - வலமாகச் சுற்றுதல், வலம் வருதல்.

(13) ஆவரணம் - பிராகாரம், சுற்றுவீதி. தூபி - கோயில் முடி, கருப்பக்கிருகத்தின்முடி. துசத்தம்பம் - கொடிமரம்.

(15) உரோமஞ்சிலிர்ப்ப - உடம்பில் மயிர்சிலிர்ப்ப, புளகம் உண்டாக. ஆனந்தவருவி (ஆனந்த + அருவி) ஆனந்தக்கண்ணீர்; (அருவிபோல் விழுங் கண்ணீர்க்கு அருவி என்ற பெயர் உவமவாகுபெயர்.)

(16) கர்ப்பூர + ஆராத்திரிகம் - கர்ப்பூர ஆலாத்தி. பணிமாறல் - சுற்றி உபசரித்தல். அருச்சகர் - பூசகர்.

(18) தம்பலம் - வெற்றிலை பாக்குத்தின்ற எச்சில். உத்தரீயம்-சால்வை, அங்கவஸ்திரம். பாதரக்ஷை-செருப்பு முதலியன. சாயை - நிழல். நிர்மாலியம் - சுவாமிக்கு நிவேதித்த திருவமுது போல்வன; சுவாமிக்குச் சாத்திய விபூதி சந்தனம் தீர்த்தம் என்ற இவை விநியோகத்துக்குக் கோயில் வாயிலில் வைக்கப்பட்டிருப்பினும் அருச்சகர் தர வாங்கலாமேயன்றித் தானாகத் தீண்டி யெடுத்தலும் குற்றமாம் என்றறிக. அகாலத்திலே - தரிசனஞ் செய்யலாகாதென்று விலக்கப்பட்ட காலத்தில், அவை அபிஷேககாலம் நைவேத்தியகாலம் போல்வன.



### வினாக்கள்.

(1) அட்டாங்க நமஸ்காரமாவது யாது? அதனைச் செய்யும் முறைமையை விவரித்துரைக்க.

(2) எந்த எந்தத் தெய்வங்களுக்கு எத்தனை எத்தனை முறை பிரதக்ஷிணம் பண்ணல் வேண்டும்? பிரதக்ஷிணமாவது யாது?

(3) திருக்கோயிலிலே செய்யத்தகாத குற்றங்கள் எவை?

(4) திரயாங்க நமஸ்காரமாவது யாது?

### இலக்கணம்.

(1) 18-ம் பந்தியிலுள்ள வடசொற்களை எடுத்து எழுதுக.

(2) பின்வரும் வடமொழிச் சந்தியாகிய தொடர்மொழிகளைப் பிரித்துக் காட்டுக:—தேவாலயம், அட்டாங்கம், பஞ்சாங்கம், திரயாங்கம், கர்ப்பூராராத்திரிகம், சனனசௌசம், மரணசௌசம், அகாலம்.

---

## 36. புராணபடனம்.

### குறிப்புரை.

(7) குணத்துக்கும் காலத்துக்கும் ஏற்ற இராகம் - வீரம் முதலிய ஸ்வரசங்களுக்கும் (இளவேனில் முதலிய) பெரும் பொழுது (விடியல் முதலான) சிறு பொழுதுகளுக்கும் இயைந்த இராகம்; காம்போதி அசாவேரி தன்னியாசி இவை வசந்த கால இராகங்கள்; பூபாளம் நாட்டை முதலாயின விடியலிராகங்கள்; பிறவிரிவுகளை இசைநூல் வல்லாரிடம் கேட்டறிக.

### வினாக்கள்.

(1) புராணபடனத்திற்கு உரிய இடங்கள் யாவை?

(2) புராணபடனத்திற்கு யோக்கியராவார் யாவர்?

(3) புராணபடன காளிலே படித்தல், பொருள் சொல்லல், கேட்டல் ஆகியவைகளைச் செய்வோர் என்ன நியமங்களை அனுட்டித்து எப்படி அவைகளைச் செய்தல் வேண்டும்?

(4) புராணங் கேட்பவர் புராணமுற்றுப் பெற்ற தினத்திலே என்ன செய்தல் வேண்டும்?

### இலக்கணம்.

பிழையுளவேல் திருத்தி அமைக்க:—

(1) புராணப்படனமாவது புராணத்தை ஒருத்தர் வாசித்து ஒருத்தர் பொருள் சொல்லலாம்.

(2) புராணத் திருமுரையை சந்தனம், புஸ்ப்பம், துபத்தீபங்களால்ப் பூஸை பண்ணி நமஸ்க்கரித்து படிக்கத் திடங்க வேணும்.



(3) ஸ்னானஞ் செய்து தோய்ச்சுலர்ந்த வஸ்த்திரந் தரித்து அனுட்டானம் முடித்துக் கொண்டே புராணங் கேள்க்க வேண்டும்:

---

## 37. சிராத்தம்.

### குறிப்புரை.

(3) ஆமசிராத்தம்-அரிசி காய்கறி முதலிய பொருள்களாற் செய்யும் சிராத்தம்; ஆமம் - பாகஞ் செய்யப்படாத பொருள்கள். இரணிய சிராத்தம் - அன்னத்திற்குப் பதிலாகப் பொன்னைக் கொடுத்துச் செய்யும் சிராத்தம்; இரணியம் - பொன் = காசு.

(7) யவம் ஒருவகைத்தானியம் (வாற்கோதுமை.) முள்ளிக்காய் - வட்டுக்கத்தரிக்காய்.

(13) வரித்தல் - நியமித்தல். உதகம் - நீர்.

(14) சிராத்த கருத்தா - சிராத்தஞ் செய்பவன். வரிக்கப்பட்டவர் - பிதிர்களின் ஸ்தானத்தில் நியமிக்கப் பட்டவர்.

(16) விக்கிரயம் - விற்றல்.

(17) புரோகிதர் - வைதிகக்கிரியை ஆகமக்கிரியைகளை ஆசாரியனாக இருந்து நடத்துவிப்போர்.

(19) துரிதம் - விரைவு.

(21) திலதர்ப்பணம் (பிதிர்களைக் குறித்து மந்திரத்துடன்) எள்ளுடன் கலந்த நீரைக் கைகளால் இறைத்தல்.

### வினாக்கள்.

(1) அன்ன சிராத்தம் செய்தற்குரியார் யார் யார்? அவர்கள் எவ்வெக்காலத்தில் மாத்திரம் ஆமசிராத்தஞ் செய்யலாம்.

(2) சூத்திரர் முதலாயினோர் என்ன சிராத்தஞ் செய்தல்வேண்டும்? அது செய்ய இயலாவிடத்து என்ன செய்யலாம்?

(3) அன்ன சிராத்தஞ் செய்தற்குரிய காலம் யாது? ஆம சிராத்தஞ் செய்தற்குரிய காலம் யாது? அக்காலங்களை விவரித்து விளக்குக.

(4) சிராத்தத்தின் பொருட்டு வரிக்கப்பட வேண்டிய தான பாத்திரங்கள் எத்தனை பேர்? விவரமாக எழுதுக.

(5) சிராத்த கருத்தாவும், சிராத்தத்தின் பொருட்டு வரிக்கப்பட்டவரும் மேற்கொண்டொழுக வேண்டிய நியமங்கள் எவை?

### இலக்கணம்.

(1) பின்வரும் இணைச் சொற்களைப் பொருள் வேறுபாடு தோன்ற தனித்தனி வாக்கியங்களில் அமைத்தெழுதுக:—

(i) அறுகு - அருகு. (iv) அரை - அறை.
(ii) இற - இர. (v) கருத்து - கறுத்து.
(iii) வாழை - வாளை. (vi) வாழ் - வாள்.

(2) பின்வரும் சொற்களுக்கு எதுகைத் தொடையமைந்த மும்மூன்று சொற்கள் எழுதுக.

(i) குட்டம் (iv) பாத்திரம்
(ii) கலம் (v) தானம்
(iii) உறுப்பு (vi) எருமை

---



## 38. தமிழ்.

### குறிப்புரை.

(2) திருவேங்கடம்: இக்காலத்துத் 'திருப்பதி' என வழங்கும் மலை; பிரசித்தமான விஷ்ணு ஸ்தலமாக உள்ளது. கன்னியா குமரி - கன்னியா குமரி முனைக் கடல்; இந்தியாவின் தெற்கந்தத்திலுள்ளது இது.

(3) செவியறிவுறுத்தருளினர் - போதித்தருளினர், உபதேசித்தார்.

(4) வழிப்படுத்தார் - வழிநூல் செய்தார்.

(9) அகப் பொருணூல் - (அகப்பொருள் + நூல்) அகப் பொருளாகிய களவு கற்பென்னும் உலக இன்ப ஒழுக்கத்தின் இலக்கண நூல். திருவவதாரமாய் - (திரு + அவதாரமாய்) உயர்ந்த பிறவி யெடுத்து. பிராயம் - வயசு.

(11) ஆன்றோர்கள் - பெரியோர்கள். "உலகமெலாந் தொழுது":—உலகம் - இடவாகு பெயராய் உலகத்தவரை உணர்த்திற்று. கடல் வரைப்பு - கடலாகிய எல்லையையுடையது, பூமி; (அன்மொழித் தொகைப் பெயர்.)

(1) வடமொழிக்கும் தமிழ் மொழிக்கும் சிறந்த இலக்கண நூல் எவை? அவற்றின் ஆசிரியர்கள் யார் யார்?

(2) அகத்தியத்தின் கண்ணே கூறப்பட்ட தமிழிலக்கண வகை யாவை? அவை எவ்வாறு அமைத்துக் கூறப்பட்டன?

(3) அகத்தியத்தின் வழிநூல்களுள் இயற்றமிழ்க்குச் சிறந்த வழிநூல் யார் செய்தனர்? அதன் பெயர் யாது?

(4) கடைச் சங்க வரலாற்றைப்பற்றி ஒரு சிறு கட்டுரை எழுதுக.

(5) "இறையனர் அகப் பொருள்" என்ற நூலைப் பற்றி அறிந்த மட்டில் கூறுக.

## இலக்கணம்.

(1) காஞ்சிப்புராணச் செய்யுள் இரண்டின் பொழிப்பும் உரை நடையில் எழுதுக.

(2) "கண்ணுதற் பெருங்" என்ற செய்யுளடிகளில் அமைந்த மோனைத்தொடைச் சொற்களையும், எதுகைத் தொடைச் சொற்களையும் அட்டவணைப்படுத்தி எழுதுக.

(3) விதிகாட்டிப் புணர்த்தி எழுதுக:—(i) முதல்+நூல்கள். (ii) முருகன்+கடவுள். (iii) இயல்+தமிழ். (iv) வடக்கு+திசை. (v) கடைச்சங்கம்+புலவர்.

---

# 39. காலப்பிரமாணம்.

## குறிப்புரை.

காலப் பிரமாணம் - கால அளவை, கால அளவு.

(1) நிமிஷம்-ஓர் இமைப்பொழுது; 'நிமேஷம்' எனவும் படும்.

((2) பரார்த்தம்-(பர+அர்த்தம்) பரத்தினது பாதி; பிரமாவினது ஆயுட்காலத்தின் பாதி என்றபடி.

(3) தேவமானம் - தேவர்களுக்குரிய கால அளவு (வருஷ அளவு.) மனுஷியமானம் - மனிதர்களுக்குரிய கால அளவு (வருஷ அளவு.)

(4) தினப்பிரளயம் - (பிரமாவின்) ஒருநாளில் உண்டாகும் உலக அழிவு.



(6) தற்காலத்திலே - இக்காலத்திலே. சுவேத வராகம்:—சுவேதம் - வெள்ளை; வராகம் - பன்றி.

(7) சௌரமானம் - சூரியனது கதியால் கணிக்கும் (மாசம் முதலிய) அளவு; சௌரம்-சூரியன் சம்பந்தமானது; மானம் - அளவு. சாந்திரமானம் - சந்திரனது சஞ்சாரத்தால் கணிக்கப்படும் (மாசம் முதலிய) கால அளவு; சாந்திரம் - சந்திரன் சம்பந்தமானது.

## வினாக்கள்.

(1) நிமிஷம் முதல் 1-நாள் வரையிலுள்ள கால அளவை வாய்பாடுகளை எழுதுக.

(2) பக்ஷம், மாசம், அயனம், வருஷம்; இக்காலங்களின் அளவை விளக்குக.

(3) தேவர்களுக்குப் பகற் காலம் யாது? இராக்காலம் யாது?

(4) தேவர்களுக்குரிய ஒரு நாள், ஒரு வருஷம் என்பவற்றை மனுஷியமானத்தால் எவ்வளவு காலம் என்று விளக்குக.

(5) பிரமாவின் ஒரு பகலில் எத்தனை மநுக்கள் அதிகாரம் பண்ணுவர். எத்தனை இந்திரர் இறப்பர்?

(6) சௌரமான வருஷம் சாந்திரமான வருஷம் என்ற இரண்டினையும், தொடக்க முடிவுகளைக் கூறி விளக்குக.

(7) 'அதிக மாசம்' என்பது யாது? விவரமாக விளக்குக.

## இலக்கணம்.

(1) முற்பாடத்தில் வந்த "வடமொழியைப் பாணினிக்கு" என்ற செய்யுளில், 'உலகம்' 'கடல் வரைப்பு' என்ற இரண்டு சொல்லுக்கும் இலக்கணக் குறிப்பு எழுதுக.

(2) ஆகுபெயராவது யாது? அது எத்தனை வகைப்படும்? நான்கு வகைக்கு உதாரணந் தந்து அவற்றை விளக்குக.

(3) அன்மொழித் தொகையாவது யாது? இரண்டு உதாரணங் காட்டி விளக்குக.

---

ஸ்ரீலஸ்ரீ. ஆறுமுகநாவலரவர்களது

# நான்காம் பாலபாடம்

## செய்யுட்பாக அநுபந்தம்.

# இரண்டாம்பிரிவு.

# கந்தபுராணம்.

## மகேந்திரகாண்டம்.

### அவைபுகுபடலம்.

௧.௬ — ௧௪௦.

ஆண்டளப்பிலகோற்றனைவேள்வியின்ருற்றி
மூண்டதீயிடைமூழ்கினேனுக்கெங்கைதமுன்னளித்த
மாண்டிடாதபேராயுளைத்திருவொடும்வாளா
வீண்டொர்புன்னெறியாற்றியேயிழக்குவதியல்போ. (௪0௯)

ஈசடமேற்படுவனத்தொடுநீயுநின்றமரு
மூப்பவேண்டுமேலமரர்தஞ்சிறையினையொழித்து
வையமேலறத்தியல்புளிவாழிமற்றிதனைச்
செய்பலாயெனினீங்குவந்தடுவனுற்றிண்ணம். (௪௧0)

என்றுமற்றிவையானவையும்வரைபகவெறிந்தோ
னுன்றனக்கறைகென்றனனீங்குநீயும்பர்
வன்றனைச்சிறைநீக்கியேயறத்தினிவ்வளத்தை
நன்றுதுய்த்தனைநெடிதுநீவாழ்கெனநவின்றான். (௪௧௧)

மறமகன்றிடாவீரனிங்கிவையனவகுத்தே
யறையும்வாசகங்கேட்டலும்வெகுளிமூளத்தன்
பொறியுமிழ்ந்திடுகண்ணினன்புகையுமிழுயிர்ப்ப
னெறியுமங்கையனிறந்திடுமுறுவலனிசைப்பான். (௧௰௨)

மேலையாயிரத்தெட்டெனுமண்டமும்வென்றே
யேலுகின்றதோர்தனியிறையாகியவெனக்குக்
கோலவாலெயிறின்னமுந்தோன்றிலாக்குதலைப்
பாலனோகொலாமினையனபுந்திகள்பகர்வான். (௧௰௩)

விறலின்மேதகுமவுணராம்வலியிலார்மிகவும்
வறியராகியதேவராமேலவர்மழலைச்
சிறுவராந்தனிமுதல்வற்குமனமச்சியல்செய்வா
ரறியுநேமிசூழுலகத்தவர்முக்கணன்றிறலே. (௧௰௪)

கறைகொடார்முடியவுணர்தங்குலத்தினைநலித்து
வறுமைசெய்தனர்கடவுளரவர்திருமாற்றிக்
குறியவேவலுங்கொண்டனனொழுக்கமுங்கொன்றேன்
சிறையும்வைத்தனனங்குடித்தமர்முறைசெய்தேன். (௧௰௫)

கொடியமான்மகனுறங்குநாளாணையைநீக்கித்
தொடுபெருங்கடலுலகெலாங்கொள்ளினுஞ்சுரரை
விடுவனல்லன்யான்வீடருஞ்சிறையினைவின்மே
லுடையவண்டத்தினுச்சியினொருதலையுய்ப்பேன் (௧௰௬)

தப்பல்செய்திடுமகபதிமுதலினோர்தமையு
மிப்பதிக்கணேகொணர்ந்தனன்சிறைசெயவிருந்தேன்
கைப்புகுஞ்சிறைவிடுவனோவிடுகிலன்கண்டா
யொப்பருந்திறற்சூரனென்றொருபெயருடையேன். (௧௰௭)

பின்னுமச்சிரப்படிவமும்வேறுபல்வரமு
முன்னொர்ஞான்றுதன்றுணைபெற்களித்திடுமுறையைப்



பின்னர்யாவரேபெயர்ப்பவர்பெருஞ்சமரியற்றி
யென்னையாற்றலால்வென்றிடுநீர்மையோரெவரே. (௧௰௮)

தானமாமுகத்தாரகவெம்பியைத்தடிந்த
மானவேற்படையவன்பிசைவருவதுவலித்தேன்
பானல்வாய்ச்சிறுசேயொடுநீயமர்பயிற
லூனமேயெனத்தடுத்தனராதலாதொழிந்தேன். (௧௰௯)

தூங்குகையுடைத்தாரகனிளவலைத்தொல்லை
யோங்குறன்னொடுமட்டதுமென்னவேயுணர்ந்தேன்
பாங்கினோரையப்பாலன்மேலுந்தியென்பழியும்
வாங்குகின்றனனுன்னையேகாண்டியான்மன்னோ. (௨௰)

அரிகளெண்ணிலரிந்திரரெண்ணிலரல்லாச்
சுரர்களெண்ணிலரண்டங்கடொறுந்தொறுமிருந்தார்
செருவினாற்றலர்வழுத்தியேபோயினர்சிவன்க
ணொருவல்வந்திடிற்சிறுவனோவென்னெதிர்நிற்பான். (௨௰௧)

ஓதியென்பலவமரரைவிடுகிலனுணர்ச்சி
யேதுமில்லதோர்மகவுதன்புன்மொழியேற்றுப்
பேதையாதவினொற்றனாய்வந்தனைபிழைத்துப்
போதியின்னுயிர்தந்தனன்யாவெனப்புகன்றான். (௨௰௨)

அகிலமாள்பவனிங்கிவைமொழிதலுமையன்
வெகுளிவெங்கனல்சிந்திடவுளஞ்சுடவெகுண்டு
புகையுமங்கியுமுயிர்ப்புறமயிர்ப்புறம்பொடிப்ப
நகையும்வந்திடச்சிவந்திடவிழியிவைவில்வான். (௨௰௩)

உய்யலாவதோர்பரிசினையுணர்வுறுதமுதுங்
கையகேண்மதிகட்செவிமதியொடுகலந்த
செய்யவார்சடைப்பரம்பொருட்டிருநுதல்விழிசே
யையன்மேதகவுணர்க்கிலைடாலனென்றறைந்தாய். (௨௰௪)

வானுடற்றனைத்தேவென்பர்வானகத்தவரை
யேனைமுத்தொழிலவரென்பரிருவர்தங்களையு
மானிலத்தினிற்பரம்பொருளிவரெனாவிஃவா
ரானசொற்றிறமுகமனேசாதமற்றன்றால். (௯௫)

ஆயபுன்னிபுகழ்ச்சிபோற்கொள்ளலைதிவேவார்
தேய * மாலதுயார்க்குமெட்டாததுதெளிவிற்
றாயவீடுபேறருளுவதுபரிடத்துணிவாம்
வாய்மையாவதுபுகலுவன்கேளெனவகுப்பான். (௯௬)

மன்னனார்திருமாலுமன்னமேலவனு
மெண்ணரும்பகலேடியுங்காண்கிலாதிருந்த
பண்ணவன்னுதல்விழியிடைப்பரஞ்சுடருருவா
யுன்னிரந்தபேரருளினான்மதலையாயுதித்தான். (௯௭)

முன்னவர்க்குமுன்னாகுமேவார்தமக்குமுற்பட்டுத்
தன்னைநேரிலாவீசனுந்தனிப்பெயர்தாங்கி
யின்னுயிர்க்குயிராயருவுருவமாயெவர்க்கு
மன்னாயகனையாயிருந்திடும்பரமனேயவன்காண். (௯௮)

ஈசனேயவனுடலான்மதலையாயினன்கா
ணாசிலாவவனறுமுகத்தன்மையாலறிவீ
பேசிலாக்கவன்பரனெனும்பேதகனல்லன்
றேசுலாவகன்மணியிடைக்கதிர்வருதிறம்போல். (௯௯)

பூரணமர்திருட்டிமுவிலைத்தாகியபுவியு
மோருயின்றபல்லண்டத்திலொராயிரத்தெட்டுக்
கோதிலாக்கரும்படைகளுமுனக்குமுன்கொடுத்த
னாதிவீசனேயவனெனின்மாற்றுவதரிதோ. (௱)

* தேயம் - பிரகாசிக்கப்படுவது.



அதமில்புவியண்டங்கள்பெற்றனமென்றே
பேதையுன்னினைசிறிதவன்றன்னருள்பெறுவோர்
பூதமைந்தினுமேனையதிறத்தினும்புறத்து
மீதுமாமண்டமெவற்றிற்கும்வேத்தியல்புரிவார். (௱௧)

ஆதியாகியகுடிலையுமைவகைப்பொறியும்
வேதம்யாவையுந்தந்திரப்பன்மையும்வேறு
மோதநின்றிடுகலைகளுமவ்வவற்றுணர்வாம்
போதம்யாவையுங்குமரவேள்பொருவிலாவுருவம். (௱௨)

எங்கணும்பணிவதனங்களெங்கணும்விழிக
ளெங்கணுந்திருக்கேள்விகளெங்கணுங்கரங்க
ளெங்கணுந்திருக்கழலடியெங்கணும்வடிவ
மெங்கணுஞ்செறிந்தருள்செயுமறுமுகத்திறைக்கே. (௱௩)

தாமரைக்கணன்முதலியபண்ணவர்தமக்கு
மேமுறப்படுமறைக்கெலாமாதிபெற்றியது
மோமெனப்படுங்குடிலையேயொப்பிலாமுருகன்
மாமுகத்துளொன்றுமவன்றன்மையார்வகுப்பார். (௱௪)

முக்கண்மூர்த்தியுமாங்கவன்முண்டகாசனனுஞ்
சக்கரப்படையண்ணலுமாங்கவன்றனே
திக்குப்பாலருங்கதிர்களுமுனிவருஞ்சிறப்பின்
மிக்கதேவருமாங்கவன்யாவர்க்குமேலோன். (௱௫)

ஈட்டுமன்னுயிரெவற்றிற்குமிருவினைப்பயனைக்
கூட்டுவானவனுங்கவைதுலையெனக்கூடின்
வேட்டமேனிலைக்கதிபுரிவானவன்மேலாய்க்
காட்டுவான்முதற்றிறமெலாமாங்கவன்கண்டாய். (௱௬)

சிறுவன்போலுறுங்குரவனேபோலுறுந்தினையிற்
குறியன்போலுறுநெடியவனாகியுங்குறுகு

நெறியினின்னனம்வேறுபல்லுருக்கொடுநிலவு
மறிவர்காடருங்கந்தவேள்கடவாரதிவார். (௧௩௭)

சிவனதாடலின்வடிவமாயுற்றிடுஞ்செவ்வே
ளவனதாணையினன்றியேபெயர்கிலாதணுவு
மெவரவன்றனியாற்றலைக்கடந்தவரிவணீ
தவமயக்கினையவன்றனிமாணையிற்சார்வாய். (௧௩௮)

எல்லையில்லதோர்பொருளெலாமாகுறமியாவு
மல்லனாகியுமிருந்திடுமருவுருமாகும்
பல்வகைப்படுமுருக்கொளும்பதியிற்பயிலுந்
தொல்லையாதியாமநாதியுமாகியேதான்றும். (௧௩௯)

வாரிவீழ்தரும்புன்னுனித்துள்ளிகண்மான
னேரிலாதமர்குமாரவேளினடியபேருருவி
னோருரோமத்தினுலப்பிலாவண்டங்களுதிக்கு
மாரவன்றிருமேனியின்பெருமையையறிவார். (௧௪௦)



உ

கணபதி துணை.

# பெரிய புராணம்.

## திருநாவுக்கரசுநாயனார் புராணம்.

௩௫௩ — ௩௫௭.



அன்ன நாடு கடந்து கங்கை யணைந்து சென்று வலங்கொளு
மின்னு வேணியர் வாரணாசி விருப்பி னோடு பணிந்துடன்
பின்ன ணைந்தவர் தம்மை யங்க ணொழிந்து கங்கை கடந்துபோய்
மன்னு காதல்செய் நாவின் மன்னவர் வந்து கற்சுர முந்தினார். ( )

மாக மீது வளர்ந்த கானக மாகி யெங்கு மனித்தரா
போக வாநெறி யன்றி யும்புரி கின்ற காதல் பொலிந்தெழச்
சாக மூல பலங்க ளெப்பது வுந்த விர்ந்து தனித்தநே
ரேகி னாரிர வும்பெ ருங்கயி லைக்கு லக்கிரி யெய்துவார். (௩௫௪)

ஆய வாரிரு ளின்க ணேகுமவ் வன்பர் தம்மை யணைந்துமுன்
தீய வாய விலங்கு வன்றொழில் செய்ய வஞ்சின நஞ்சுகால்
வாய நாக மணிப்ப ணங்கொள் விளக்கெ டுத்தன வந்துகா
ணேய வானவ ராயி னுந்தனி நள்ள ருஞ்சுர மன்னினார். (௩௫௫)

வெங்க திர்ப்புக லக்க டத்திடை வெய்ய வன்கதிர் கைபரந்
தெங்கு மிக்க பிளப்பி னுகர்த மெல்லை புக்கெரி கின்றன
பொங்க ழற்றெறு பாலைவெந்நிழல் புக்க கூழல் புகும்பகற் [னார்.
செங்க திர்க்கனல் போது மந்திசை நின்மை மெய்த்தவர் நண்ணி

இங்க ணம்பிர வும்ப கற்பொழு தும்ம ருஞ்சுர மெய்துவார்
பங்க யம்புரை தாள்ப ரட்டள வும்ப சைத்தசை தேயவு
மங்கை பங்கர்தம் வெள்ளி மால்வரை வைத்த சிந்தை மறப்பரோ
தங்க ரங்க ளிரண்டு மேகொடு தாவி யேகுதல் மேவினார். (௩௫௭)

கைக ளும்மணி பந்த சைந்தற வேக ரைந்து சிதைந்தபின்
மெய்க லந்தெழு சிந்தை யன்பின் விருப்பு மீமிசை பொங்கிட
மொய்க ளிங்கனல் வெம்ப ரற்புகை மூளு மத்த முயங்கியே
மைகொள் கண்டர்த மன்பர் செல்ல வருந்தி யுந்தினர் மார்பினால்.

மார்ப முந்தசை நைந்து சிந்தி வருந்த வென்பு முரிந்திடச்
சேர்வ ருங்குறி நின்ற சிந்தையி னேச மீசனை நேடநே
ரார்வ மங்குயிர் கொண்டு கைக்கு முடம்ப டங்கவு மூன்கெடச்
சேர்வ ரும்பழு வம்பு ரண்டு புரண்டு சென்றனர் செம்மையோர். ()

அப்பு றம்புரள் கின்ற நீளிடை யங்க மெங்கு மரைந்திடச்
செப்ப ருங்கயி லைச்சி லம்படி சிந்தை சென்றுறு மாதலால்
மெய்ப்பு றத்தி லுறுப்ப ழிந்தபின் மெல்ல வுந்து முயற்சியுந்
தப்பு றச்செய லின்றி யங்கெறி தங்கி னார்தமி ழாளியார். (௩௬௦)

வேறு.

அன்ன தன்மையர் கயிலையை யணைவதற் கருளார்
மன்னு தீந்தமிழ் புவியின்மேற் பின்னையும் வழுத்த
நன்னெடும் புனற் றடமுமொன் றுடன்கொடு நடந்தார்
பன்ன கம்புனை பரமரோர் முனிவராம் படியால். (௩௬௧)

வந்து மற்றவர் மருங்குற வணைந்துநேர் நின்று
னொந்து நோக்கிமற் றவரெதிர் நோக்கிட நவில்வார்
சிந்தை யிவ்வுறுப் பழிந்திட வருந்திய திறத்தா
லிந்த வெங்கடத் தெய்திய தென்னென விசைத்தார். (௩௬௨)

மாசில் வற்கலை யாடையு மார்பின்முந் நூலுந்
தேசு டைச்சடை மவுலியு நீறுமெய் திகழ
வாசின் மெய்த்தவ ராகிநின் றவர்தமை நோக்கிப்
பேச வுற்றதோ ருணர்வுற விளம்புவார் பெரியோர். (௩௬௩)

வண்டு லாங்குழன் மலைமக ளுடன்வட கயிலை
யண்டர் நாயக ரிருக்குமப் பரிசவ ரடியேன்



கண்டு கும்பிட விருப்பொடுங் காதலி னடைந்தேன்
கொண்ட வென்குறிப் பிதுமுனி யேயெனக் கூற. (௩௬௪)

கயிலை மால்வரை யாவது காசினி மருங்கு
பயிலு மானுடப் பான்மையோ ரடைவதற் கெளிதோ
வயில்கொள் வேற்படை யமரரு மணுகுதற் கரிதால்
வெயில்கொள் வெஞ்சுரத் தென்செய்தீர் வந்தென விளம்பி.

மீளு மத்தனை யுமக்கினிக் கடனென விளங்குந்
தோளு மாகமுந் துவளுமுந் நூன்முனி சொல்ல
வாளு நாயகன் கயிலையி லிருக்கைகண் டல்லான்
மாளு மிவ்வுடல் கொண்டுமீ ளேனென மறுத்தார். (௩௬௫)

ஆங்கு மற்றவர் துணிவறிந் தவர்தமை யறிய
நீங்கு மாதவர் விசும்பிடைக் கரந்துநீண் மொழியா
லோங்கு நாவினுக் கரசனே யெழுந்திரென் றுரைப்பத்
தீங்கு நீங்கிய யாக்கைகொண் டெழுந்தொளி திகழ்வார். ()

அண்ண லேயெனை யாண்டுகொண் டருளிய வமுதே
விண்ணி லேமறைந் தருள்புரி வேதநா யகனே
கண்ணி னாற்றிருக் கயிலையி லிருந்தநின் கோலம்
நண்ணி நான்றொழ நயந்தருள் புரியெனப் பணிந்தார். ()

தொழுதெ ழுந்தநற் றொண்டரை நோக்கிவிண் டலத்தி
லெழுபெ ருந்திரு வாக்கினா லிறைவரிப் பொய்கை
முழுகி நம்மைநீ கயிலையி லிருந்தவம் முறைமை
பழுதில் சீர்த்திரு வையாற்றிற் காணெனப் பணித்தார். ()

ஏற்றி னாரரு ளலையிசைக் கொண்டெழுந் திறைஞ்சி
வேற்று மாகிவிண் ணாகிநின் றார்மொழி விரும்பி
யாற்றல் பெற்றவவ் வண்ணலா ரஞ்செழுத் தோதிப்
பாற்ற டம்புனற் பொய்கையின் மூழ்கினார் பணியால். ()

ஆதி தேவர்தந் திருவருட் பெருமையா ரறிந்தார்
போத மாதவர் பனிமலர்ப் பொய்கையின் மூழ்கி
மாதொர் பாகனார் மகிழுமை யாற்றிலோர் வாவி
மீது தோன்றிவந் தெழுந்தன ருலகெலாம் வியப்ப. (கூஎக)

வம்பு லாமலர் வாவியின் கரையில்வந் தேறி
யும்பர் நாயகர் திருவருட் பெருமையை யுணர்வா
ரெம்பி ரான்றருங் கருணைகொ லிதுவென விருகண்
பம்பு தாரைநீர் வாவியிற் படிந்தெழும் படியார். (கூஎஉ)

மிடையு நீள்கொடி வீதிகள் விளங்கிய வையா
றுடைய நாயகர் சேவடி பணியவந் துறுவா
ரடைய வப்பதி நிற்பவுஞ் சரிப்பவு மான
புடைய மர்ந்ததந் துணையொடும் பொலிவன கண்டார். ()

பொன்ம லைக்கொடி யுடனமர் வெள்ளியம் பொருப்பிற்
றன்மை யாம்படி சத்தியுஞ் சிவமுமாஞ் சரிதைப்
பன்மை யோனிகள் யாவையும் பயில்வன பணிந்தே
மன்னு மாதவர் தம்பிரான் கோயின்முன் வந்தார். (கூஎச)

காணு மப்பெருங் கோயிலுங் கயிலைமால் வரையாய்ப்
பேணு மாலய னிந்திரன் முதற்பெருந் தேவர்
பூணு மன்பொடு போற்றிசைத் தெழுமொலி பொங்கத்
தாணு மாமறை யாவையுந் தனித்தனி முழங்க. (கூஎ௫)

தேவர் தானவர் சித்தர்வித் தாதர ரியக்கர்
மேவு மாதவர் முனிவர்கள் புடையெலா மிடையக்
காவி வாள்விழி யரம்பையர் கானமு முழவுந்
தாவி லேழ்கடன் முழக்கினும் பெருகொலி தழைப்ப. ()

கங்கை யேமுதற் றீர்த்தமாங் கடவுண்மா நதிகண்
மங்க லம்பொலி புனற்பெருந் தடங்கொடு வணங்க



வெங்கு நீடிய பெருங்கண நாதர்க ளிறைஞ்சப்
பொங்கி யங்களாற் பூதவே தாளங்கள் போற்ற. (கூஎஎ)

அந்தண் வெள்ளிமால் வரையிரண் டாமென வணைந்தோர்
சிந்தை செய்திடச் செங்கண்மால் விடையெதிர் நிற்ப
முந்தை மாதவப் பயன்பெறு முதன்மையான் மகிழ்ந்தே
நந்தி யெம்பிரா னடுவிடை யாடிமுன் னணுக. (கூஎஅ)

வெள்ளி வெற்பின்மேன் மரகதக் கொடியுடன் விளங்குந்
தெள்ளு பேரொளிப் பவளவெற் பெனவிடப் பாகங்
கொள்ளு மாமலை யாளுடன் கூடவீற் றிருந்த
வள்ள லாரைமுன் கண்டனர் வாக்கின்மன் னவனார். ()

கண்ட வானந்தக் கடலினைக் கண்களான் முகந்து
கொண்டு கைகுவித் தெதிர்விழுந் தெழுந்துமெய் குலைய
வண்டர் முன்புநின் றாடினர் பாடினா ரழுதார்
தொண்ட னார்க்கங்கு நிகழ்ந்தன யார்சொல வல்லார். ()

முன்பு கண்டுகொண் டருளினா ரமுதுண்ண மூவா
வன்பு பெற்றவ ரளவிலா வார்வமுன் பொங்கப்
பொன்பி றங்கிய சடையரைப் போற்றுதாண் டகங்க
ளின்ப மோங்கிட வேத்தினா ரெல்லையி றவத்தோர். (கூஅக)

ஆய வாறுமற் றவர்மனங் களிப்புறக் கயிலை
மேய நாதர்தந் துணையொடும் வீற்றிருந் தருளித்
தூய தொண்டருந் தொழுதெதிர் நிற்கவக் கோலஞ்
சேய தாக்கினார் திருவையா றமர்ந்தமை திகழ. (கூஅஉ)

ஐயர் கோலமங் களித்தகன் றிடவடித் தொண்டர்
மையல் கொண்டுள மகிழ்ந்திட வருந்திமற் றங்குச்
செய்ய வேணிய ரருளிது வோவெனத் தெளிந்து
வைய முய்ந்திடக் கண்டமை பாடுவார் மகிழ்ந்து. (கூஅங)

கணபதி துணை.

# மகாபாரதம்.

## ஆரணிய பருவம்.

### அருச்சுனன் தவநிலைச்சருக்கம்.

௧௦௧ — ௧௩௦.

எய்தகணை திருமேனி யெய்துமுன்னரிறகுறுணின் றொன்றிரண்டா யிலக்குறுமல், வெய்தின்வலி யுடனெய்தான் முன்னு மாளி விண்ணவர்கோன் மகன்மேலும் வேறொன்றெய்தா, னினிவன்வினைதமுறத் தொடுத்தானென்ப தறியாமலெயி னன்முடி யணிந்தபீலி, கொய்துகதி யறல்சிதறப் பிறையு மானுங் குலைபவொரு கணைகுரக்குக் கொடியோனெய்தான். ()

அற்போலச் சூழ்கின்ற விராதரெல்லா மவன்முடியே யிவனெய்ததறிந்துதீயி, னிற்போன்மே லெழுதலுமன் கவனா வெல்லா நில்லுமெனக் கையமர்த்தி நீயின்றெய்த, விற்போர் கண்டனமட்டா விற்பிடிக்கும்விரகறியோ முன்னிடத்தே வேதவிற்போர், கற்போமென் றெருகணைமற் றவன்மேல் விட்டான் கனகமலைச் சிலைவளைத்த கையினானே. (௧௦௨)



வேறு.

பீலிமுடியோன் விடுபிறைக்கணையை வேறொருபிறைக் கணையினால் விலகிவிற், கோலிவடிவாளி மழைசிந்திவன் மழைக்கிரிகொண்டலென நின்றகுமரன், மூலிவடிவாமெயி னன் மேலவைபடாமன் முனைமண்மிசை குளிக்கமுரணுர், வேலியிடுமாறென விழுந்தனவிழுந்தகணை விசயனவை கண்டு வெகுளா. (௧௦௩)

வெண்ணிமுடிவேடன் மிசைவேறுமொரு சாயகம்விடுத்த னன் விடுத்தகணையின், னுனியொடு முன்பிறுெ பின்பு தொடுகின்றகணை நடுவுற வெட்டுதலுமே, கோணியபவிளம் பிறை முடித்தவன்வெகுண்டுபல கோல்கள்விட விந்திரகும ரன், பாணியுடனேதொடை நடுங்கியயனின்றதொரு பாதப மருங்கணுகினான். (௧௦௪)

கொண்டுதவமேதன மெனப்புரியும் வில்விமெய்குலைந் தயருகின்றநிலையைக், கண்டருகுநின்றவிம வான்மகளுரைக்க மிகு கருணையொடிரங்கியவனைப், பண்டுதவமேபுரி யினைப்பற மனத்தின்மிகு பரிவுடையனாகிவெகுளா, வெண்டிசையும் வென்றனல எரித்தசிலைநாணியற வெயினர்பதி யெய்த னனரோ. (௧௦௫)

உழுந்துருளுமெல்லைதனில் வில்லினெடுநாணற வுரந் தொடெதிரோடிவரிவிற், கழுந்துகொடு மாமுடியின் மோது முனிழுந்ததுயர் கண்ணுறபுபீலிமதியின், கொழுந்துமுது சோரவிட நாகர்சுடிகைத்தலைகுலைந்து மணிசிந்தவதியா, வெழுந்துதடமார்பகல் வானிலுறவேடனு மிளைத்துவச முற்றனனரோ. (௧௦௬)

விண்ணிலுறைவானவரில் யாரடிபடாதவர் விரிஞ்சனரி வேமுதலினோர், மண்ணிலுறைமானவரில் யாரடிபடாதவர் மனுக்கன்முதலோர்களதலக் கண்ணிலுறை நாகர்களில் யாரடிபடாதவர்கள் சட்செவிமகீபன்முதலோர், ரெண்ணில் பலயோனியிலும் யாவடிபடாதன விருந்துழியிருந்துழி யரோ. (௧0௭)

வேதமடியுண்டன விரிந்தபலவாகம விதங்களடியுண் டனவொரைம், பூதமடியுண்டன விநாழிகை முதற்புகல்செய் மொழிதொடு சவிப்பில்பொருளின், பேதமடியுண்டன பிறப் பிலிபிறப்பிலி பிறங்சலரசன்றன்மகளார், காதலமலன்சமர வேடவடிவங்கொடு கரன்கையடி யுண்டபொழுதே. (௧0௮)

என்பொடு கொழுந்தசை நிணங்குருதி யென்னுமவை யீரிரண்டானும்வயிரா, வன்பொடுவளர்ந்தமிரு காதிபதிகாரி யெனும் வடிவமுருபெற்றமறவோ, னன்பினொடுபோரம் வளர்த்தருளெபிற்றிபிந வஞ்சவபிராமவெயினன், பொன் புரையுமேனியி லடித்தமைபொருதுமற் போர்புரியுமாறு கருதா. (௧0௯)

உள்ளடிவிரற்றலைகள் புறவடிபாட்டிமுட னுயர்கணைக் கான்முழந்தா, ளுள்ளரியவூருவுயர் தாள்வரைகளொத்தகடி தடமுதரமார்புதிணிதோ, டுள்ளிவருசெங்கையொடு முன்கை யிடர் கெற்றியொடு சூடமெனவென்னு படையால், வள்ள லெனையாளுடைய மாதவனுமாதவனு மல்லமர்தொடங்கி யுறவே. (௧௧0)

மல்லமர்தொடங்கியிவ ரிருவரும்வெகுண்டுபொர மாதி ரமுமாநிலமுமே, லெல்லையுமதிர்ந்துகழல் கின்றபொழு தத்திமய வின்பமயில்கேள்வன்வெகுளா, கல்விசைபுனைந்த



மணி நூபுரவிசாலவொளி கலனுபதாளமலரினுல், வில்வி யரிலெனுதிறல் வில்லுடையபாணிதனை விண்ணுலகில் வீசினனரோ. (௧௧௧)

விண்ணவர்தம்மூர்புகுத விண்ணவர்பிரான்மதலை விசை யுடனொழுந்து முகில்போன், மண்ணிலிடை விழ்ந்தருமுன் மார்பசலமல்லதை வயங்குடுற மென்றுதெரியா, னெண் ணரியஞானவொளி யாகிமெரியாகிவரு மெயினர்பதியான கருணைப், புண்ணியன் மகிழ்ந்துருக நின்றெருவியுடன் பழைய பூசல்பொர வெண்ணியெதிர்வான். (௧௧௨)

வெய்யகணநாதர்கண தேவர்விபுதாதியர் விரிஞ்சிசிவ யோகியருஞ், செய்யசடைரோணளகை யாதிபதிகின்னரர் கள் சித்தர்பலசாரணர்மணிப், பையரவினுடிபுரு கூதனிவர் சூழ்தரப் பச்சைமயில்பாதியுடனே, துய்யவிடைமீதொரு செழுஞ்சடைமுழுந்தனு தொழுந்தகைய தாகுமளவே. ()

கைவிலுடனேயெயினர் கோடிபலர்சூழ்வரச் சவ்வி மயில் பின்னர்வரவே, தெய்வமறைஞானிக டொடர்ந்துவர வந்துபொரு செய்யசிவவேடன்முடிமேற், சைவமுறையே யிறைவர் தன்மலரினோடுருகு சாத்தியொளிர் காண்மல ரலா, மெய்வடிவுகொண்டனைய கரியதவவேடனினை விழி மலர் பரப்பிமகிழா. (௧௧௪)

அம்பவளைகமாலெசறி வில்லமொடுகொன்றைமலர் சூத மறுகேகமழ்தருஞ், செம்பவளவேணியிசை திங்களதிருமு டிருள் செம்பொன்வடமேருவனையா, னுபர்மணியாழினொடு தும்புருவுநாரதனு முருகியிசைபாடவருள்கூ, ரம்பையுடனே விடையின் மீதொளிர்நின்றதனை யஞ்சலிசெய்தன்பொடு தொழா. (௧௧௫)

வேறு.

ஆடினன்களித்தனனயர்ந்துநின்றன
னோடினன்குதித்தனனுருகிமாழ்கினன்
பாடினன்பதைத்தனன்பவளமேனியை
நாடினனடங்கினனயந்தசிந்தையான். (௧௧௬)

விழுந்தருவினைபிணிவெலித்துநாயினு
மிழிந்தியபிறவியினயருவேன்முனஞ்
செழுஞ்சுடர்மணிப்பணித்திங்கள்மௌலியா
யெழுந்தருளியவிஃதென்னமாயமோ. (௧௧௭)

ஆதியேயண்டமுமனைத்துமாயொளிர்
சோதியேகொன்றையந்தொங்கன்மௌலியாய்
வாதியேமரகதவல்லியாளொரு
பாதியேபவளமாம்பரமரூபியே. (௧௧௮)

பையராவணிமணிப்பவளமேனியாய்
செய்யவாய்மரகதச்செல்விபாகனே
ஐயனேசேவடியடைந்தவர்க்கெலா
மெய்யனேயெங்குமாய்விளங்குஞ்சோதியே. (௧௧௯)

முக்கணுநிலவெழுமுகிழ்த்தமூரலுஞ்
சக்கரவதனமுந்தயங்குவேணியு
மைக்கயன்மரகதவல்லிவாழ்வுறு
செக்கர்மெய்வடிவமுஞ்சிறந்துவாழியே. (௧௨௦)

அன்புறுதருமனுக்கநுசனாயினே
னன்பரம்பொருளுக்குமன்புமாயினேன்
பொன்புரைமேனியாய்போற்றினேனுனை
யென்பெருந்தவப்பயன்யார்பெற்றார்களே. (௧௨௧)



என்றுகொண்டிம்முறையிவணியம்பியே
மன்றலங்கொன்றையம்மாலைமௌலிபா
னென்றியதவம்புரியும்பர்தம்பிரான்
றன்றிருமதலையைத்தழுவினனரோ. (௧௨௨)

தழுவினன்பெருந்துயரகற்றித்தண்ணளி
பொழிதருகண்ணினன்புரக்குஞ்சிந்தைய
னழிவறவொழிவறவமர்ந்தசோதியன்
பழுதறுமொழிசிலபகர்ந்துதேற்றினன். (௧௨௩)

சூதினில்யாவையுந்தோற்றுக்கானிடை
யேதிலர்போலநீரினைத்துவாடினீர்
வாதுசெய்புலன்களையடக்கிமன்னின்மே
னீதவம்புரிந்தனைநினையலாகுமோ. (௧௨௪)

மூகனென்றுரைக்குமம்மூகதானவன்
வேகமோடேனமாய்விரைவில்வந்தன
னாகவெங்கொடியவனின்றவாய்மையால்
யோகுசெபுனதுயிருண்ணவெண்ணியே. (௧௨௫)

வந்தவன்முந்துறுமுன்மங்கைதன்னுட
னிந்தவெற்புறைதருமெயினவேடமாய்ச்
சுந்தரமரகதச்சோதிவீரனே
யந்தவல்லசுரனையம்பின்வீழ்த்தினேன். (௧௨௬)

நின்னுடனமர்செய்துநின்வின்னாணறுத்
தந்நெடுவில்லினாலடியுமுண்டன
னுன்னருமல்லினுமுதையுமுண்டன
னென்னினியுன்கருத்தென்றுகூறினன். (௧௨௭)

அந்தவில்விசயனுமரன்பதம்பணிந்
தெந்தைபாரதவமர்க்கிசைந்தவீரர்மெய்

இந்தநின்பேர்பெறுதெய்வவாளியைத்
தந்தருளென்றனன்றவத்தின்மேனின்றான். (௧௨௮)

ஐயனுமம்மையோடருள்புரிந்தபின்
வெய்யபொற்றாணியும்வில்லுமந்த்ரமுந்
துய்யபாசுபதமெய்த்தொடையுமூட்டியு
மொய்யெனநிலையுடனுதவினனரோ. (௧௨௯)

பெற்றனன்விசயனும்பேயும்பூதமுஞ்
சுற்றியகணங்களுஞ்சுருதிபோசையும்
வெற்றிகொள்பெற்றமும்விழைந்துசூழவே
கற்றையஞ்சடையவன்கயிலைமேயினான். (௧௩௦)

---

# கந்தபுராணம்.

## மகேந்திரகாண்டம்.

### அவைபுகுபடலம் உரை.

௧௩௯ — ௧௪௦.

௧௩௯. இ - ள். அளப்பில ஆண்டு-அனேக ஆண்டுகளாக,— நின்று வேள்வி ஆற்றி நோற்றனை - நியமத்துடன் வேள்வியினை முடித்துத் தவத்தைச் செய்தாய், — மூண்ட தீயிடை மூழ்கினைக்கு - சுவாலித்தெரிகின்ற யாகாக்கினியில் விழுந்தமிழ்ந்திய உனக்கு, — எந்தை முன்னளித்த - எம்பெருமான் முன்னாளில் தந்தருளிய,—மாண்டிடாத பேராயுளைத் திருவொடும் - அழிவில்லாத நீண்ட வாழ்நாளையும் செல்வத்தையும், — ஈண்டு வாளா ஓர் புன்னெறியாற்றி - இங்கே வீணாக ஒரு இழிதொழிலைச் செய்து,— இழுக்குவது இயல்போ - அழிப்பது தகுதியா. எ - று.

௧௪௦. இ - ள். சையம்மேற்படு வளத்தொடு - மலையினும் மேலாகி யுயர்ந்த செல்வத்துடன்,—நீயும் உன் தமரும் உய்ய வேண்டு மேல் - நீயும் உன் சுற்றத்தினரும் பிழைத்திருக்க வேண்டுமாயின்,—அமரர்தம் சிறையினை ஒழித்து - தேவர்களது சிறையை விட்டு,—வையமேல் அறத்து இயல்புளிவாழி - உலகத்திலே தரும முறையால் வாழ்வாய், — இதனைச் செய்கலாயெனின் - இவ்வாறு செய்யாதொழிவாயானால், — ஈங்கு வந்து அடுவன் இன்னணம் - சுப்பிரமணியக் கடவுள் இங்கே வந்து உன்னைக் கொல்வது நிச்சயம். எ - று.

மற்று ஆல் அசைகள்.

ககக. இ - ள். என்று இவை யாவையும் - என்று இவைகள் எல்லாவற்றையும், — வரைபக எதிர்ந்தோன் - கிரௌஞ்ச மலை பிளக்கும்படி எதிர்த்த சுப்பிரமணியக்கடவுள்,—உன்தனக்கு அறை கென்றனன் - உன்னிடத்திற் கூறுமாறு திருவாய் மலர்ந்தருளினர்,—ஈங்கு நீ உம்பர் வன்தளைச் சிறை நீக்கியே - ஆதலால் இவ்விடத்தில் நீ தேவர்களது வலிய விலங்கோடு கூடிய சிறையை நீக்கி,—அறத்தின் இவ் வளத்தை - தருமமுறையாகவிருந்தச் செல்வத்தை,—நன்று துய்த்தனை செடிது நீ வாழ்கென நவின்றான்-சுகமாக அனுபவித்துக் கொண்டு நெடுங்காலம் நீ வாழ்வாய் என்று வீரவாகுதேவர் கூறினர். எ - று.

மற்று ஏ அசைகள்.

ககஉ. இ - ள். மறம் அகன்றிடா வீரன் - வீரம் நீங்காத வீரவாகு தேவர்,—இங்கு இனையன வகுத்தே யறையும் வாசகம் கேட்டலும் - இங்கே இவைகளை வகுத்துக் கூறிய சொற்களைக் கேட்டவுடனே,—வெகுளி மூள் அகத்தன் - கோபம் அதிகரிக்கின்ற மனத்தையும்,—பொறி உமிழ்ந்திடு கண்ணினன் - அக்கினிப் பொறிகளைக் கக்குகின்ற கண்ணினையும்,—புகை உமிழ் உயிர்ப்பன் - புகையை வீசுகின்ற மூச்சினையும்,—எறியும் அங்கையன்-ஒன்றோடொன்று அடிக்கப்படுகின்ற கைகளையும்,—இறந்திடு முறுவலன் - அளவு கடந்த சிரிப்பையும் உடையனாய் சூரபன்மன் கூறுகின்றனன். எ - று.

ககங. இ - ள். மேலை ஆயிரத்து எட்டு எனும் அண்டமும் வென்றே - உயர்ந்த ஆயிரத்தெட்டு என்று சொல்லப்படுகின்ற அண்டங்களையும் வென்று,—ஏறுகின்றதோர் தனி இறை ஆகிய எனக்கு - தக்க ஒப்பில்லாத ஏகச் சக்கிராதிபதியாய் இருக்கும் எனக்கு,—கோல வால் எயிறு இன்னமும் தோன்றிலா - அழகிய வெண்மையான பற்கள் இன்னும் முளையாத,—குதலைப் பாலனே கொலாம் - மழலைச் சொற்களை உடைய ஒரு பாலகனும்,—இனையன புந்திகள் பகர்வான் - இத்தன்மையான புத்திகளைச் சொல்லுகின்றவன். எ - று.

ஏ வினாப் பொருளில் வந்தது. கொல் - அசை.



ககச. இ - ள். விறலின் மேதகும் அவுணர் ஆம் வலியிலார்-மிக்க மேன்மையினையுடைய வெற்றி வாய்ந்த அசுரர்களாம் வலிமையில்லாதவர்கள்,—மிகவும் வறியராகிய தேவராம் மேலவர்-மிகவும் ஏழைகளாய் இருக்கின்ற தேவர்களாம் வலியர்,—மழலைச் சிறுவராம் - மழலைச்சொற்களையுடைய சிறு குழந்தைகளாம்,—தனி முதல்வர்க்கு-ஒப்பற்ற அரசர்க்கு,—அமைச்சியல் செய்வார் - மந்திரி முறையை நடத்துவார்,—எறியும் நேமி சூழ் உலகத்து - திரைகள் அடிக்கின்ற கடலால் சூழப்பட்ட இவ்வுலகத்தில் வழக்கு நன்று இது ஏ - இந்த வழக்கம் நன்றாய் இருக்கின்றது. எ - று.

ஏ - அசைச் சொல்.

ககரு. இ - ள். நறை கொள் தார் முடி அவுணர் தம் குலத்தினை நலித்து - தேன் பொருந்திய மாலையை அணிந்த முடிகளையுடைய அசுரர்களது குலங்களை வருத்தி,—வறுமை செய்தனர் கடவுளர் - தேவர்கள் அவர்களை ஏழை ஆக்கினார்கள்:—ஆதலால்; அவர் திரு மாற்றி - நான் அவர்களது செல்வத்தைக் கெடுத்து,—குறிய ஏவலும் கொண்டனன் - குற்றேவல்களையும் செய்வித்தேன்,—ஒழுக்கமும் கொன்றேன் - அவர்களது ஆசாரத்தையும் அழித்தேன்,—சிறையும் வைத்தனன் - சிறையிலும் வைத்தேன்,—எங்குடி தமர் முறை செய்தேன் - எமது குலத்தில் உள்ள முன்னோர் செய்த முறையை நானும் செய்தேன். எ - று.

ககசு. இ - ள். நெடிய மால் மகன் உறங்கு நாள் - நெடியோனாகிய விஷ்ணு புத்திரனாகும் பிரமன் நித்திரை செய்கின்ற இராத்திரியாகிய பிரம கற்பத்தில்,—தொடு பெருங் கடல் - அசுரர்களால் தோண்டப் பெற்ற சமுத்திரமானது,—அணையை நீங்கி உலகெலாம் கொளினும் - தமக்கு இடப்பெற்ற கட்டளையை மீறி உலகம் முழுவதையும் மூடிக் கொண்டாலும்,—சுரரை விடுவனல்லன் - நான் தேவர்களை விடேன்,—வீடரும் சிறையினை - இந்த அழியாத சிறையை,—விண்மேல் உடைய அண்டத்தின் உச்சியில் ஒருதலை உய்ப்பேன்-வானத்தின் மீது உள்ள வேறொரு அண்டத்தின் உச்சியில் ஒரு இடத்திலே வைப்பேன் எ - று.

கக௭. இ - ள். தப்பல் செய்திடும் மகபதி முதலினோர் தமையும் - தப்பியோடிய இந்திரன் முதலானவர்களையும்,—இப்பதிக்கணே கொணர்ந்தனன் சிறை செய இருந்தேன் - தேடிப் பிடித்துக் கொண்டு வந்து இந்த நகரத்தில் சிறை செய்யவேண்டுமென்று எண்ணியிருந்தேன்,—ஒப்பு அரும் திறல் சூரன் என்று ஒரு பேர் உடையேன் - ஒப்பில்லாத வலிமையையுடைய சூரன் என்று ஒரு பெயரைக் கொண்டுள்ள நான்,—கைப்புகும் சிறை விடுவனோ - கையில் அகப்பட்ட சிறையை விடுவேனோ. எ - று.

ஏ - இசைச் சொல். கண்டாய் - முன்னிலை அசைச் சொல்.

கக௮. இ - ள். மின்னு வச்சிரப் படிவமும் வேறு பல் வரமும் - ஒளி வீசுகின்ற வச்சிரயாக்கையையும் இன்னும் பல வரங்களையும்,—முன் ஓர் ஞான்று தன் தாதை எற்கு அளித்திடும் முறையை - முன் ஒரு காலத்தில் நீ கூறிய குமரனது தந்தையாகிய சிவபெருமான் எனக்கு அளித்துள்ள அரச முறையையும்,—பின்னர் யாவரே பெயர்ப்பவர் - பின்பு வேறு யார் அழிக்க வல்லவர்,—பெருஞ் சமர் இயற்றி என்னை ஆற்றலால் வென்றிடு நீர்மையோர் எவரே - அது அன்றியும் பெரும் போர் புரிந்து என்னை வலிமையினால் வெல்லும் திறத்தினர் யாவர். எ - று.

ஏ - அசைச் சொல்.

கக௯. இ - ள். தானமாமுகத் தாரக எம்பியைத் தடிந்த - மதம் பொழிகின்ற பெரிய யானையின் முகம் போன்ற முகத்தினையுடைய தம்பியாகிய தாரகனைக் கொன்ற,—மானவேற்படையவன் மிசைவருவது வலித்தேன் - வலிய வேற்படையினையுடைய முருகன்மீது போருக்குச் செல்வதைச் சிந்தித்தேன்,—பானல் வாய் சிறு சேயொடு - பால்மணமாறாத வாயினையுடைய சிறிய பாலகனோடு,—நீ அமர் பயிறல் ஈனமேயெனத் தடுத்தனர் - நீ போர் புரிவது இழிவாகும் என்று (என்னை இங்குள்ளவர்கள்) தடுத்தனர்,—ஆதலால் ஒழிந்தேன்-அதனால் போருக்குச் செல்லா தொழிந்தேன். எ - று.

பானல் வாய்ச் சிறு சேய் என்பதற்கு கருநெய்தல் மலர் போன்ற வாயினையுடைய சிறுவன் எனினுமாம்.



க௨0. இ - ள். தூங்கு கையுடைத் தாரக இளவலை-தொங்குகின்ற கையினையுடைய தாரகனாகிய என் தம்பியையும்,—தொல்லை ஓங்கல் தன்னுடன் அட்டதும் - பழைய கிரௌஞ்ச மலையையும் அவன் சங்கரித்ததுவும்,—தென்னவே புணர்ந்தேன் - தேற்றறக்கே யறிந்தேன்,—பாங்கினோரை யப்பாலன் மேலுந்தி - என் பரிசனர்களை அப்பாலகன் மீது போருக்கனுப்பி,—என் பழியும் வாங்குகின்றனன் - என் பழியையும் வாங்குகின்றேன்,—நாளையே காண்டி - நாளைக்கு இதனைக் காணுதி. எ - று.

ஆல், மன்னோ - அசைகள்.

க௨க. இ - ள். அரிகள் எண்ணிலர் - எண்ணில்லாத விஷ்ணுக்களும்,— இந்திரர் எண்ணிலர் - எண்ணில்லாத இந்திரர்களும்,—அல்லா - அவரல்லாத,—சுரர்கள் எண்ணிலார் - எண்ணில்லாத தேவர்களும்,—அண்டங்கள் தொறும் தொறும் இருந்தார் - அண்டங்கள்தோறும் இருக்கின்றனர்,— செருவில் ஆற்றலர் போயினர் - அவர்கள் என்னோடு போர் செய்ய ஆயவாதவர்களாய் என்னை வணங்கிக்கொண்டு போய்விட்டார்கள்,—சிவன் கண் நெருநல் வந்திடு சிறுவன் - அப்பனாகிய சிவன கண்களினின்று நேற்றுப் பிறந்த சிறுவனோ,—என் எதிர் நிற்பானோ - என் எதிர் நின்று போர் புரியத்தக்கவன். எ - று.

க௨௨. இ - ள். ஓதி என் பல - இனிய பலவற்றையுஞ் சொல்லுவதால் வரும் பிரயோசன மென்னை,—அமரரை விடுகிலன்-தேவர்களது சிறையை நீக்கமாட்டேன்,—பேதையாதலின் உணர்ச்சி ஏதும் இல்லதோர் மகவுதன் புன்மொழி யேற்று - நீ அறிவற்றவனாதலால் ஒன்றுந் தெரியாத ஒரு குழந்தையின் இழிவான மொழியைக் கேட்டுக்கொண்டு,—ஒற்றனாய் வந்தனை - அதனாக வந்தாய்,—பிழைத்துப் போதி - நீ உயிரோடு தப்பிப் போகக் கடவை,—நின் உயிர் தந்தனன் யான் - நின்னுயிரைத் தந்தேன் நான்,—எனப் புகன்றான் - என்று சூரபன்மன் கூறினான். எ - று.

க௨௩. இ - ள். அகிலம் ஆள்பவன் இங்கிவை மொழிதலும்- உலகங்களையாளுகின்ற சூரபன்மன் இவ்வாறு கூறுதலும்,—ஐயன்

வீரவாகுதேவர், — வெகுளி வெங்கனல் சிந்திட - கோபமாகிய கொடிய அக்கினி சிதற,—புகையும் அங்கியும் உயிர்ப்பு உற - புகையும் (காற்றும்) அக்கினியும் சுவாசத்திற் (மூச்சிற்) பொருந்த,—மயிர் பொடிப்ப - உரோமங்கள் பொடிப்பவும்,—நகையும் வந்திட - சிரிப்புமுண்டாக,—விழி சிவந்திட - கண்கள் சிவப்பவும்,—இவை நவில்வான் - இவைகளைக் கூறுவான். எ - று.

கஉச. இ - ள். உய்யல் ஆவதோர் பரிசினை உணர்வுறாது - பிழைக்கும் வழியை அறியாமல்,—உழலும் கையகேள் - தடுமாறுகின்ற கீழ்மகனே கேட்பாயாக,—கட்செவி மதியொடு கலந்த செவ்வார் சடை - பாம்பினுடன் சந்திரன் சேர்ந்து வாழ்கின்ற சிவந்த நீண்ட சடையினையுடைய,—பரம்பொருள் திரு நுதல் விழி சேர் ஐயன் - முழுமுதற் கடவுளாகிய சிவபெருமானது நெற்றிக்கண்ணினின்றும் திருவவதாரஞ் செய்தருளிய ஆறுமுகக் கடவுளின்,—மேதகவு உணர்ந்திலை - பெருமையை அறிந்தாயில்லை,—பாலன் என்று அறைந்தாய் - ஆதலால் நீ அவரைப் பாலகன் என்று இழித்துக் கூறினாய். எ - று.

கஉரு. இ - ள். மானுடத்தரை தேவென்பர் - மனுடரைத் தேவரென்று சொல்லுவார்,—வானகத்தவரை ஏனை முதற்றொழிலவர் என்பர் - அத்தேவர்களை மற்றைய மும்மூர்த்திகளென்று சொல்லுவார்கள்,—நால் நிலத்தினில் இருவர் தங்களையும் பரம்பொருளிவரென நவில்வர் - இந்தப் பூவுலகில் பிரமா விஷ்ணு ஆகிய இருவர்களையும் பரம்பொருளென்று சொல்லுவார்கள்,—ஆனசொற்றிறம் முகமனேயாதம் அன்று - அவ்வாறு சொல்லப்படுகிற சொற்கள் உபசாரமேயன்றி உண்மையல்ல. எ - று.

கஉசு. இ - ள். ஆய புல்லிய புகழ்ச்சி போல் கொள்ளலை - அவ்வாறான இழிந்த உபசாரமொழிகள் போல (அம்முருகனது புகழ்ச்சியை) நினையாதே,—அறிவோர் தேயமாவது - ஞானிகளால் தியானிக்கப்படுவது,—யார்க்கும் எட்டாதது - எவர்க்கும் (இலகுவில்) கிடைக்க இயலாதது,—தெளியில் தூய வீடுபேறருள்வது - அதனை நன்கு உணர்ந்தால் பரிசுத்தமான மோக்ஷ சாம்பிராஜியத்தை அளிப்பது,—உபநிடதத் துணிபாம் வாய்மை



யாவது - உபநிடதம் துணிந்தெடுத்த உண்மைப்பொருளாயுள்ளது,—புகலுவன் கேளென வகுப்பான் - அதனைக் கூறுவேன் கேளென்று வீரவாகு தேவர் சொல்லுகின்றார். எ - று.

கஉஎ. இ - ள். மண் அளந்திடு மாயனும் - பூமியையளந்த விஷ்ணுவும், — வனசமேலவனும் - தாமரையாசனனாகிய பிரமாவும்,—எண்ணரும் பகல் தேடியும் காண்கிலாதிருந்த-எண்ணிறந்த காலந் தேடியும் காணப்படாதிருந்த,—பண்ணவன் நுதல் விழியிடை - சிவபெருமானது நெற்றிக் கண்ணினின்றும்,—பரஞ்சுடருருவாய் - பரஞ்சோதி சொரூபமாய், — மதலையாய் - குழந்தை வடிவினராய், — உள் நிறைந்த பேர் அருளினால் உதித்தார் - உள்ளே பொருந்திய பெருங்கருணையினால் அவதரித்தனர். எ - று.

கஉஅ. இ - ள். முன்னவர்க்கு முன்னுறுவோர் தமக்கும் முற்பட்டு - முதல்வர்களுக்கெல்லாம் முதல்வராகுகின்றவர்களுக்கும் முற்பட்டு, — தன்னை நேரிலாது - தமக் கொப்பில்லாதவராய்,—ஈசனும் தனிப் பெயர் தாங்கி - ஈசனென்னும் ஒப்பற்ற நாமத்தைத் தாங்கி,—அன்னுயிர்க் குயிராகி - இனிய உயிர்களுக்கெல்லா முயிராகி,—அருவுருவமாய்-அருவமும் உருவமும் ஆய்,—எவர்க்கும் அன்னை தாதையாய் - எல்லா உயிர்கட்குந் தாய் தந்தையாய், — இருந்திடும் பரமனே யவன்காண் - இருக்கின்ற சிவபெருமானே யந்த அறுமுகக்கடவுள். எ - று.

கஉகூ. இ - ள். ஈசனே அவன் ஆடலால் மதலையாயினன் - சிவபெருமானே தமக்கோர் திருவிளையாட்டாக ஒரு குழந்தையாயினார்,—ஆசிலா அவன் அறுமுகத் தன்மையால் நீ அறி-குற்றமற்ற அவனது ஆறு திருமுகங்களின் உண்மையினாலேயே நீ அறிந்து கொள்,—பேசில் ஆங்கு அவன் பரனொடு பேதகனல்லன் - சொல்லுமிடத்து குமாரக்கடவுள் சிவபெருமானினின்றும் வேறானவர் அல்லர்,—தேசுலா அகல் மணியிடை கதிர்வருதிறம்போல் - ஒளி பொருந்திய உரிய மணியிடத்தினின்றும் கிரணங்கள் உண்டாகின்ற தன்மையைப்போல. எ - று.

கஉ௦. இ - ள். பூதம் ஐந்தினுள் - பஞ்சபூதங்களுள்,—கீழ் நிலத்தாகிய புவியுள் - கடையிலது ஆகிய பிருதிவி பூதத்தில்,—

௧௩௬. இ - ள். மன் உயிர் எவற்றிற்கும் - நிலைபெற்ற உயிர்களுக்கெல்லாம்,—ஈட்டும் இருவினைப்பயனை கூட்டுவன் அவனும் - (அவ்வுயிர்கள்) தாம் சம்பாதிக்கின்ற இருவினைகளின் பயனாகிய நன்மை தீமைகளைக் கொடுக்கின்றவரும் அவரே,—ஆங்கு அவை துலை யெனக்கூடின் - இருவினையொப்புவந்து கூடியவிடத்து,—வேட்ட மேல் நிலைக்கதி புரிவான் அவன் - அவ்வ விரும்பிய உன்னத அறியாத பதவியாகிய மோக்ஷத்தைக் கொடுப்பவரும் அவரே,— மேலாய்க் காட்டுவான் முதல் திறமெலாம் அவன் கண்டாய் - இன்னும் காட்டுவான் காண்பான் காட்சி காட்சிப் பொருள் ஆகிய திறங்கள் எல்லாம் அவரே என்றறிகுதி. எ - று.

நல்வினை தீவினையாகிய இருவினைகளும் துலாக்கோல்போல சமநிலையடைவது இருவினையொப்பு.

மேலாய்க் காட்டுவான் முதல் திறமெல்லாம் என்பதற்கு, மேல்நின்று கீழ்வருகின்ற ஆகாயம் முதல் பிருதிவி யீறாகிய பஞ்சபூதங்கள் எல்லாம் என்றும் பொருள் கூறலாம்.

௧௩௭. இ - ள். சிறுவன் போலுறும் - சிறுவனைப்போலு மிருப்பார்,—குரவனேபோலுறும் - (விருத்த) ஆசிரியனைப்போலு மிருப்பார்,—இளையித்துறியன்போலுறும் - இளமையைப் பார்க்கினும் சிறிய வடிவமுடையவர் போலிருப்பார்,—நெடியவனுகியும் - நெடியவடிவுடையவராகியும் வருவார், — நெறியின் இன்னணம் வேறு பல்லுரு கொடு நிலவும் - முறையே இவ்விதம் பல வடிவங்களைக் கொண்டும் விளங்குவார்,—அறிவர் காட்டரும் கந்தவேள் அடல் ஆர் அறிவர் - ஞானிகளும் அறிதற்கரிய கந்தசுவாமியாரது திருவிளையாடல்களை யார்தான் அறிய வல்லவர். எ - று.

உம்மை விகாரத்தாற் றொக்கது.

௧௩௮. இ - ள். செவ்வேள் சிவனது ஆடலின் வடிவமாய் உற்றிடும் - குமாரக்கடவுள் சிவபெருமானது திருவிளையாடலின் திருவுருவமாய் எழுந்தருளியிருப்பார்,—அவனது ஆணையின்றியே அணுவும் பெயர்கிலது - அவரது கட்டளைப்படியன்றி அணுவும் அசையாது,—எவர் தனியாற்றலைக் கடந்தவர் - யார்தான் அந்தக்



கந்தசுவாமியினது ஒப்பற்ற வீரத்தினின்றும் தப்பினவர்கள்,—இவண் நீ அவன் தனிமாயையிற் சார்வாய் தவமயங்கினை - இவ்விடத்தில் நீ அவரது ஒப்பற்ற மாயையிலகப்பட்டு மிகவும் மயங்கினாய். எ - று.

௧௩௯. இ - ள். எல்லையில்லதோர் பொருளெலாம் ஆகுறும் - அளவில்லாத எல்லாப் பொருள்களுமாயிருப்பார்,—யாவும் அல்லனுகியும் இருந்திடும் - அவை யெவையும் அல்லராகியும் இருப்பார், — அருவுருவுமாகும் - அருவுருவாகவு மிருப்பார், — பலவகைப்படும் உருக்கொளும் - பலவகைப்பட்ட உருவங்களையும் கொள்ளுவார், — புதியரிற் பயிலும் - புதியவர்களைப்போலவும் காணப்படுவார்,—தொல்லை ஆதியாம் - பழைய ஆதிப்பொருளாகவு மிருப்பார்,—அநாதியுமாகியே தோன்றும் - ஆதிப்பொருளுக்கும் அப்பாற்பட்ட அநாதிப்பொருளாகவும் காணப்படுவர். எ - று.

௧௪௦. இ - ள். வாரி வீழ் தரும் புல் நுனி துன்னிகள் மான - மழை பெய்ய புல்லின் நுனியிலே விழுந்த துளிகளைப்போல,—நேரிலாது அமர் குமரவேள் - ஒப்பற்றவராய் இருக்கின்ற குமரக்கடவுளினது,—நெடிய பேர் உருவின் ஓர் உரோமத்தின் - நெடிய பெரிய திருமேனியிலுள்ள ஒரு உரோமத்திலே, — உலப்பிலா அண்டங்கள் உதிக்கும் - அளவில்லாத அண்டங்கள் தோன்றும்,—ஆர் அவன் திருமேனியின் பெருமையை அறிவார் - ஆர் அவரது திருமேனியின் பெருமையை அறியத்தக்கவர்கள். எ - று.

புல் நுனித்துளிகள் மான உரோமத் துலப்பிலா அண்டங்கள் உதிக்குமென முடிக்க.

# பெரிய புராணம்.

## திருநாவுக்கரசுநாயனர் புராணம்.

௩௫௩ — ௩௮௩.

௩௫௩. இ - ள். அன்ன நாடு கடந்து-அந்த மத்திய தேசத்தைக் கடந்து,—கங்கை அணைந்து சென்று வலங் கொளும்-கங்கையாறு தன்னைச் சந்தித்தவிடத்து வலப்பக்கமாகச் செல்கின்ற,—மின்னு வேணியர் - ஒளிபொருந்திய சடையினைத் தரித்த சிவபெருமான் வீற்றிருக்கின்ற,—வாரணாசி - காசிப்பதியை,—விருப்பினுடன் பணிந்து - ஆசையுடன் வணங்கி,—உடன் பின் அணைந்தவர் தம்மை - தம்முடன் வந்த பரிசனர்களை,—அங்கண் ஒழிந்து - அவ்விடத்தில் நிறுத்திவிட்டு,—கங்கை கடந்து போய் - கங்கையாற்றை நீங்கிச் சென்று,—மன்னு காதல் செய் - கயிலையைத் தரிசிக்கும் ஒழியாத விருப்பினைக் கொண்ட,—நாவின் மன்னவர் - திருநாவுக்கரசுசுவாமிகள், — கற்சுரம் முந்தினர் - கற்களுள்ள பாலைவனத்துக்கு முற்பட்டு வந்தார். எ - று.

௩௫௪. இ - ள். மாகம் மீது வளர்ந்த - (அந்நிலம்) ஆகாயத்தையளாவி வளர்ந்த,—கானகமாகி-காடாகி,—எங்கும் மனிதராற் போகலாநெறி அன்றியும்-எவ்விடத்தும் மனிதர்கள் போகக்கூடிய வழி யல்லாதிருந்தும்,—புரிகின்ற காதல் பொலிந்து எழ - தாம் கொண்ட ஆசையானது மிகுந்து எழ,—சாகம் மூலம் பலங்கள் - தழைகளையும் கிழங்குகளையும் பழங்களையும்,—துய்ப்பதுவும் தவிர்ந்து - உண்பதையும் விட்டு, — பெருங்கயிலைக் குலகிரி



யெய்துவார் - பெரிய உயர்ந்த கைலைமலையை அடையும்படி, — இரவும் தனித்து சேர் எகினர் - பகலிலன்றி இரவிலும் தனியே நேராகச் சென்றார். எ - று.

௩௫௫. இ - ள். ஆய ஆர் இருளின் கண் - அவ்விடத்துள்ளதாகிய அரிய இருளிலே,—ஏகும் அவ்வன்பர் தம்மை - யாத்திரை செல்லுகின்றவராகிய அந்த அப்பர் சுவாமிகளை,—முன் தீயவாய விலங்கு - இயல்பிற் கொடிய மிருகங்களும்,—அணைந்து வன்தொழில் செய்ய அஞ்சின - (அவரைக்) கிட்டிக் கொடிய தொழிலைச் செய்தற்குப் பயப்பட்டன,—நஞ்சு கால் வாய நாகம்-நஞ்சைக் கக்குகிற வாயையுடைய சர்ப்பங்கள், — பணம் கொள் மணி விளக்கு எடுத்தன - தங்கள் படங்களிற் பொருந்திய இரத்தினமாகிய விளக்குகளை யுயர்த்தின,—வானவர் ஆயினும் - தேவர்களாயினும்,—கால்தோயவந்து - நிலத்தில் தோயாத தமது கால்கள் அதில் தோயும்படி வந்து,—தனி துன்னரும் - தனியே செல்லுதற்கரிய,—சுரம் மன்னினர் - பாலை நிலத்தை யடைந்தார். எ - று.

ஆர் இருள் - நிறைந்த இருளுமாம்.

௩௫௬. இ - ள். வெம் கதிர் பகல் - கொடிய கிரணங்களையுடைய பகற்காலத்தில்,—அக் கடத்திடை-அக்காட்டினிடத்து,—வெய்யவன் கதிர் கை பரந்து - சூரியனது கரங்களாகிய கிரணங்கள் பரவி,—எங்கும் மிக்க பிளப்பின் - எவ்விடத்தும் மிகுதியாகக் காணப்படுகின்ற பிளப்புகளின் வழியே,—நாகர்தம் எல்லைபுக்கு எரிகின்றன - நாகலோகத்திற் போய் எரிகின்ற காட்சி,—பொங்கு அழல் தெறுபாலை - சுவாலித்தெரிகின்ற அக்கினியைப்போலச் சுடுகின்ற பாலையானது, — வெந்நிழல் புக்க சூழல் - கொடிய நிழலானது புகலிடமாகப் போயிருந்த இடத்தில்,—புகும் பகல் செங்கதிர்போலும் - போயிருக்கின்ற பகற் காலத்து சிவந்த கிரணங்களையுடைய 'அக்கினிபோன்றிருந்தது,—அத்திசை - அத்தன்மையான மார்க்கத்திலே,—திண்மை மெய்த்தவர் சென்னினர்-வலிமையையுடைய மெய்யான தவப்பேறுள்ள திருநாவுக்கரசு சுவாமிகள் வந்தடைந்தார். எ - று.

௩௬௭. இ - ள். இங்ஙனம் இரவும் பகற் பொழுதும் - இவ்வாறாக இரவும் பகலும்,—அரும் சுரம் எய்துவார் - அரிய பாலைநிலத்தில் யாத்திரை செல்லுகின்றவராகிய அப்பர் சுவாமிகள்,—பங்கயம் புரை தாள் - தாமரை மலர்போன்ற தமது பாதங்கள்,—பரடு அளவும் பசை தசை தேயவும் - பரட்டளவும் பசிய தசை தேய்ந்து போகவும்,—மங்கை பங்கர் தம் - உமாதேவியாரை இடப்பாகத்தில் வைத்தருளிய சிவபிரான் எழுந்தருளியிருக்கின்ற,—வெள்ளி மால் வரை வைத்த சிந்தை மறப்பரோ - கைலையங்கிரியில் வைத்த விருப்பத்தை மறப்பாரோ (மறக்க மாட்டாதவராகி),—தம் கரங்கள் இரண்டுமே கொடு - தமது இரண்டு கைகளையும் ஆதாரமாகக் கொண்டு,—தாவி ஏகுதல் மேவினார் - தாவிச் செல்லலுற்றார். எ - று.

௩௬௮. இ - ள். கைகளும் மணிபந்து அசைந்து அற-(அவ்வாறு) கைகள் மணிக்கட்டுகளும் இடம் பெயர்ந்து விடவும்,—கரைந்து சிதைந்தபின் - தேய்ந்து அழிந்தபின்,—மெய் கலந்து எழு சிந்தையன்பின் - செயலோடு கூடிவருகின்ற மனஅன்பினால்,—விருப்பு மீமிசை பொங்கிட - (கைலையை அடையவேண்டுமென்ற) ஆசையானது மேன்மேலும் அதிகரிக்க,—மை கொள் கண்டர் தம் அன்பர் - கருமைநிறங் கொண்ட கண்டத்தினையுடைய சிவபிரானது அன்பராகிய அப்பர் சுவாமிகள்,—மொய் கடும் கனல் - வலிய கடிய அக்கினிபோன்று,—வெம்பரற் புகை - வெம்மையான பருக்கைக்கற்களினின்றும் வருகின்ற புகைகள்,—மூளும் அத்தம் முயங்கி - சூழுகின்ற வழியைக் கூடி,—செல்ல வருந்தி - (கரங்களினால் நகர்ந்து) போவதற்கு இயலாதவராய்,—மார்பினால் உந்தினார் - மார்பினாலே நகர்ந்துகொண்டு போனார். எ - று.

௩௬௯. இ - ள். தசை நைந்து சிந்தி மார்பமும் வருந்த - தசை மெலிந்து விழுவதினால் மார்பும் வருத்தமடைய,—என்பு முரிந்திட - எலும்பும் முரிந்திட,—சேர்வு அருங்குறி நின்ற சிந்தையின் - ஒப்புச்சொல்லுதற்கரிய தன்மைபொருந்திய மனதில்,—நேசம் ஈசனை நேடும் ஈடோர்வம் - தம்மால் நேசிக்கப்பட்ட சிவபிரானைத் தேடுகின்ற பெரிய ஆசையினால்,—அங்கு உயிர் கொண்டு உகைக்கும் - அவ்விடத்து தம்முயிரே தள்ளிச் செலுத்துகின்ற,—



உடம்பு அடங்கவும் ஈடன் கெட - தேகமுழுவதிலுமுள்ள தசைகள் அழிந்து போகவும்,—சேர்வரும் பழுவம் - சேர்தற்கரிய காட்டிலே,—செம்மையோர் புரண்டு புரண்டு சென்றனர் - ஒழுக்கந் தவறாத அப்பர் சுவாமிகள் புரண்டு புரண்டு செல்வாராயினர். எ - று.

சேர்வருங்குறை நின்ற சிந்தையின் என்பது பாடமாயின், தான் கயிலையங்கிரியைச் சென்றடைதலரிதென்னும் குறையானது நின்ற தமது மனதிலென்று பொருளுரைக்கவும்.

௩௭௦. இ - ள். அப்புறம் புரள்கின்ற நீள்இடை - அவ்வாறு புரண்டு புரண்டு செல்கின்ற தூரத்தினால்,—அங்கம் எங்கும் அரைந்திட - தேகம் முழுவதும் தேய்ந்துபோக,—செப்பு அரும் கயிலைச் சிலம்பு - சொல்லுதற்கரிய கயிலைக்கிரியின் அடியிலே,—சிந்தை சென்று உறும் - அவர் மனம் போய்த் தங்கி நிற்கும்,—ஆதலால், மெய்ப்புறத்து உறுப்பு அழிந்த பின் - தேகத்தின்புற உறுப்புகள் அழிந்த பின்னே,—மெல்ல ஊர்ந்து முயற்சியும் தப்புற - மெல்ல ஊர்ந்து செல்லுகின்ற தொழிலும் தப்பிப்போக,—செயலின்றி - யாதொன்றுஞ் செய்ய இயலாதவராகி,—தமிழ் ஆளியார் - தமிழ்ச் சிங்கமாகிய அப்பர் சுவாமிகள்,—அ நெறி தங்கினார் - அந்த வழியே தங்கிக் கிடந்தார். எ - று.

௩௭௧. இ - ள். அன்ன தன்மையர் கயிலையை அணைவதற்கு அருளார் - அத்தன்மையரான அப்பர்சுவாமிகள் கயிலையங்கிரியைச் சேர்வதற்கு அருள் செய்யாராகி,—மன்னு நீம் தமிழ் புவியின் மேல் - நிலைபெற்ற இனிமையான தமிழ்ப்பாக்களை இந்நிலவுலகின் கண்,—பின்னையும் வழுத்த - பின்னரும் பாடும்படியாக,—நல் செறிம் புனல் தடம் ஒன்று உடன் கொடு நடந்தார் - நல்ல மிக்க நீரையுடைய ஒரு தடாகத்தை யுண்டாக்கிக்கொண்டு வந்தார்,—பன்னகம் புனை பரமர் ஓர் முனிவர் ஆம்படி - பாம்பையணிந்த சிவபெருமான் ஒரு முனிவரது வடிவத்தைக் கொண்டு. எ - று.

௩௭௨. இ - ள். வந்து மற்று அவர் மருங்குற அணைந்து - அந்த முனிவர் வடிவங் கொண்டு வந்த சிவபெருமான் அந்த

அப்பர் சுவாமிகளது பக்கத்தை அணுகி,—நேர் நின்று - அவருக்கு எதிரே நின்று,—சொர்ந்து நோக்கி-துன்பத்துடன் பார்த்து,—அவர் எதிர் நோக்கிட - அந்த அப்பர் சுவாமிகள் எதிரே பார்க்கின்ற போது,—இவ்வுறுப்பு அழிந்திட சிந்தை வருந்திய திறத்தால் - இவ்வவயவங்க ளழிந்துபோக மனம் வருந்தும்படி,—இந்த வெம் கடத்து எய்தியது என் என இசைத்தார் - இந்தக் கொடிய காட்டி னில் வரவேண்டிய காரணம் யாதென வினவினர். எ - று.

மற்று இரண்டும் அசை.

௩௪௩. இ - ள். மாசில் வற்கலை ஆடையும் - குற்றமற்ற மர வுரியாடையும்,—மார்பின் முந்நூலும் - மார்பினிடத்துப் பொருந் திய முப்புரி நூலும்,—தேசுடைச் சடை மவுலியும் - ஒளி பொருந் திய சடை முடியும்,—மெய்ந்நீறு திகழ - திருமேனியில் திருநீறும் விளங்க,—ஆசில் மெய்த்தவர் ஆகி நின்றவர் தமை நோக்கி - குற்ற மற்ற மெய்ம்மையான தவத்தை யுடையவர்களது வடிவத்தோடு நின்ற சிவபெருமானைப் பார்த்து,—பேச உற்றதொரு உணர்வு உற - பேசத்தக்க உணர்வுவந்து சேர,—பெரியோர் விளம்புவார் - பெரியோராகிய அப்பர் சுவாமிகள் உத்தரம் கூறுவாராயினர். எ - று.

௩௪௪. இ - ள். வண்டு உலாம் குழல் மலை மகள் உடன் - வண்டுகள் உலாவித் திரிகின்ற கூந்தலையுடைய மலையரசன் புத்திரியாகிய உமையம்மையாருடன், — வடகயிலை அண்டர் நாயகன் இருக்கும் பரிசு - வடகயிலையின்கண் தேவர்களுக்குத் தலைவராகிய சிவபெருமான் எழுந்தருளியிருக்கும் திருக்கோ லத்தை,—அடியேன் கண்டு கும்பிட விருப்பொடு - அடியேன் கண்டு வணங்கவேண்டு மென்னும் விருப்பங் கொண்டு,—காதலின் அடைந்தேன் - ஆசையோடு இங்கு வந்து சேர்ந்தேன்,—கொண்ட என் குறிப்பிது - நான் என் மனத்திற் கொண்ட எண்ணம் இது வாகும்,—முனியே! எனக் கூற - முனிவரே என்று விடையளிக்க. எ - று.

௩௪௫. இ - ள். கயிலை மால் வரையாவது - பெரிய கயிலை யென்று சொல்லப்படும் மலையானது,—காசினி மருங்கு பயிலும் -



நிலவுலகத்திடமாகச் சஞ்சரிக்கும்,—மானுடப் பான்மையோர் - மனித வகுப்பினர்,—அடைவதற் கெளிதோ-போய்ச் சேருவதற்கு இலகுவான காரியமா,—அயில் கொள் வேற்படை யமரரும் - கூர்மையைக் கொண்ட வேற்படைக் கலத்தைத் தாங்கிய,—தேவர்களும் அணுகுதற்கு அரிது - தேவர்களும் அவ்விடத்தை அடைவது அரியதாகும்,—வெயில் கொள் வெஞ்சுரத்து வந்து - ஒளியைக் கொண்ட வெம்மையான இந்தப் பாலைநிலத்தில் வந்து,— என் செய்தீர் என விளம்பி - என்ன (பிழையைச்) செய்து விட்டீர் என்று சொல்லி. எ - று.

௩௪௬. இ - ள். மீளும் - திரும்பிச் செல்லுவீர்,—அத்தனை உமக்கு இனிக் கடனென்று - அதுவே உமக்குச் செய்யத் தக்க தென்று,—தோளும் ஆகமும் துவளும் முந்நூல் விளங்கும் முனி சொல்ல - தோளிலும் மார்பிலும் அசைகின்ற முப்புரிநூல் விளங் கப்பெற்ற முனிவர் சொல்லுதலும்,—ஆளும் நாயகன் கயிலையில் இருக்கை கண்டல்லால் - என்னை ஆளுகின்ற தலைவராகிய சிவ பெருமான் கயிலையங்கிரியில் எழுந்தருளியிருக்கும் தோற்றத்தைத் தரிசித்தே யொழிய,—மாளும் இவ் வுடல் கொண்டு - இறந்து போவதாகிய இந்தத் தேகத்தைக் கொண்டு,—மீளேனென மறுத்தார் - திரும்பிச் செல்ல மாட்டேனென்று மறுத்தார். எ - று.

௩௪௭. இ - ள். ஆங்கு அவர் துணிவு அறிந்து - அவ்வாறுக அவ்வாகீசர் கொண்ட துணிவைப் பார்த்து,—அவர் தமை அறிய நீங்கும் மாதவர் - தம்மை அவ்வாகீசர் கயிலாசபதியென்று அறியும் படியாக அவ்விடத்தை விட்டு நீங்குகின்ற முனிவர் வேடங் கொண்ட சிவபெருமான்,—விசும்பிடைக் கரந்து - ஆகாயத்தில் மறைந்து,—நீள்மொழியால்-பெருமை பொருந்திய அசரீரி வாக்கி னல்,—நாவினுக் கரசனே யெழுந்திரு என்று உரைப்ப - நாவுக் கரசனே எழுந்திருப்பாயாக என்று கூற,—நீங்கு நீங்கிய யாக்கை கொண்டு எழுந்து - ஊறுபாடுகள் நீங்கப்பெற்ற தேகத்தோடு எழுந்து,—ஒளி திகழ்வார் - அழகு விளங்க நின்றார். எ - று.

௩௪௮. இ - ள். அண்ணலே - பெருமையிற் சிறந்தவரே,— எனையாண்டு கொண்டருளிய அமுதே - என்னை யாட்கொண்

டருளிய அமுதம் போன்றவரே,—விண்ணிலே மறைந்து அருள் புரி வேத நாயகனே - ஆகாயத்திலே மறைந்து நின்று எனக்கு அருளைச்செய்த வேதங்களுக்கெல்லாம் தலைவரே,—திரு கயிலையில் வீற்றிருந்த நின் கோலம் கண்ணினால் கண்ணி-திருக்கயிலாச மலையிலே வீற்றிருந்தருளிய தேவரீரது திருக்கோலத்தை அடியேன் இந்தக் கண்களினால் வந்து கண்டு,—தொழ நயந்து அருள் புரி யெனப் பணிந்தார் - தொழும்படியாக விரும்பி அருள்செய் யென்று வேண்டி வணங்கினார். எ - று.

௧௬௯. இ - ள். தொழுது எழுந்த நல் தொண்டரை நோக்கி- வணங்கி எழுந்து நின்ற தொண்டராகிய அப்பர் சுவாமிகளை நோக்கி, — இறைவர் - சிவபெருமான், — விண் தலத்தில் எழு பெருந் திரு வாக்கின் - ஆகாயத்தில் எழுந்த பெரிய சிறந்த அசரீரி வாக்கினால், —இப்பொய்கை முழுகி-இந்தத் தடாகத்தில் முழுகி,— நம்மை நீ - நம்மை நீ,—கயிலையில் இருந்த அம்முறைமை - கயிலையில் நாமிருந்த அத்தோற்றத்துடன்,—பழுதில் சீர்த் திருவை யாற்றில் - பழுதில்லாத சிறப்புப் பொருந்திய திருவையாற்றில்;— காணெனப் பணித்தார் - தரிசிப்பாயாக என்று கட்டளையிட்டருளினார். எ - று.

விண் தலத் தெழும் வாக்கு - ஆகாயவாணி, அசரீரி வாக்கு.

௧௭0. இ - ள். ஏற்றினார் அருள் தலை மிசைக் கொண்டு எழுந்து இறைஞ்சி - இடபவாகனராகிய சிவபெருமானது அருள் வாக்கைச் சிரமேற்கொண்டு வணங்கி, — வேற்றுமாகி - முன் வேறாகிய முனிவர் வடிவங் கொண்டும்,—விண்ணாகி நின்றார் மொழி விரும்பி - பின் அசரீரியாகி நின்றவருமாகிய பெருமான் மீது விருப்பத்துடன்,—(வேற்றாகி என்னும் பதிகத்தை அருளிச் செய்து),—ஆற்றல் பெற்று - தேக ஊறுபாடுகள் நீங்கி வலிமையுடையவராய்,—அண்ணலார் அஞ்செழுத்தோதி - அந்தச் சிவ பெருமானது பஞ்சாக்ஷரத்தைச் செபித்துக் கொண்டு,—பணியால் - அந்தச் சிவபெருமானுடைய கட்டளைப்படி,—பால் தடம் பொய்கையில் மூழ்கினார் - பக்கத்திலுள்ள பெரிய தடாகத்தில் முழுகினார். எ - று.



பக்கத்திலுள்ள தடாக மென்றது சிவபெருமான் முனிவராய்த் தம்மோடு கொண்டுவந்த தடாகத்தை.

ஆற்றலென்பது - பெருமானது அருள் பெற்றதனால் உண்டாய மனத்திட மெனினும் பொருந்தும்.

பால் தடம் என்பதற்கு - பால்போலும் நீர் பொருந்திய தடம் என்னினுமாம்.

௧௭௧. இ - ள். ஆதி தேவர் தம் திருவருட் பெருமை யார் அறிந்தார்-முதல்வராகிய சிவபிரானது மகத்துவத்தை (உலகில்) யார் அறிந்தவர்கள்,—போதம் மாதவர் - பெரிய தவப்பேறுடையராகிய திருநாவுக்கரசு சுவாமிகள்,—பனி மலர் பொய்கையின் மூழ்கி - குளிர்ந்த மலர்கள் பொருந்திய அத்தடாகத்தில் மூழ்கி,— மாதொர் பாகனார் மகிழும் - உமாதேவியாரை இடப்பாகத்தில் வைத்த சிவபெருமான் விரும்பிய,—ஐயாற்றில் ஓர் வாவி மீது தோன்றி - திருவையாற்றிலுள்ள ஒரு வாவியில் தோன்றி,— எழுந்து வந்தனன் - எழுந்து வந்தனர்,—உலகெலாம் வியப்ப - உலகத்திலுள்ளவர்கள் அனைவரும் அதிசயிக்கும்படி. எ - று.

௧௭௨. இ - ள். வம்பு உலா மலர் வாவியின் கரையில் வந்து ஏறி - வாசனை பொருந்திய மலர்களையுடைய வாவியின் கரையிலே வந்தேறி,—உம்பர் நாயகன் திருவருள் பெருமையை உணர்வார் - தேவர்களுக்குத் தலைவராகிய சிவபெருமானது திருவருளின் மகத்துவத்தை உணர்ந்து,—எம்பிரான் தரு கருணை இது என - எமது பெருமானார் தந்தருளிய கருணை இதுவென்று,—இருகண் பம்பு தாரை நீர் வாவியில் - இரண்டு கண்களினின்று பெருகுகின்ற நீர்த்தாரையாகிய வாவியிலே,—படிந்து எழும்படியார் - மூழ்கி எழுகின்ற தரத்தையுடையராகிய அப்பர் சுவாமிகள். எ - று.

௧௭௩. இ - ள். நீள் கொடி மிடையும் வீதிகள் விளங்கிய - நீண்ட கொடிகள் நெருங்கி இருக்கின்ற வீதிகள் விளங்கப் பெற்ற,—ஐயாறு உடைய நாயகர் - திருவையாற்றில் எழுந்தருளப் பெற்ற தலைவராகிய சிவபெருமானது,—சே அடி பணிய வந்து

உறுவார் - சிவந்த திருவடிகளை வணங்கக் கிடைக்கப் பெற்றவராகிய அப்பர் சுவாமிகள்,—அப்பதி அடைய - அந்தத் தலத்தில் வந்துசேர்ந்து,—நிற்பவும் சரிப்பவுமான - சகல சராசரங்களுமாய,—புடை யமர்ந்த தம் துணையொடும் - ஒரு பாகத்தில் அமர்ந்தருளிய தமது துணைவியாகிய உமாதேவியாரோடும்,—பொலிவன கண்டார் - பொலிந்து விளங்குவதைக் கண்டார். எ - று.

கஎச. இ - ள். பொன்மலைக் கொடியுடன் - இமைய மலையரசன் புத்திரியாகிய உமையம்மையுடன்,—அமர் வெள்ளியம் பொருப்பின் தன்மையாம்படி - வீற்றிருந்தருளிய கயிலையங்கிரித் தரிசனம்போலிருக்கும்படி,—சத்தியும் சிவமுமாம் சரிதை - சத்தியுஞ் சிவமுமாயிருக்கின்ற முறைமையோடு,—பன்மை யோனிகள் யாவையும் - பல்வேறாகிய யோனிகள் எல்லாம், — பயில்வன பணிந்து - அமைந்திருக்கின்ற முறைமையையும் வணங்கி,—மன்னு மாதவர்-நிலைபெற்ற தவத்தினையுடைய வாகீச முனிவர்,—தம்பிரான் கோயில் முன் வந்தார் - சிவபெருமான் கோயிலுக்கு முன்பாக வந்தார். எ - று.

கொடி உவமை ஆகுபெயர்.

கஎரு. இ - ள். காணும் அப்பெரும் கோயிலும் - தாம் கண்டு தரிசித்த அந்தப் பெரிய கோயிலும்,—கயிலை மால் வரையாய் - பெரிய கயிலைமலையாக,—பேணும் மால் அயன் இந்திரன் முதல் பெரும் தேவர்கள் - அவ்விடத்து வணங்குகின்ற அரி பிரமா இந்திரன் முதலாகிய பெரிய தேவர்கள்,—பூணும் அன்பொடு போற்றிசைத்து எழும் ஒலி பொங்க - கொண்டுள்ள அன்போடு போற்றித் துதித்தலினால் எழுகின்ற ஒலியானது பரவ,—தாணு மாமறை யாவையும் தனித்தனி முழங்க - நிலை பெற்ற பெரிய வேதங்கள் எல்லாம் வேறு வேறாக ஒலிக்க. எ - று.

இதுமுதல் ஐந்து செய்யுளும் குளகம்.

கஎசு. இ - ள். தேவர் தானவர் சித்தர் விச்சாதரர் இயக்கர் - தேவர்களும் தானவர்களும் சித்தர்களும் விச்சாதரர்களும்



இயக்கர்களும்,—மேவும் மாதவர் முனிவர்கள் - அவ்விடத்து தங்குகின்ற மாதவர்களும் முனிவர்களும், — புடையெலாம்நிடைய - எல்லாப் பக்கங்களிலும் நெருங்கி இருக்க,—காவி வாள் அரம்பையர் - காவிமலர் போன்ற ஒளி பொருந்திய விழிகளையுடைய தேவப் பெண்களது, — கானமும் முழவும் - கீதஒலியும் முழவப்பறை ஒலியும்,—தாவில் ஏழ்கடல் முழக்கினும் பெருகொலி தழைப்ப - குற்றமற்ற ஏழு சமுத்திரத்தின் ஒலியினும் பெரிய ஒலியைப் பெருக்க. எ - று.

கஎஎ. இ - ள். கங்கையே முதல் தீர்த்தமாம் கடவுள் மாநதிகள் - கங்கையை முதலாகக் கொண்ட தீர்த்தங்களாகிய பெரிய தெய்வத்தன்மை பொருந்திய நதிகள்,—மங்கலம் பொலி புனல் பெரும் தடங்கொடு வணங்க - சுபகரம் நிறைந்த நீர் பொருந்திய பெரிய தடாகங்களின் வடிவைக் கொண்டு வணங்க,—எங்கும் நீடிய பெருங் கணநாதர்கள் இறைஞ்ச - எவ்விடத்தும் நிறைந்திருக்கின்ற பெரிய கணத்தலைவர்கள் வணங்க,—பொங்கு இயங்களால் பூதம் வேதாளங்கள் போற்ற - ஆரவாரிக்கின்ற வாத்தியங்களோடு பூதங்களும் வேதாளங்களும் துதிக்க. எ - று.

கங்கை முதலிய நதிகளின் அதிதேவதைகள் தடாகங்களின் வடிவத்தை எடுத்து நின்று வணங்கின என்றார்போலும். இவ்விதக் கூற்று கவி வழக்கு.

கஎஅ. இ - ள். அந்தண் வெள்ளி மால்வரை இரண்டாமென - அழகிய குளிர்ச்சி பொருந்திய பெரிய வெள்ளிமலையிரண்டென்று,—அணைந்தோர் சிந்தை செய்திட - அங்கு வந்தவர்கள் நினைக்கும்படி, — செங்கண்மால் விடை எதிர் நிற்ப - சிவந்த கண்களையுடைய விஷ்ணுவாகிய இடபம் திருச்சந்நிதியில் நிற்க,—முந்தை மாதவப் பயன் பெறும் முதன்மையான் மகிழ்ந்து - முன்னாளில் செய்த பெரிய தவப்பயனைத்தான் அத்தலத்திற் பெற்ற முதன்மையினால் மகிழ்ச்சியடைந்து,—நந்தியெம்பிரான் - நமது நந்தியர்தலைவர்,—நடுவிடை ஆடி முன் அணுக - நடுவின்கணுள்ள கண்ணாடிமுன் நிற்கவும். எ - று.

ஏ - அசை.

முந்தை மாதவப் பயன்பெறு முதன்மை யென்றது - சிலாதர முனிவர் புத்திரராய்த் தோன்றி மானுட முனிவராய் திருவையாற்றில் செய்த தவப்பயனால் அம்மானுட சரீரத்தை மாற்றி கயிலாய சரீரமாக்கி நந்தியாயின ரென்றதை.

செங்கண்மால்விடை ஆலயத்தின் புறத்தும் நந்திப்பிரான் கோயிலின் நடுவேயுள்ள கண்ணாடிக்கு முன்னும் நிற்க எனக் கொள்க. நடுவிடையாடி முன்னாக என்பதற்கு கனகசபையின் கண் திருநிருத்தம் செய்தருளும் பிரானார் திருச்சந்நிதியில் நிற்க என்னினுமாம்.

௱௭௯. இ - ள். வெள்ளி வெற்பின்மேல் மரகதக் கொடியுடன் விளங்கும் - வெள்ளியங் கிரியின்மேல் பச்சைக் கொடியுடன் விளங்கும்,—தெள்ளு பேர் ஒளி பவள வெற்பு என - தெளிந்த பெரிய ஒளி பொருந்திய பவளமலையைப்போல,—இடப்பாகங் கொள்ளும் மாமலையாள் உடன் - வாமபாகத்தை வவ்விக் கொண்ட பெரிய மலையரசன் புத்திரியாகிய உமாதேவியாருடன்,—கூட வீற்றிருந்த-கூட வீற்றிருந்தருளிய,—வள்ளலாரை முன் கண்டனர் - வேண்டியார்க்கு வேண்டினவர்களுக்கு அருளும் வள்ளல் ஆகிய சிவபெருமானை தனக்கு முன்பாகக் கண்டார் திருநாவுக்கரசு நாயனார். எ - று.

௱௮௰. இ - ள். கண்ட ஆனந்தக் கடலினை - தாம் தரிசித்தருளிய ஆனந்த சமுத்திரத்தை,—கண்களால் முகந்துகொண்டு - தமது கண்களினால் அள்ளிக் கொண்டு,—கைகுவித்து - தன்னுடைய கரங்களைச் சிரமேற் குவித்துக் கொண்டு,—எதிர் விழுந்து எழுந்து மெய்குலைய - எதிரே விழுவதும் எழுவதும் ஆகி தமது தேகமானது நடுங்க,—அண்டர் முன்பு நின்று - சிவபெருமானது சந்நிதானத்தில் நின்று,—ஆடினார் பாடினார் அழுதார் - கூத்தாடினார் பாடினார் அழுதார்,—தொண்டனார்க்கு அங்கு நிகழ்ந்தன யார் சொல வல்லார் - தொண்டராகிய அப்பர் சுவாமிகளுக்கு அவ்விடத்து நடந்தவைகளை யார்தான் சொல்லவல்லவர்கள். எ - று.



௱௮௧. இ - ள். முன்பு கண்டு கொண்டு - தனக்கு எதிரே சிவபெருமானைத் தரிசித்துக் கொண்டு,—அருளின் ஆர் அமுது உண்ண - அருளாகிய நிறைந்த அமுதத்தை உண்பதற்கு,—மூவா அன்பு பெற்றவர் - குறைவில்லாத அன்பைப் பெற்றவராகிய அப்பர் சுவாமிகள்,—அளவு இலா ஆர்வம் முன் பொங்க - அளவில்லாத ஆசையானது மேலிட்டெழ,—பொன்பிறங்கிய சடையாரை - பொன்போலும் ஒளிருகின்ற சடையையுடையவராகிய சிவபெருமானை,—போற்று தாண்டகங்கள்-துதித்தற்காகிய திருத்தாண்டகங்களால்,—இன்பம் ஓங்கிட ஏத்தினார் - மகிழ்ச்சி பெருகும்படி புகழ்ந்து துதித்தார்,—எல்லையில் தவத்தோர் - அளவில்லாத தவத்தைச் செய்தவராகிய அப்பர் சுவாமிகள். எ - று.

௱௮௨. இ - ள். ஆய வாறு - அவ்வாறு,—அவர் மனம் களிப்புற - அப்பர் சுவாமிகளது மனமானது மகிழ்ச்சியடைய,—கயிலை மேய நாதர் - கயிலையங்கிரியில் வீற்றிருந்தருளிய சிவபெருமான்,—தம் துணையொடும் வீற்றிருந்தருளி-தமது துணைவியாகிய உமாதேவியாரோடும் வீற்றிருந்தருளி,—தூய தொண்டரும் தொழுது எதிர் நிற்ப - பரிசுத்த தொண்டராகிய அப்பர் சுவாமிகளும் முன்பு தொழுது நிற்க,—அக்கோலம்-அந்தக் கோலத்தை,—சேயதாக்கினார் - மறைத்து அருளினார்,—திருவையாறு அமர்ந்தமை திகழ - திருவையாற்றின்கண் அக்கோலத்தோடு வீற்றிருந்தமை உலகத்தில் உள்ளவர்களுக்கு விளங்கும்படி. எ - று.

௱௮௩. இ - ள். ஐயர் கோலம் அங்கு அளித்து அகன்றிட - சிவபெருமான் அந்தத் திருக்கோலத்தை அவ்விடத்தே காட்டி அங்கு நின்று நீங்க,—அடித்தொண்டர் - அடியாராகிய அப்பர் சுவாமிகள்,—மையல் கொண்டு உளம் மகிழ்ந்திட வருந்தி - மயக்கத்தைக் கொண்டு மனமானது மகிழ்ச்சியடைய அதனால் வருந்த

முற்று,—அங்கு செய்ய வேணியர் அருள் இதுவோ வெனத் தெளிந்து - அவ்விடத்தில் சிவந்த சடையினையுடையராகிய சிவபிரானது அருள் இது எனத் தெளிவுற்று,—வையம் உய்ந்திட - உலகத்தில் உள்ளோர் உய்யும் பொருட்டாக,—கண்டமை பாடுவார் மகிழ்ந்து-சிவபிரானது திருக்கோலத்தை தாம் தரிசித்ததை மகிழ்ச்சியோடு பாடுவாராயினர். எ - று.



# மகாபாரதம்.

## ஆரணிய பருவம்.

### அருச்சுனன் தவநிலைச்சருக்கம்.

௧௦௪ — ௧௫௦.



௧௦௪. இ - ள். எய்தகணை திருமேனி எய்து முன்னர் - அருச்சுனன் எய்த அம்பு வேடராகிய சிவபெருமானது திருமேனியைக் கிட்டிச் சேர்வதற்கு முன்னரே,—இறகு துணிந்து - இறகு வெட்டுண்டு,—ஒன்று இரண்டாய் இலக்கு உறாமல் - ஒவ்வொரு அம்பும் இவ்விரண்டு துண்டாகி அருச்சுனன் குறித்து எய்த மூன்று இலக்குப் பொருள்களையும் அடையாதபடி,—மூன்று வாளியை - மூன்று அம்புகளை,—வெய்தின் வலியுடன் எய்தான் - சிவவேடர் விரைவாக வலிமையோடும் எய்தார்,—விண்ணவர் கோன்மகன் மேலும் வேறொன்று எய்தான் - அவ்வேடர் தேவர்களுக்குத் தலைவனாகிய இந்திரன் மகனாகிய அருச்சுனன்மேல் வேறொரு அம்பையும் எய்தார்,—அதின் இவன் வினைதமுற தொடுத்தான் என்பது அறியாமல் - மெல்லிதாய் இவ்வேடர் இந்த ஒரு அம்பை விளையாட்டாக எய்தார் என்ற உண்மையை அருச்சுனன் அறியாதவனாய்,—எயினன் முடியணிந்த பீலி கொய்து - அவ்வேடர் தாம் முடிமீதணிந்த மயிற்றோகையை வெட்டி,—நதியறல் சிதற - தலையிலணிந்த கங்கை நதியின் நீர் சிதறவும்,—பிறையும் மானும் குலைய - பிறைச்சந்திரனும் கையிலுள்ள மானும் கலங்கவும்,—ஒரு கணை குரக்குக் கொடியன் எய்தான் - அனுமக்கொடியையுடைய அருச்சுனன் ஒரு கணையை எய்தான். எ - று.

அம்பினடியிற் கட்டிய இறகு சிதையின் அதன் விரைவும் செல்லும் வழியும் மாறுபட்டு இலக்குத் தவறுமாதலின் இறகு வெட்டுப்படும்படி அம்பு எய்தார் என்க.

மூகனென்னு மரக்கன் அருச்சுனனைக் கொல்லாவண்ணம் வேடவடிவம் எடுத்துவந்தாராதலின், தாம் அவ்வரக்கனை விளையாட்டாகவேனும் கொன்றுவிடாதபடி மென்மையாக ஒரு அம்பை அவன்மீது எய்தார் என்பார் ஆதின் இவன் விசையுறத் தொடுத்தான் என்றார்.

மூன்மூன்று கணைகளினதும் பின் தனித்த வொருகணையினதும் வீற்றுக்கும் விரைவுக்கும் வேறுபாடுதோன்ற ஆதின் தொடுத்தனன் என்றலுமாம்.

ச௰உ. இ - ள். அற்போலச் சூழ்கின்ற கிராதர் எல்லாம் - இருள் சூழ்வதுபோலச் சூழ்ந்து வருகின்ற வேடர்களெல்லாரும்,—அவன் முடிமேல் இவன் எய்தது அறிந்து - அந்தச் சிவனாகிய வேடரது முடியின்மேல் இந்த அருச்சுனன் எய்ததை அறிந்து,—தீயின் நிற்போன் மேலெழுதலும் - அக்கினியின்மேல் நின்று தவஞ் செய்கின்றவனாகிய அவ்வருச்சுனன்மீது போர் செய்ய எழுதலும்,—அங்கு அவரை யெல்லாம் நில்லுமெனக் கையமர்த்தி - அவ்வேடர்களை யெல்லாம் நில்லுங்களென்று தடுத்து,—அடடா நீ இன்று எய்த விற்போர் கண்டனம் - அடே அடே நீ இன்று செய்த விற்போரின் திறத்தை நாம் கண்டோம்,—விற்பிடிக்கும் விரகு அறியோம் - வில்லைப் பிரயோகிக்கின்ற சாமர்த்தியத்தை அறிந்தோமல்லேம்,—உன் இடத்தே வேத விற்போர் கற்போம் என்று - உன்னிடத்தே தனுர்வேதத்திற் கூறப்பட்ட போர் முறையைக் கற்றுக் கொள்வோம் என்று சொல்லி,— ஒருகணை அவன்மேல் விட்டான் - ஒருகணையை அந்த அருச்சுனன்மேலே செலுத்தினார், — கனகமலைச் சிலை வளைத்த கையினனே - மேருமலையை வில்லாக வளைத்த கையினையுடைய சிவபெருமானாகிய வேடர். எ - று. மற்று அசை.

ச௰௩. இ - ள். பீலி முடியோன் விடு பிறைக்கணையை - மயிற்றோகையை முடியிலணிந்த சிவனாகிய வேடர் செலுத்திய பிறைமுகாஸ்திரத்தை,—வேறொரு பிறைக்கணையினால் விலக்கி - வேறொரு பிறைமுகாஸ்திரத்தினால் விலக்கி,—விற்கோலி வடிவாளி மழை சிந்தினன் - வில்லை வளைத்து கூரிய அம்புகளாகிய மழையைச் சொரிந்தான்,—மழைக்கரிய கொண்டலென நின்ற குமரன் - (யாரெனில்) மழைமுகில்போல நின்ற குமாரனாகிய அருச்சுனன்,—மூலிவடிவாமெயினன் மேல் அவைபடாமல் - மூலகாரண வடிவமாய் நின்ற அந்தச் சிவவேடர்மீது அந்த அஸ்திரங்கள் சென்று படாமல்,—முனை மண் மிசை குளிக்க - கூர்ப்பக்கம் மண்ணிலே புதைய,—முரண் ஆர் வேலி யிடுமாறு என விழுந்தன - கடினமான நிலத்திலிட்ட விளக்குமாறுபோல விழுந்தன,—விழுந்தவை விசயன் நனி கண்டு வெகுளா - இப்படி விழுவதை அருச்சுனன் கண்டு மிகக் கோபித்து. எ - று.

ச௰ச. இ - ள். வேணி முடி வேடன் மிசை - சடைமுடியையுடைய வேடர்மீது,—வேறுமொரு சாயகம் விடுத்தனன் - அருச்சுனன் இன்னுமொரு அம்பைச் செலுத்தினான்,—விடுத்தகணை வில் நாணியொடு முன்பின் ஒடு பின்பு தொடுகின்றகணை தடிவன் அற வெட்டுதலும் - அவன் செலுத்திய அம்பு வேடரது வில் நாணையும் வலிமையோடு பின்னுக்குச் செலுத்தப்படுகின்ற அம்புகளையும் நடுப்பக்கம் அறுந்துபோக வெட்டுதலும்,—கோணிய இளம்பிறை முடித்தவன் வெகுண்டு - வளைவான இளம்பிறைச் சந்திரனைத் தரித்த சிவவேடர் கோபம் கொண்டு,—பல கோல்கள் விட - அனேக அம்புகளைச் செலுத்த,—இந்திர குமரன் பாணியுடனே தொடை நடுங்கி - இந்திரன் மகனாகிய அருச்சுனன் தனது கைகளும் தொடைகளும் நடுங்கப்பெற்றவனாய்,—அயல் நின்றதொரு பாதபம் மருங்கு அணுகினன் - கிட்ட நின்ற ஒரு மரத்தின் பக்கத்தே போனான். எ - று. ஏ அசை.

ச௰ரு. இ - ள். தவமே தனமெனக் கொண்டு புரியும் வில்லி - தவமே செல்வமாகக் கொண்டு அதனைச் செய்கின்ற வில்வீரனாகிய அருச்சுனன்,—மெய் குலைந்து அயருகின்ற நிலையை - தேகம் நடுங்கிச் சோருகின்ற நிலைமையை,—கண்டு அருகு நின்ற இமவான் மகள் - பக்கத்தில் நின்று கண்ட இமைய மலையரசன் புத்திரி

யாகிய உமையம்மையார்,—மிகு கருணையோடு இரங்கி உரைக்க - அவன்மீது இரக்கங்கொண்டு மிகுந்த அருளுடன் தமது தலைவருக்குச் சொல்ல,—பண்டு தவமே புரி இளைப்பு அற மனத்தின் மிகு பரிவுடையனாகி - (சிவபெருமான்) அவன் முன் தவம் செய்ததனால் வந்த இளைப்பு நீங்கும் விருப்பத்தை மனதிலே மிக வுடையவராய்,—அவனை வெகுளா - அவ்வருச்சுனன்மீது கோபம் இல்லாதவராய்,—எண் திசையும் வென்று அனல் அளித்த சிலை நாணியற - எட்டுத் திசையிலுமுள்ளோரை வென்றதும் அக்கினி தேவன் கொடுத்ததுமாகிய வில்லினது நாண் அறும்படியாக,—எயினர் பதி எய்தனன் - வேடர் தலைவராய் வந்தருளிய சிவபெருமான் எய்தார். எ - று. அரோ அசை.

உமாதேவியார் அவ்வருச்சுனன்மீது இரக்கங்கொண்டு அருளுடன் கூறினமையாலும், அவன் தன்னைக் குறித்து நெடு நாள் தவஞ் செய்து இளைத்தமையாலும், அவனிடம் கோபம் கொள்ளாது அவனது வில்லின் நாணை மாத்திரம் அறுத்தார் என்க. வெகுளா என்பதற்கு கோபிப்பார்போல என்னினுமாம்.

கoசு. இ - ள். உழுந்து உருளும் எல்லைதனில் - உழுந்துருளுகின்ற நேரத்திலுள்,—வில்லின் நெடு நாண் அற - (அருச்சுனனது) வில்லின் நீண்ட நாண் அறுந்துபோக,—உரத்தொடு எதிர் ஓடி - விரைவாக எதிரே ஓடி,—வரிவிற் கழுந்து கொடு - வரிந்த வில்லினது குதையினால்,—மா முடியின் மோதுமுன் - முடியிலே அடித்தலும்,—உயர் கண்ணி படுபீலி இழந்தது - உயர் வாகிய மாலையாகச் செய்யப்பட்ட மயில்தோகை இல்லாமற் போயிற்று,—மதியின் கொழுந்து அமுது சோர - இளம்பிறைச் சந்திரனினின்று அமுதம் சிந்தவும்,—விடநாகர் சுடிகைத்தலை குலைந்து மணிசிந்த - நஞ்சினையுடைய சர்ப்பங்களின் உச்சித் தலைகள் நடுங்கி அங்குள்ள இரத்தினங்கள் சிதறவும்,—நதியாள் எழுந்து தடுமாறி அகல்வானில் உற - கங்கா தேவியானவள் எழுந்து தடுமாற்றங்கொண்டு அகன்ற ஆகாயத்திற் செல்லவும்,—வேடனும் இளைத்து அவச முற்றனன் - சிவ வேடரும் இளைத்து அறிவு மயங்கினர். எ - று.

அரோ - அசை. உம் உயர்வு சிறப்பு.



கoஎ. இ - ள். விண்ணிலுறை விரிஞ்சன் அரியேமுதல் வானவரில் யார் அடி படாதவர் - விண்ணுலகத்துள்ள பிரமன் விஷ்ணு முதலிய தேவர்களுள் யார் அந்த அடியைப் படாதவர்,—மண்ணிலுறை மனுக்கள் முதலோர்கள் மானவரில் யார் அடி படாதவர் - மண்ணுலகத்துள்ள மனுக்கள் முதலிய மனிதர்களில் யார் அந்த அடியைப்படாதவர்,—அதலக் கண்ணிலுறை கட்செவி மகீபன் முதலோர் நாகர்களில் யார் அடி படாதவர்கள் - பாதாள லுலகத்துள்ள சர்ப்பங்களுக்குத் தலைவனான ஆதிசேடன் முதலாகிய நாகர்களில் யார் அவ்வடியைப் படாதவர்கள்,—எண்ணில் பல யோனியிலும் யா அடி படாதன - எண்ணில்லாத பல வேறு வகையான சிருஷ்டிகளிலும் எவை அந்த அடியைப் படாதவை,—இருந்துழி இருந்துழியரோ - தாம் இருந்த இருந்த இடத்திலிருந்து. எ - று.

அரோ - அசை. ஏ எண்ணுப்பொருளது. மனு - ஸ்மிருதி முதலிய நூலோர்.

கoஅ. இ - ள். வேதமடியுண்டன - அந்த அடி வேதங்களிற் பட்டது,—விரிந்த பல ஆகம விதங்கள் அடியுண்டன - அந்த அடி பல வெவ்வேறு விதங்களாக விரிந்த ஆகமங்களிற் பட்டது,—ஓர் ஐம்பூதம் அடியுண்டன - அந்த அடி ஒப்பற்ற ஐம்பூதங்களிற் பட்டது,—விநாழிகை முதல் பகல் செய் பொழுதொடு சலிப்பில் பொருளின் பேதமடியுண்டன - விநாடி முதலாகச் சொல்லப் படுகின்ற சிறுபொழுது பெரும்பொழுதுகளிலும் மற்றைய அசைவில்லாத பல வேறுவகைத்தாய பொருள்களிலும் அந்த அடி பட்டது,—பிறப்பிலி இறப்பிலி - பிறப்பில்லாதவரும் இறப்பில்லாதவரும்,—பிறங்கல் அரசன் தன் மகளார் நாதன் - மலையரசன் புத்திரியாகிய உமாதேவியார் தலைவரும்,—அமலன் - மலரகிதராகிய சிவபெருமான்,—சமரவேட வடிவங்கொடு - வேடனாய் யுத்த கோலங் கொண்டுவந்து,—நரன் கை அடியுண்டபொழுதே - அருச்சுனன் கையினால் அடிபட்டபோது. எ - று. ஏ அசை.

நரன்கையடியுண்டபொழுது "வேத" முதற் "பேத" மீருயுள்ள பொருள்கள் யாவும் தாக்குண்டன வெனினுமமையும்.

க0௯. இ - ள். என்பு ஒடு கொழுந் தசை நிணம் குருதி என்னு மவை யீரிரண்டாலும் வயிரா - எலும்பு கொழுவிய தசை நிணம் இரத்தம் என்று சொல்லப்படும் நான்கு பொருள்களினாலும் உடல் வயிரித்து,—வன்பு ஒடு வளர்ந்த மிருக அதிபதி - வலிமையோடு வளர்ந்த மிருகேந்திரனாகிய சிங்கம் போன்றவனும்,—சாரி எனும் வடிவு அழகு பெற்ற மறவோன் - இந்திரன் தானோ என்று சொல்லத்தக்க உருவத்தையும் அழகையும் பெற்ற வீரம்பொருந்திய அருச்சுனன்,—அன்பின் ஒடு பேர் அறம் வளர்த்தருள் எயிற்றி மிக அஞ்ச - அன்போடும் பெரிய அறத்தை வளர்த்து அருளிய உமாதேவியாராகிய வேடிச்சி மிகவும் பயப்பட,—அபிராமம் எயினன் பொன் புரையும் மேனியில் அடித்தமை பொருது - பேரழகு உள்ள வேடன் பொன் போன்ற திருமேனியில் அருச்சுனன் அடித்ததை திருவுள்ளத்திற் பொருது,—மற்போர் புரியுமாறு கருதா - மல்யுத்தத்தைச் செய்வதற்கு நினைந்தருளி. எ - று.

கக0. இ - ள். உள்ளடி விரல் தலைகள் - உள்ளங்கால் கால் விரல்கள் தலைகளும்,—புறவடி பரட்டின் உடன் உயர் கணைக் கால் - மேல் பாதங்களும் பரடும் உயர்ந்த கணைக்கால்களும்,—முழந்தாள் தன் அரிய குறு உயர் தாள் வரைகள் ஒத்த கடிதடமும் - முழந்தாள்களும் தன்னுதற்கு அரிய தொடைகளும் உயர்ந்த தாள்களும் மலைகளை ஒத்த கடிதடமும்,—உதரம் மார்பு திணி தோள் - வயிறும், நெஞ்சும் வலிமை பொருந்திய தோள்களும்,—துள்ளிவரு செங்கையொடு முன்கை பிடர் - உயர்ந்து எழுகின்ற சிவந்த கைகளும் முன்னுக்கு உள்ள கைகளும் பிடரியும்,—நெற்றியொடு குடமென எண்ணுபடையால் - நெற்றியும் தலையும் என்று சொல்லப்படுகின்ற படைகளினாலே,—வள்ளல் எனையாளுடைய மாதவனும் - வள்ளல் தன்மையை யுடையவரும் என்னை அடிமை கொண்டவருமாகிய உமாதேவிபாகராகும் சிவபெருமானும்,—மாதவனும் மல்லமர் தொடங்கி உற - பெரிய தவத்தைச் செய்து நின்ற அருச்சுனனும் மல் யுத்தத்தைத் தொடங்கிச் செய்ய. எ - று.

எ அசைச் சொல்.



ககக. இ - ள். மல்லமர் தொடங்கி இவர் இருவரும் வெகுண்டு பொர - மல் யுத்தத்தைத் தொடங்கி இவர்கள் இருவரும் கோபம் கொண்டு போர் செய்ய,—மாதிரமும் மாநிலமும் மேலெல்லையும் - அஷ்டதிக்குகளும் பெரிய நில உலகமும், வானுலகும்,—அதிர்ந்து சுழல்கின்ற பொழுதத்து - நடுங்கிச் சுழலுகின்ற பொழுது,—இமய இன்ப மயில் கேள்வன் வெகுளா - இமய மலையில் உதித்த சகல ஆன்மாக்களுக்கும் இன்பத்தை அளிக்கின்ற மயில்போன்ற உமை அம்மையாரது தலைவராகிய சிவ வேடர் கோபம் கொண்டு,—நல்லிசை புனைந்தமணி நூபுர விசால ஒளி - நல்ல நாதத்தையும் இரத்தினவரிகளையும் உடைய சிலம்பின் ஒளி,—நண்ணுபத நாண் மலரினால் - சேர்ந்த அன்றலர்ந்த மலர் போன்ற பாதத்தினால்,—வில்லியரில் எண்ணு திறல் வில்லுடைய - வில்வீரர்களுள் மதிக்கப்படுகின்ற வலிமையையுடைய காண்டீப மென்னும் வில்லைக்கொண்ட, — காளைதனை விண்ணுலகில் வீசினன் - காளைப்பருவமுடைய அருச்சுனனை ஆகாயத்திற் போக எறிந்தார். எ - று. அரோ - அசை.

நல்லிசை புனைந்த பதமெனக்கொண்டு - நல்ல கீர்த்தியை யுடைய பாதமெனப் பொருளுரைத்து அகலம் கூறினுமாம்.

ககஉ. இ - ள். விண்ணவர் தம் ஊர் புகுத - தேவலோகத்துக்குப் போகத்தக்கதாய் எறியப்பட,—விண்ணவர் பிரான் மதலை - தேவர்கட்கு அரசனாகிய இந்திரன் புத்திரனாகிய அர்ச்சுனன்,—விசையுடன் எழுந்து முகில்போல் - விரைவாக எழுந்து முகிலைப் போல, — மண்ணினிடை வீழ்தருமுன் - பூமியின் இடத்தே விழுவதற்கு முன்னே, — மார்பு அகலம் அல்லதை வயங்கு புறம் என்றும் தெரியான் - பகைவர்க்கு விசாலமாகிய மார்பேயன்றி விளங்குகின்ற முதுகாகிய புறம் எக்காலத்தும் தெரியவராதவனாகிய அருச்சுனன்,—எண்ணரிய ஞான வொளியாகி - மனதில் தியானித்தற்கும் அரிய ஞான வொளியாகி,—வெளியாகி வரு எயினர் பதியான-வேட உருவத்தோடு வருகின்ற வேடர் தலைவராகிய,—கருணை புண்ணியன் மகிழ்ந்து உருக - கருணை பொருந்திய புண்ணியராகிய சிவவேடர் மகிழ்ச்சியொடு மனம் கசிய,—நின்று ஒலியுடன் பழைய பூசல் பொர எண்ணி

எதிர்வான் - அவ்விடத்தே நின்று மிருந்த ஆரவாரத்துடன் தான் தொடங்கிய பழைய போரைச் செய்வதற்கு நினைத்து எதிரே வந்தான். எ - று. ஐ - அசை.

யுத்தத்தில் அருச்சுனன் எக்காலத்தும் பயந்து ஓடாதவன் என்றபடி.

௧௧௩. இ - ள். வெய்ய கணநாதர் - விரும்பப்படுகின்ற கணநாதர்களும்,— கணதேவர் - கணதேவர்களும்,— விபுதாதியர் விரிஞ்சி - தேவர் முதலியோர்களும் பிரமனும்,—சிவயோகியர் - சிவயோகிகளும், — அரும் செய்ய சுடரோன் - அரிய சிவந்த கிரணங்களையுடைய சூரியனும்,—அளகையாதிபதி - அளகாபுரிக்குத் தலைவனாகிய குபேரனும், — கின்னரர்கள் சித்தர் பல சாரணர் - கின்னரர்களும் சித்தர்களும் பல முனிவர்களும்,— மணிப் பையரவின் ஆடி - இரத்தினம் பொருந்திய படத்தையுடைய சர்ப்பத்தின்மீது நின்று விளையாடுகின்ற விஷ்ணுவும்,— புருகூதன் இவர் - இந்திரன் ஆகிய இவர்களும்,—சூழ்தர-சூழ்ந்து வர,—ஓர் பச்சை மயில் பாதியுடனே - ஓர் பசுமையாகிய தோகையையுடைய மயில்போன்ற உமாதேவியார் ஒரு பாதியாகவும்,— துய்ய விடைமீது-பரிசுத்தமான இடபத்தின் மேல்,—ஒரு செழும் சுடர் எழுந்தது - ஒரு செழுமையாகிய சுடரானது எழுந்தது,— தொழுந்தகையது ஆகும் அளவோ - எவராலும் வணங்கத்தக்க தான அளவையுடையதோ,—எவரும் வணங்கத்தக்க அளவைக் கடந்தது. எ - று.

௧௧௪. இ - ள். கைவில் உடனே கோடி பலர் எயினர் சூழ் வர - கையில் தாங்கிய வில்லுடன் பல கோடி வேடுவர்கள் தம்மைச் சூழ்ந்துவரவும்,—கன்னிமயில் பின்னர்வர - இளமயிலாகிய நித்தியகன்னிகையாம் உமாதேவியார் பின்னேவரவும்,—தெய்வ மறை ஞானிகள் தொடர்ந்து வர - தெய்வத்தன்மை பொருந்திய வேதங்கள் ஆகிய நாய்கள் பின் தொடர்ந்து வரவும்,—பொரு செய்ய சிவ வேடன் முடிமேல் - போர் செய்யும்படி வந்த சிவவேடனது முடியின்மீது,—சைவ முறையே - அருச்சுனன் சைவ சமய விதிப்படி,—இறைவர் தன்மலரினோடு - சிவபெருமானுக்



குரியதாகிய குளிர்ந்த கொன்றை மலரோடு,—அறுகு சாத்தி - அறுகம் புல்லையும் சாத்தி,—ஒளிர் காண் மலரெலாம் மெய்வடிவு கொண்டனைய - ஒளி பொருந்திய அன்றலர்ந்த புஷ்பங்களெல்லாம் ஒருருவெடுத்து வந்தாற்போன்ற,—கரிய தவவேடன் - கருமை நிறம் பொருந்திய தவவேடம் பூண்டுநின்ற அருச்சுனன்,— இணை விழி மலர் பரப்பி மகிழா - தனது இரண்டு விழிகளாலும் பார்த்து மகிழ்ந்து. எ - று. ஏ அசை.

கணநாதா முதலாகியோர் வேடுவர்களாகவும் உமாதேவியார் அவ்வேடுவர்கள் பின் செல்லுகின்ற. மயிலாகவும், வேதங்கள் அவர்களைப் பின் தொடர்ந்து வேட்டைக்குச் செல்கின்ற நாய்களாகவும், சிவபெருமான் வேடத்தலைவராகவும் அருச்சுனனுக்கு முன் வந்தாரென்க.

௧௧௫. இ - ள். மாலை-மாலையாகச் செய்யப்பட்ட,—தும்பை வகை - பலவித தும்பை மலர்களும், — செறிவில்லமொடு - நிறைந்த வில்வங்களும்,—கொன்றை மலர் - கொன்றை மலர்களும்,—சூதம் அறுகு கமழ்தரும் - மாம்பூக்களும் அறுகும் ஆகிய இவைகளின் வாசனை வீசுகின்ற,—செம்பவள வேணிமிசை திங்கள் நதி சூடியருள் - சிவந்த பவளம்போன்ற சடையின்மேல் சந்திரனையும் கங்கையையுஞ் சூடியவரும்,—செம்பொன் வடமேரு அனையான்-பொன்னுலாய வடதிசையிலுள்ள மகாமேரு மலையை ஒத்தவரும் ஆகிய சிவபெருமான்,—உம்பர்மணி யாழினொடு - உயர்வு பொருந்திய அழகிய யாழினாலே,—தும்புருவும் நாரதனும் உருகி இசை பாட - தும்புருவும் நாரதனும் மிகுந்த அன்போடும் இசைகளைப் பாட,—அருள்கூர் அம்பையுடனே - அதற்கு அருள் கூருகின்ற தாயாகிய உமையம்மையுடனே, — விடையின்மீது ஒளிர நின்றதனை - இடபவாகனத்தின்மேல் ஒளி விளங்க நின்ற திருக்கோலத்தை, — அஞ்சலிசெய்து அன்பொடு தொழா - அஞ்சலி செய்து அன்பொடு வணங்கி.

ஒடு, ஏ, எண்ணுப்பொருளில் வந்தன.

௧௧௬. இ - ள். ஆடினன் - கூத்தாடினன், — களித்தனன் - மகிழ்ச்சி யடைந்தான்,—அயர்ந்து நின்றனன் - பரவசமடைந்து

நின்றான், — ஓடினன் - ஓடினான், — குதித்தனன் - குதித்தான்,— உருகி மாழ்கினன் - மனமுருகி மயங்கினான்,—பாடினன் - பாடினான்,—பதைத்தனன் - பதைத்தான்,—சயந்த சிந்தையான் - மன விருப்பத்தோடு,—பவளமேனி யை நாடினன் நடுங்கினன் - பவளம் போலும் திருமேனியைப் பார்த்து நடுங்கினான். எ - று.

௧௧௭. இ - ள். விழுந்து அருவினையினின் மெலிந்து - பிறவியை எடுத்த கொடிய வினைகளினாலே மெலிவடைந்து,— நாயினும் அழுந்திய பிறவியின் - நாய்ப் பிறவியினும் மிக்க துன் பத்தைத் தருவதாகிய இந்த மானிடப் பிறவியின் நின்று,—அயருவேன் முனம் - தளர்ச்சி அடைகின்ற அடியேன் முன்னே,— செழுஞ்சுடர் மணி பணி - செழுமையாகிய ஒளி பொருந்திய இரத்தினத்தைச் சிரசிலே கொண்ட பாம்பையும்,—திங்கள் மௌலியாய் - சந்திரனை முடியில் தரித்தவரே,—எழுந்தருளிய இஃது என்ன மாயமோ - எழுந்தருளிய இது என்ன ஆச்சரியமோ. எ - று.

௧௧௮. இ - ள். ஆதியே - எல்லாவற்றிற்கும் முதல்வாயுள்ளவரே,—அண்டமும் அனைத்துமாய் ஒளிர் சோதியே - சகல உலகங்களும் மற்றையவைகளுமாய் விளங்குகின்ற ஒளியே,— கொன்றையம் தொங்கல் மௌலியாய் - கொன்றைப்பூ மாலையை அணிந்த முடியையுடையவரே, — வாதியே - ஆன்மாக்களின் மலத்தை நீக்கி அவர்களைப் பரிசுத்தமாக்குகின்ற இரசவாதியே,— மரகதவல்லியாள் ஒரு பாதியே - பச்சைக்கொடிபோன்ற உமாதேவியாரை ஓர் பாதியாய் உடையவரே, — பவளமாம் பரமரூபியே - பவளநிறம் பொருந்திய பரஞ்சோதியே. எ - று.

வாதியே என்பதற்கு என் தெய்வம் உன் தெய்வமென்று வாதிக்கப்படுபவர் என்பது மொன்று.

௧௧௯. இ - ள். பைய்ரா அணி மணி பவள மேனியாய் - படத்தையுடைய பாம்பை ஆபரணமாக அணிந்த அழகிய பவளம் போலும் திருமேனியை உடையவரே,—செய்யவாய் மரகதச் செல்விபாகனே-சிவந்த வாயையும் பச்சை நிறத்தினையும் உடைய



உமாதேவியாரை ஒருபாகத்தில் உடையவரே,—ஐயனே - சகல உலகங்களுக்கும் பிதாவே,—சேவடி அடைந்தவர்க்கெல்லாம் மெய்யனே - தேவரீரது திருவடிகளைத் தஞ்சம் என்று வந்து சேர்ந்தவர்களுக்கெல்லாம் மெய்யான கடவுளே,—எங்குமாய் விளங்கும் சோதியே - எங்கும் வியாபகமாய் விளங்குகின்ற சோதிமயமானவரே. எ - று.

௧௨௦. இ - ள். முக்கணும் - மூன்று கண்களும்,—நிலவு எழ முகிழ்த்த மூரலும் - ஒளி விளங்கும்படி அரும்பிய பற்களும்,— சக்கரவதனமும் - வட்டமான திருமுகங்களும்,—தயங்கு வேணியும் - பிரகாசிக்கின்ற சடையும்,—மை சயல் மரகதவல்லி - கருமை நிறம் பொருந்திய கயல்போலும் கண்களையும் பச்சை நிறத்தினையும் உடைய கொடிபோன்ற உமாதேவியார்,—வாழ்வுறு செக்கர் மெய் வடிவமும் - ஒருபாதியாகப் பொருந்தப்பெற்ற சிவந்த திருமேனியின் வடிவமும்,—சிறந்து வாழியே - சிறப்படைந்து என்ஞான்றும் வாழ்வதாக. எ - று. ஏ அசை.

௧௨௧. இ - ள். அன்பு உறு தருமனுக்கு அநுசன் ஆயினேன் - சகல உயிர்களுக்கும் அன்பு பொருந்திய எனது தமையனாகிய தரும இராசனுக்குத் தம்பியாகப் பிறந்துள்ளேன்,—நன் பரம் பொருளுக்கு நண்புமாயினேன் - சகல ஆன்மாக்களுக்கும் மோட்சமாகிய சுகத்தை அளிக்கின்ற பரம்பொருளாகிய தேவரீருக்கு நட்புரிமையுள்ளவனுமினேன்,—பொன்புரை மேனியாய் - பொன் மயமான திருமேனியை யுடையவரே,—போற்றினேன் உனை - தேவரீரை வணங்கப் பெற்றேன்,—என் பெரும் தவப் பயன் யார் பெற்றுர்களே - ஆதலால் என்போல பெரிய தவத்தின் பயனை உலகத்தில் யார் பெற்றுர்கள், ஒருவரும் இல்லை. எ - று. ஏ அசை.

௧௨௨. இ - ள். என்று இம் முறை கொண்டு இவன் இயம்பவே - என்று இவ்விதமாக இவ்வருச்சுனன் கூறுதலும்,—மன்றல் அம் கொன்றை அம் மாலை மௌலியான் - வாசனை பொருந்திய கொன்றை மாலையை அணிந்த முடியை உடைய சிவபெருமான்,—

ஒன்றிய தவம்புரி உம்பர் தம்பிரான் தன் - சுவர்க்க பதவியை அடையும் பொருட்டு தவத்தைச் செய்தவனாகிய தேவர்களுக்குத் தலைவனான இந்திரனது,—திரு மதலையைத் தழுவினன் - அழகிய புத்திரனான அருச்சுனனைத் தழுவினன். எ - று. அரோ - அசை.

௧௨௩. இ - ள். தழுவினன் - அவ்வாறு தழுவி, — பெருந் துயர் ஆற்றி - பெரிய துயரத்தை நீக்கி,—தண் அளி பொழிதரு கண்ணினன் - குளிர்ச்சியான கிருபையைப் பொழிகின்ற திருக் கண்களையுடையவராய்,—புரக்கும் சிந்தையன் - அவனைப் பாது காக்கின்ற திரு வுள்ளத்தை யுடையவராயும்,—அழிவற ஒழிவற - என்றும் அழிவில்லாததாயும் நீக்கமற்றதாயும்,—அமர்ந்த சோதி யன் - பொருந்திய சோதிமயமான சிவபிரான்,—பழுதறு மொழி சில பகர்ந்து தேற்றினான் - குற்றமற்ற சில சொற்களைக் கூறி அவனைத் தெளிவித்தார். எ - று.

௧௨௪. இ - ள். சூதினில் யாவையும் தோற்று - சூதாட்டத்தி னால் உங்களுக்குரிய பொருள்கள் எல்லாவற்றையும் தோற்று,— கானிடை எதிலர் போல நீர் இளைத்து வாடினீர் - காட்டினிடத்தே வறிஞர்களைப்போல நீங்கள் இளைத்து வாட்டமுற்றீர்கள்,—வாது செய் புலன்களையடக்கி - மனமானது ஒருவழிச் செல்லாது தடுத்து பொருதுகின்ற பஞ்ச புலன்களையும் அடக்கி,—மண்ணின்மேல் நீ தவம் புரிந்தமை - இந்நிலவுலகில் நீர் தவம் செய்த தன்மையை,— நினையலாகுமோ - எவராவது நினைக்கக்கூடியதாகுமோ. எ - று.

௧௨௫. இ - ள். மூகன் என்று உரைக்கும் அம்மூகதான வன் - மூகன் என்று சொல்லப்படுகின்ற அந்த பன்றி உருவந் தாங்கிய அரக்கன்,—வேகமோடு ஏனமாய் விரைவில் வந்தனன் - கோபத்தோடு பன்றி ரூபமாய் விரைந்து வந்தான்,—ஆகவெங் கொடியவன் நவின்ற வாய்மையால் - மிகக் கொடியவனாகிய துரியோதனன் கூறிய சபதத்தின்படி,—யோகு செய் உனது உயிர் உண்ண எண்ணியே - தவத்தைச் செய்து கொண்டு நின்ற உனது உயிரை உண்ணும்படி நினைத்து. எ - று. ஏ - அசை.

௧௨௬. இ - ள். வந்தவன் முந்துமுன் - அவ்வாறு வந்த அரக்கனானவன் எனக்கு முந்தி உன்னிடத்து வருதற்கு முன்னே,—மங்கை தன்னுடன் - எமது தலைவியாகிய உமாதேவி யுடன்,—இந்த வெற்பு உறை தரும் எயின வேடமாய் - இந்த மலையின்கண் வசிக்கின்ற வேடவேடமாக வந்து,—சுந்தர மரகதச் சோதி வீரனே - அழகு பொருந்திய பச்சை ஒளி வீசும் வீரனே,—அந்த வல்லசுரனை அம்பில் வீழ்த்தினேன் - அந்த வலிய அரக்கனை அம்பினால் எய்து வீழ்த்தினேன். எ - று.

௧௨௭. இ - ள். நின் உடன் அமர் செய்து - உன்னோடு போரைச் செய்து,—நின் வில் நாண் அறுத்து - உன்னுடைய வில்லின் நாணை அறுத்து,—அக்கொடு வில்லினால் அடியும் உண்ட னன் - அந்த கொடிய வில்லினால் அடியும் பட்டேன்,—உன் அரும் மல்லினால் உதையும் உண்டனன் - உனது அருமையாகச் செய்யப் பட்ட மல்போரிலே உன்னால் உதைக்கவும் பட்டேன்,—என் இனி உன் கருத்து என்று கூறினான் - அவை எல்லாம் நிற்க உன்னு டைய மன எண்ணம் இன்னதென்று இனிக் கூறுவாய் என்று வினவினார். எ - று.

௧௨௮. இ - ள். தவத்தின்மேல் நின்றான் - தவத்தைச் செய்து கொண்டு நின்றவனாகிய,—அந்த வில் விசையனும் - அந்த வில்லிற்கு வீரனாகிய அருச்சுனனும்,—அரன் பதம் பணிந்து - அங்கு நின்ற சிவபிரானது பாதத்தை வணங்கி,—எந்தை - எமது பிதாவே,— பாரத அமர்க்கு இசைந்த - பாரத யுத்தத்தைச் செய்வதற்கு மனம் கொண்டவர்களாகிய,—வீரர் மெய் சிந்த - அந்த வீரர்களது தேக மானது அழியும்படி,—நின் பேர் பெறு தெய்வ வாளியை - தேவரீரது பெயரைக் கொண்டதாகிய தெய்வத்தன்மை பொருந் திய பாசுபதாஸ்திரத்தை,—தந்தருள் என்றனன் - தந்தருள்வீராக என்று பிரார்த்தித்து நின்றான். எ - று.

௧௨௯. இ - ள். ஐயனும் அம்மையோடு அருள் புரிந்து - ஜகத் பிதாவாகிய சிவபெருமானும் உலக மாதாவாகிய உமை அம்மையாரும் அருச்சுனன்மேல் மிகுந்த அருளைச் செய்து,— பின் வெய்யபொன் தூணியும் வில்லும் மந்திரமும் துய்ய பாசுபத மெய்த் தொடையும் முட்டியும் - பின்னர் விரும்பத்தக்க அழகிய அம்பறாத் தூணியையும் வில்லையும் அதனை உபயோகிக்கின்ற

மந்திரத்தையும் பரிசுத்தமான மெய்ம்மை பொருந்திய பாசுபதாஸ்திரத்தையும் அதனைப் பிடிக்கின்ற முறைமையும்,—ஒய்யென நிலையுடன் உதவினான் - விரைவாக என்றும் அவனிடத்து நிலைபெற்று இருக்கும்படியாகக் கொடுத்து அருளினான். எ - று.

அரோ - அசை.

கஉ0. இ - ள். விசையனும் பெற்றனன் - அருச்சுனனும் பாசுபதாஸ்திரம் முதலிய போர்க் கருவிகளைப் பெற்றுக்கொண்டான்,—பேயும் பூதமும் - பேய்களும் பூதங்களும்,—சுற்றிய கணங்களும் - தம்மைச் சுற்றி நின்ற கணத்தலைவர்களும்,—சுருதி ஓதையும் - வேத ஒலியும்,—வெற்றிகொள் பெற்றமும் - வெற்றி பொருந்திய இடபமும்,—விழைந்து சூழ - விரும்பிச் சூழ்ந்து வர,—கற்றையஞ் சடையவன் கயிலை எய்தினான் - தொகுதியாக முடித்த சடையையுடைய சிவபெருமான் கயிலைக்குச் சென்றருளினார். எ - று.

ஏ, அம், அசைகள்.

